அகத்தியர் திருவாய்மலர்ந்தருளிய
பள்ளு முற்றிற்று

**காலம்**

இல்லை

**குறிப்பு :**

இது, தமிழ் சிற்றிலக்கிய வகையைச் சேர்ந்த பள்ளு போலப் பாடப்பட்டதாகும். த்துவ ரூபமாகவும் அமைந்தது. நல்ல மருந்து வகைகள் கூறப்பட்டுள்ளன.

★ ★ ★

வரிசை எண் : 2199 சுவடி எண் : 1167-e

## வைத்தியத் திரட்டு

ஏடுகள் : 12 (152-163) கி. எண்ணிக்கை : 200 அளவு : 20 × 3½ செ.மீ.
பக்கத்திற்கு : 6—8 வரிகள் ஆசிரியர் : பலர் பொருள் : மருத்துவம்
நிலைமை : பழுது. முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

**தொடக்கம் :**

உருக்கு செந்தூரம் முறை

உருக்கு அறைபொடி பலம்—1,
பசுவின் புளிச்ச மோரில் 90 நாழிகை ஊறவைத்து
கழுவிக் காயவைத்து பத்து விராகன் எடை
நிறுத்துக் கொண்டு, ரசம் 2 விராகனெடை
கெந்தகம் விராகனெடை 2½ கலுவத்தில் விட்டு

**முடிவு :**

பசுவின் நெய் பலம் 2½ அரைத்து (நா)லு
விரக்கடை அகலம், ஒருசான் நீளம்
துணியில் பூசி திரியாகச் செய்து மூணுநாள்
ஆறு வேளை போடவும். புளிதள்ளுபடி
சங்கன்யெலை உப்பு வருக்கவேண்டியது.
ஏழாம்நாள் நெய் சேர்த்து முழுகவும்.

சகலமும் சித்தியாகும்.

காலம் :

இல்லை

குறிப்பு :

இதில், நீர் பேதிக்கு முறை, வாயுவுக்குக் குளிகை, வீரம், செந்தூரம் முறை, மேகம் கிரந்திக்கு எண்ணெய், 'சாயபு' சொல்படிக்கு முறை, மேகம் கிரந்தி புண்ணு, குஷ்டம் முதலானதுக்குத் திரிவகை முறை, காசம், இருமலுக்குச் சூரணமுறை, வெட்டை வெள்ளைக்கி எண்ணெய், மகாமேக சந்தனாதித்தயிலம், முசு முசுக்கைத் தயிலம் முதலியன உள்ளன.

—o—

வரிசை எண் : 2200 சுவடி எண் : 1168-a

## கொங்கணர் சரக்கு வைப்பு

ஏடுகள் : 4 கி. எண்ணிக்கை : 70 அளவு : 40 × 3½ செ.மீ.
பக்கத்திற்கு : 6—8 வரிகள் ஆசிரியர் : கொங்கணர் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிகப் பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்

தொடக்கம் :

ஆதியந்த மில்லாத வெளியுந் தாண்டி
அகண்டு நின்ற போகருட பாதம் போற்றி
சோதியந்த சிவமயத்தி னாயின ...
துலங்கியதோர் ரிஷிகளுட பாதம் போற்றி

முடிவு :

தெளிவான செப்பாலே பத்திரம்போல் பண்ணி
சீரான தேசியுட லத்தி போட்டு
அழிவாக பூமியிலே போட்டு பின்பு
ஆறுதிங்க ளானபின்பு யெடுத்துப் பாரே! — 16

காலம்

இல்லை

குறிப்பு ;

இது எமது சுவடி எண் 231-c/D-380 போன்றது.

இதில் சீனவைப்பு, சூடன்வைப்பு, வெங்காரம், சாரம், துருகச்சன்னம் முதலியன உள்ளன. தலைப்பு ஒடிந்துள்ளது.



வரிசை எண் : 2201 சுவடி எண் : 11. 8-b

## வைத்தியத் திரட்டு

ஏடுகள் : 22 கி. எண்ணிக்கை : 400 அளவு : 40×3¼ செ.மீ.
பக்கத்திற்கு : 6—8 வரிகள் ஆசிரியர் : பலர் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிகப் பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்

தொடக்கம் ;

பிராணாயாமம்

ஓம் பிராணாயா ஓம் பிராணரூபாயா
ஓம் பிராண சீவாயா ஓம் பிராண லிங்காயா
ஓம் பிராணப் பிரதிஷ்ட்டாயா ஓம் ஜீவாயா
ஓம் ஜீவ ரூபாயா ஓம் ஜீவ சீவாயா

முடிவு :

அயச்செம்பு பணவிடை மூணுக்கு வெள்ளி பணவிடை
ஆறு, ரெண்டும் உருகும் போது லிங்க குருவை
ஒரு பணவிடை கணவிட்டாடும் போது போடவும்

முதல் கறியிலூதவும் ரெண்டாவது ஓட்டிலே
ஊதவும் மூணாவது கரியிலூதவும் நாலாவது
தாயிகால் விராகனிடை சேர்க்கவும்
தகடுதட்டி முன்போலே புடம் போடவும்.

காலம் :

இல்லை.

குறிப்பு :

இதில் பயித்தியத்துக்கு, பித்தத்துக்கு, பீனிசத்துக்கு, சகல சுரத்துக்கும் வேதை மார்க்கப், தாம்பூரசுத்தி, கஸ்தூரி, வைப்பு, கோரோசினை வைப்பு, லேகியம், ஆவாரம்பூ லேகியம், முதலியனவும், மந்திரங்களும் உள்ளன.

★ ★ ★

வரிசை எண் : 2202 சுவடி எண் : 1169-a

## வைத்தியத் திரட்டு

ஏடுகள் : 19 கி. எண்ணிக்கை : 300 அளவு : 30×3 செ.மீ.
பக்கத்திற்கு : 4—6 வரிகள் ஆசிரியர் : பலர் பொருள் : மருத்துவம்
நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது. எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ரத்த வெள்ளை பிரமியம் மூலம்
இவைக்கு மருந்து

அடுக்கா அத்தி ஆல்ப்புங்கு
ஆகப் பட்டை முணத்துவும்
விடுக்கா நிம்மக் காயளவு
வேண்டி யரைத்து யிதின்பிறகு
கடுக்கா வொன்று பாக்குரெண்டு
கலந்து பொடியுஞ் சுண்டைக்காய்
வடித்த யெருமைத் தயிருடனே
வரகா யரைத்து விழுங்கினால்

முடிவு :

கவனமாம் பவளபஷ்பம் சேர்த்துக் கொண்டால்
கல்லடைப்பான் நீரடைப்பான் க்ஷரோகங்க ளத்து
வளமாக சயமீளை துன்மாங் கிஷங்கள்
துலையாத வியாதியெல்லாந் துலைந்து போமே.

காலம் :

இல்லை

குறிப்பு :

இதில், நாடிப் பரீட்சை, பல்லுவலிக்கு தீத்துகிறது, சொர மாத்திரை, யீளை யிருமலுக்கு, மூலக்காறம். சண்ட மாருத செந்தூரம், பச்சை வாத சன்னிக்கு வேப்பெண் ணெய் நெய், சேங்கொட்டை- வல்லாதி, ஆக்கிராணம், விரைவாதத்துக்கு முதலியன உள்ளன.



வரிசை எண் : 2203 சுவடி எண் : 1169-b

## அகத்தியர் குழம்பு

ஏடுகள் : 6 கி. எண்ணிக்கை 100 அளவு : 30 × 3 செ.மீ.
பக்கத்திற்கு : 6 வரிகள் ஆசிரியர் : அகத்தியர் பொருள் : மருத்துவம்
நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது. எழுத்து : தமிழ்

தொடக்கம் ;

பருவதந் தன்னில் வாழும்
பரமனா ரருளி னாலே

முடிவு :

கண்டீர் பித்த மயக்கமுடன்
நேராய்த் துருசு துத்தமுடன்
நீண்ட குழம்பில் பணவிடை தான்
நேராய்க் கொள்ள வல்லீராய்
+ + + + + + + + +
மிதமாய் திருங் கண்டீரே ! 26

காலம் :

இல்லை

குறிப்பு :

இது எமது சுவடி எண் 159b / D. 253, எண் 745-e/D1470 போன்றது

★ ★ ★

வரிசை எண் : 2204 சுவடி எண் : 1169-c

## சித்திரவல்லாதி

ஏடுகள் : 2 கி. எண்ணிக்கை 40 அளவு : 30×3 செ மீ.
பக்கத்திற்கு : 6 வரிகள் ஆசிரியர் : அகத்தியர் பொருள் : மருத்துவம்
நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

**தொடக்கம் :**

அத்திமுக னைத்துதித்து—நல்ல
அன்பான வல்லாதி இன்பமாய்ச் சொல்வேன்
சித்திரமூல வெள்ளருகு—நல்ல
சிவனார் வேம்புடன் சங்கவேர் குப்பி.

**முடிவு :**

சித்திர ஆமணக் கெண்ணே—நல்ல
சீரான போது முழுகுவா யெண்ணே
புத்தியா வல்லாதி தன்னை—நல்ல
போதர வாகவே சீஷருக் குபதேச மாக
செப்பினார் தானே.

தானா நனா தந்தன தனானா

குரு முன்னிற்கவும்

**காலம் :**

இல்லை

**குறிப்பு ;**

இது நொண்டிச் சிந்து சந்தத்தில் அமைந்துள்ளது மிக எளிமையான மருத்துவத்தை உணர்த்துகிறது.

—oo—

வரிசைஎண் : 2205

சுவடி எண் : 1169-d

# அகத்தியர் வைத்தியம்

ஏடுகள் : 29. கி. எண்ணிக்கை 400. அளவு : 30 × 3 செ.மீ.
பக்கத்திற்கு ; 4 — 7 வரிகள் ஆசிரியர் : அகத்தியர் பொருள் : மருத்துவம்
நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது. எழுத்து : தமிழ்.

**தொடக்கம் :**

தாளிச பத்திரிச் சூரணம்

கனமிளகு திரிகடுகு திரிபாலே சீரகங் ,
கதிர்வால் மிளகு சோம்பு
கரியசீ ரகமதிரங் கூகைநீ ரக்கிராக்
காரம் லவங்கப் பத்திரி
தனதுசேர் நாகப்பூ மரமஞ்சள் கோஷ்டம்
பூசார்ந்த நன்னாரி வேரும்

**முடிவு :**

பின்னுமொருதரம் பாலாலாட்டி புடம் போடவும்
பற்பமாகும் பற்பம் பணவிடை பசுவெண்ணையில்
வைத்துக் குடுக்க வெள்ளை, நீரடைப்பு, கடுப்பு
பிரமி தீரும். பத்தியம் நெய், வெள்ளாட்டுக்கரி
சாப்பிடவும். புளிப்பு தவிர்க்கவும்

ரு புன்னிற்கவும்

**காலம்**

இல்லை

**குறிப்பு :**

இதில், அகத்தியர் சூதக் பற்பம், தைலம், மகர் கண்டங்கத்திரி லேகியம், திப்பிலி ரசாயனம், சுண்டி, லேகியம், கூழ்பாண்டலேகியம், பொன்னாங்கண்ணித் தைலம், வில் வாதிலேகியம், நிலவாகைச் சூரணம், வீரபத்திர கலிக்க மாத்திரை, எட்டிக் கொட்டை உல்லாதி, வீரவல்லாதி, வீரமெழுகு அட்டவணை முதலியன உள்ளன.

★ ★ ★

வரிசை எண் : 2206 சுவடி எண் : 170.

# வைத்தியத் திரட்டு

ஏடுகள் : 94 கி. எண்ணிக்கை : 1500 அளவு : 25×3 செ.மீ
பக்கத்திற்கு : 5—7 வரிகள் ஆசிரியர் : அகத்தியர் முதலான பலர் பொருள் : மருத்துவம். நிலைமை : பழுது. முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்

தொடக்கம் :

நீர்ப்பீனிசம் ரெத்தப்பீனிசம்
சீழுப்பீனிசம் ஒருத்தலைவலி
மண்டை நூலைச்கு எண்ணெய்

நல்லெண்ணெய் படி — 1
பசுவின் பால் படி — 1
கோரக்கர் மூலிச் சாறு
கருஞ்செம்பைச் சாறு

முடிவு :

இருப்புச் சட்டியில் வறுத்துக் கொண்டு
பிறகுஆடா தோடைச்சாறு வாங்கி அரைத்து
5 விராட்டியில் புடம் 5 போடவும்

பத்தியம் இச்சாபத்தியம்

இதுக்கு தீரும் வியாதி:

உள்மூலம், வெட்டைச் சூட்டினால் கண்ட வியாதி தீரும் ஆறு பாம் நெய். நாகப் பட்டை விஷயம்.

காலம் :

இல்லை

குறிப்பு

இதில், மிருதார் சிங்கி பற்பம், ரெத்த கிரிசத்துக்கு, பட்ச வாயுவுக்கு, பாரிச வாயுவுக்கு, தாளக பற்பம் மோகினி உச்சாடினம், மேக வெள்ளைக்கு, மண்டைக் கரப்பான் காரீய பற்பம், அகத்தியர் குழம்பு (செய்யுள் நூலில் இல்லை), மெழுகு, கும்மட்டிக்காய் மெழுகு,

அண்ட வாதம், விரைவாதத்துக்கு, இஞ்சி லேகியம், லிங்கக் குழம்பு, அய்யனார் தியானம், வசியம், உச்சாடினம், பாம்பு தீண்டினால், பாவாடை வீரன் மந்திரம், முதலியனவும் சக்கரங்களும் உள்ளன.

★ ★ ★

வரிசை எண் : 2207 சுவடி எண் : 1171-a

## இராமதேவர் சூத்திரம் — 215

ஏடுகள் : 41 கி. எண்ணிக்கை : 1000 அளவு : 28×3 செ.மீ.
பக்கத்திற்கு : 6—7 வரிகள் ஆசிரியர் : இராமதேவர் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்

**தொடக்கம் :**

ஆதியந்த மெய்நிறை சோதி பாத
மகண்டபரி பூரணத்தி .........கூடிப்
பாதியா முப்பொருளு மூன்று மொன்றாய்
பரை......யாய் நின்றபரா பரையின் பாதம்

**முடிவு :**

ஆதியாம் லவணமென்ற திராவ கத்தை
அரையிரேன் நன்றாக அறிந்து கேளு
......ய வெ.........யுப்புப் பலந்தான் பத்து
நிலவரமாங் கல்லுப்பு பலந்தான் பத்து
பாதியா...... ............ ........ ................... — 119

**காலம் :**

இல்லை

குறிப்பு

இதன் முதல் ஏட்டின் தலைப்பு இல்லாததால், ''வைத்தியத்திரட்டு'' எனப் பதிவேட்டில் பதிவாகியுள்ளது. இதன் ஒரு செய்யுள் கொண்டு இச்சுவடியின் பெயர் கண்டு பிடிக்கப்பட்டது,

இது, எமது சுவடி எண் 324-e/D 640, எண் 691-e/D 1356 போன்றது,

★ ★ ★

வரிசை எண் : 2208 சுவடி எண்: 1171-b

## சுந்தரானந்தர் அதிசயம்—36

ஏடுகள் : 5. கி. எண்ணிக்கை : 100 அளவு : 28×3 செ.மீ.
பக்கத்திற்கு : 6—7 வரிகள் ஆசிரியர் : சுந்தரானந்தர் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது. முழுமை : முற்றற்றது. எழுத்து: தமிழ்

**தொடக்கம் :**

சீரான உமைதேவி பதத்தைப் போற்றி
 ........................ வியோர் மெய்க்க
பேரான அதிசெய நூல் முப்ப ..................
 பிரியமுடன் பாடுதற்குக் குருவைப் போற்றி

**முடிவு :**

அழைத்தருகில் உரு செவிப்பாய் அய்யா ணி.........
 யெ.........டு.........மாட்டா.........பயா
கானான தொழிலிதுதான் சம...... .........
 சங்கை.........லி கூட்டில்...................

**காலம் ;**

இல்லை

**குறிப்பு :**

இதில், தலைப்பு இல்லை, இது எமது சுவடி எண் 226-i/D 365 போன்றது.



வரிசை எண் : 2.09 சுவடி எண் : 1172-a

## வைத்தியத் திரட்டு

ஏடுகள் : 10(252—261) கி. எண்ணிக்கை: 200 அளவு : $22\frac{1}{2}\times2\frac{1}{2}$ செ. மீ.
பக்கத்திற்கு : 5—6 வரிகள் ஆசிரியர்: பலர் பொருள்: மருத்துவம்
நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்

தொடக்கம்

பூவரசங்கா யெண்ணெய்

பூவரசங்காய்ச் சாறு படி—4, சங்கங்குப்பிச்சாறு
களச்சிக் காய்ச் சாறு, விருவங் கிழங்குச் சாறு
சூடுதுரத்திச்சாறு, கோடைக் கிழங்குச்சாறு
வாத மடக்கிச் சாறு

முடிவு :

தாளகத்தைச் சாணாக்கைச் சாத்தில் வைத்து
அதை கொட்டாச்சியால் மூடி கொட்டாச்சியைச்
சுத்தி சாணியால் கவுசங் கட்டி அடுப்பி லேத்தி
தீபம்போ லெரிக்கவும். சாமம். பற்பமாகும்.

காலம் :

இல்லை

குறிப்பு :

இதில், நீர் ரெத்தமாய் யிரங்குகின்ற வெள்ளைக்கு, காலன் பிடிக்கும் நாடி, பயித்தியங்காணுதல், பீனிசம் எனப்பட்டதுக் கெல்லாம், நசியம், குழிப்புண்ணுக்குத் துவ ரெண்ணெய், மேகவெட்டை காண்கிறதற்கும், கால் பிடிப்புக்கும் எண்ணெய் முதலியன உள்ளன.

★ ★ ★

வரிசை எண் : 2210 சுவடி எண் : 1172-b

## (அகத்தியர்) வண்ணம்

ஏடுகள் : 6(262—267) கி. எண்ணிக்கை : 100 அளவு : $22\frac{1}{2} \times 2\frac{1}{2}$ செ. மீ.
பக்கத்திற்கு ; 6 வரிகள் ஆசிரியர் : அகத்தியர் பொருள் : மருத்துவம்
நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்

குறிப்பு :

இது எமது சுவடி எண் 320-d/D.601 போன்றது.

வரிசை எண் : 2211

சுவடி எண் : 1172-c

# வைத்தியத் திரட்டு

ஏடுகள் : 25 (268—291+1) கி.எண்ணிக்கை : 500 அளவு : $22\frac{1}{2} \times 2\frac{1}{2}$ செ. மீ.
பக்கத்திற்கு : 6—7 வரிகள் ஆசிரியர் ; பலர் பொருள் : மருத்துவம்
நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்

**தொடக்கம் :**

**ரசப் பதங்கம்**

வாலை ரசம் பலம்—1, நெல்லிக்காய் கந்தகம் பலம்—1
பொடி செய்து வைத்துக் கொண்டு, சோத்துப்பு
படி—1-ம் செங்கல் பொடியும் இவை ரெண்டையும்
உரலிலிட்டு இடித்து புதுச் சட்டிக்குளிட்டு

**முடிவு**

பத்தியம் உப்பு, புளி, புகையிலையுந் தள்ளியும்
சாப்பிடவும். தீரும் வியாதி:- கிரந்தி, சொறி
சிரங்கு, ஊறல், மேகச் சூடு, வாய்வு, கரப்பான்,
இவை யெல்லாந் தீரும். வெந்நீர் சாதமும்
சாப்பிடவும்.

**காலம் :**

இல்லை

**குறிப்பு :**

இதில், அஷ்ட வாயுவுக்கு எண்ணெய், பீனிசம் எழுக்கும், நசியம், கருமேக ஊரலுக்கு இடிவல்லாதி, கெற்பந்தரிக்க வெள்ளைக்குச் சூரணம், காது மந்தத்துக்கு சிரசில் தேய்க்கத் தயிலம், பல் வலிக்குத் தயிலம், விஷங்களுக்குக் குழம்பு, கபால சூலைக்கு, வாந்தி பேதிக்குச் சூரணம், சன்னி சூதக வாயுவுக்கு, வாத சுரத்துக்குக் கஷாயம் முதலியன உள்ளன.

வரிசை எண் : 2212 சுவடி எண் 1173.

## வைத்தியத் திரட்டு ரண சாத்திரம்

ஏடுகள் : 31 கி. எண்ணிக்கை 600 அளவு : 21×3 செ.மீ பக்கத்திற்கு 6—8 வரிகள் ஆசிரியர் : அகத்தியர் ? பொருள் : மருத்துவம் நிலைமை : பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

### இடி மருந்து

அசிதராம், ாந்தம், எள்ளு, எட்டிவெரை.
சேங்கொட்டை, சித்திரமூலம், வடி மருந்து, ரசம்,
கெந்தி, மஞ்சள், ஓமம், மாசிக்காய், சாதிக்காய்
வசம்பு, ஈருள்ளி,

முடிவு :

### இருமலுக்கு மருந்து

பூந்தி மரத்துப் பட்டை, அரைத்து ஒரு துட்டளவு
பில்லை தட்டி விளக்கெண்ணையில் அடைசுட்டு
பத்துநாள் சாப்பிடவும், அந்தி, சந்தி ரெண்டு
வேளை, இருமல் தீரும்.

காலம் :

இல்லை. கடைசி ஏட்டின் முன் ஏட்டில், "அரியாவூர், முத்துக் கருப்பன் "ரணசாத்திரம்". இதை எழுதினது மலைக்கொழுந்தாபிள்ளை
வால தெண்டாயுதபாணி துணையாகவும்
வேலும் மயிலும் துணையாக வேண்டியது" என்றுளது.

குறிப்பு :

இதில், நாக செந்தூரம், தாம்பிரபற்பம் கெந்தக பற்பம், அஷ்டசூரணம், தாது புஷ்டிக்கு, பூரணாதி லேகியம், கெந்தகச் சூரணம், வில்வாதி, மகா வில்வாதி, பெரும் பாட்டுக்கு, லோக செந்தூரம் அயதாம்புர வெண்ணெய், முதலியன உள்ளன.

★ ★ ★

வரிசை எண் : 2213 சுவடி எண் : 117

## தெட்சிணாமூர்த்தி-300

ஏடுகள் : 28 (57—84) கி. எண்ணிக்கை : 600 அளவு : 23½×3 செ.மீ. பக்கத்திற்கு ; 7—8 வரிகள் ஆசிரியர் : தெட்சிணாமூர்த்தி பொருள் : மருத்துவம் நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்

தொடக்கம் :

பாவங் கொண்டெனவே உதித்த வாறே ! — 192

உதித்ததொரு கர்மந்தான் தீர வென்றா
லுத்தகொடி மரமொன்று வுயிர்க்குடந் தானொன்று
பதித்த தங்கக் கிரீடமொன்று குடைதா னொன்று
பத்தடுக்குத் தூபமொன்று காவடிதா னொன்று

முடிவு :

வரிசையாய்ச் சொல்லுகிறேன் கணைக ளேது
மாந்தமொடு சுளிதுரப்பு வலிக ளேது
பரிசினமாங் கரப்பனொடு பறங்கி யேது
பட்சியொடு பறவையுட தோச மேது
தெரிசினயாங் கனங்களிலே வருவ தேது
தீர்க்கமடா சிறுவருக்குத் தேவா அமுற்தங்
கரிசனமா மின்னூல் கற்ம தர்மம்
கட்டான மருந்துவகை கணக்கு முற்றே ! — 302
தட்சணாமூர்த்தி முன்னூறு

முற்றும்

காலம் ;

ஏவிளம்பி வருடம், தை மாதம் 15-ம் தேதி குருந்த மடத்திலிருக்கும் முத்துச்சாமி ராசு வாத்தியார் ஏடு. எடுத்தவன் குடுக்கவும். குடாதே போனால் காராம் பசுவைக் கொன்ற பாவத்திலே போவான். எடுத்து எழுதினாலும் வாங்கி எழுதினாலும் கொண்டு வந்து குடுக்கவும். குடுக்காதே போனால் கெங்கைக் கரையில் ஏழு பிராமணரைக் கொன்ற பாவத்திலே போவானாகவும்

குறிப்பு :

குருவே துணை

இதில், ஆனந்த வாய்வுக்கு, சகல ரோகம் வரலாறு, பஞ்ச லோக செந்தூரம், லேகிய செந்தூரம், மூலத்துக்கு நெய், சயத்துக்குக் குமரி லேகியம், நூல் பெருமை, நவரெத்தின செந்தூரம், குட்டம் குறை நோவுக்கு, உப்புப் பற்பம், நவலோக நவரெத்தின செந்தூரம், சூலை பரங்கிக்குப் புகை முதலியன உள்ளன.

இதன்பின், சூட்டுக்கு மருந்து, மேகத்துக்குக் கிஷாயம் எழுதிய ஏடு ஒன்றுளது.

வரிசை எண் : 2214 சுவடி எண் : 1175

## வைத்தியத் திரட்டு

ஏடுகள் : 9 கி. எண்ணிக்கை : 150 அளவு : $23 \times 2\frac{1}{2}$ செ.மீ.
பக்கத்திற்கு : 6—7 வரிகள் ஆசிரியர் : பலர் பொருள் : மருத்துவம்
நிலைமை ; பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்

**தொடக்கம் :**

### சவ்வாது லேகியம்

நன்னாரி முத்தமொடு நல்லிலுப் பைப்பூவு
தன்னா லழகு சந்தனமும்—வருணமுள்ள
ஆவாரையி லஞ்சுவகை ஆனமருந் தொன்பதுவுந்
தாவியது களஞ்சி மிஞ்சாமல்—பூமியிலே

**முடிவு :**

மருந்துட வீரறிந்து வைக்கவும்
நெய் சாதஞ் சாப்பிடலாம்
பசுவெண்ணெய் பால் சாப்பிடலாம்
வாய்வு பதார்த்தம் தள்ளியும்
கோழி, மீன், கருவாடு தள்ளவும்
குடி வென்னீர்.

**காலம்**

இல்லை

**குறிப்பு**

இதில், ரெத்தப்பிரமியத்துக்கு, நித்தியசுரம், கண் மந்தாரத்துக்கு மாத்திரை, பவழ பற்பம், தாகசுரத்துக்கும் வெட்டைக்கும் கிஷாயமும், பற்பமும், லிங்கக் கட்டு சகல மேகத்துக்கும் எண்ணெய், கல்நார் பற்பம், பல்வலிக்கு, முதலானவை உள்ளன.

---

வரிசை எண் : 2215 சுவடி எண் ; 1176.

## வைத்தியத் திரட்டு

ஏடுகள் : 6(6-11) கி.எண்ணிக்கை : 50 அளவு : $22 \times 3$ செ.மீ. பக்கத்திற்கு : 4—6 வரிகள் ஆசிரியர் : பலர், பொருள் : மருத்துவம் : நிலைமை : நல்லநிலை முழுமை : முற்றுமுளது. எழுத்து : தமிழ்.

தொடக்கம்:

மூலத்துக்குச் சூரணம்

தனக்குறு ரத்தமூலம் தாங்குறு சீமூலம்
மனக்குறு வாதபித்தம் வளருமே மூலத்தோடும்
சினக்குறு முழையாமூலம் சீமதக் குமுதமெல்லாம்
கணக்குரு மருந்துசொல்லக் கன்னியே கேட்டிடாயே! — 1

முடிவு :

சீனி பலம் 2 போட்டுத் துளாவிவிட்டு முன் மருந்து
தூளெல்லாம் கொட்டி லேகிய பதம் பார்த்து எடுத்துக்
கொண்டு அந்தி சந்தி இருநேரமும் பருங்கொட்டைப்
பாக்களவும், வெள்ளை வீழ்தலும், நீரழிவு, நீர்ச் சுருக்கு
மேகமுதலிய தெல்லாந் தீரும். இச்சா பத்தியம்

வேலு மயிலுந் துணையுண்டாகவும்

காலம் :

இல்லை

குறிப்பு

இதில், குன்மத்துக்கு, கஸ்தூரி மாத்திரை, சன்னி-13க்கும், காமாலைதீரப் பொடிப் யேலாதிக் கடுகு. முதலியன உள்ளன,

* * *

வரிசை எண்: 2216

சுவடி எண்: 1177

## வைத்திய நிகண்டு

| | | |
|---|---|---|
| ஏடுகள் : 4 | கி. எண்ணிக்கை : 60 | அளவு : 22½ × 2½ செ.மீ. |
| பக்கத்திற்கு : 6 வரிகள் | ஆசிரியர் : அறியக்கூடவில்லை | பொருள் : மருத்துவம் |
| நிலைமை : நல்ல நிலை | முழுமை : முற்றறற்றது | எழுத்து : தமிழ் |

தொடக்கம் :

மானே கும்மியடியுங்கடி — மட
மானே கும்மியடியுங்கடி.
தேனே கும்மியடியுங்கடி — மனந்திரேகந்
தெளிந்து கும்மியடியுங்கடி.

சுக்கு திப்பிலி செறுதேக்கு
பேய்ப்புடல் தூதுவிளையும் சித்திரமூலம்
சேர்க்க நறுக்கிக் கிசாயமிடச் சுரம்
ஓடியே போமடி ஞானப்பெண்ணே.

முடிவு :

அரைத்த விரையே அந்தி காலமே தின்றாக்கால்
தேனிலேதான் தொகுத் தெடுத்த
ரத்த காசங்கள் திரியாதே போமடி
ஞானப் பெண்ணே ! 33

காலம்

இல்லை

குறிப்பு :

இதில், மருந்து செய்முறைகள் பாடலாக உள்ளன. மருந்து செய்முறையும் தீரும் நோய்களும் இதில் கூறப்பட்டுள்ளன.

தமிழ் சிற்றிலக்கியங்களில் ஒன்றான கும்மி சந்தத்தில் பாடப்பட்டுள்ளது. ஞானக் கும்மி போலே இயற்றப்பட்டுள்ளது.

★ ★ ★

வரிசை எண் : 2217 சுவடி எண் : 1178-a

## அகத்தியர் பாடல்

ஏடுகள் : 31 கி. எண்ணிக்கை : 500 அளவு : 21 × 3 செ.மீ:
பக்கத்திற்கு : 6—7 வரிகள் ஆசிரியர் : அகத்தியர் பொருள் : மருத்துவம்
நிலைமை : பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்

தொடக்கம் :

ஆதியா மனோன்மணியைத் தொழுது போற்றி
அன்பாக பூமிதனி லவத ரித்தோர்
நீதியில்லா மானிடர்கள் செய்த கற்மம்
ரிணங்களுக்கு சாந்திசெய்து பின்ப வர்க்கு

ஓதியதோர் வாகடங்கள் முழுதும் பார்த்து
உரைக்கிறேன் பிளாஸ்த்திரி நூறுக் கேதான்
பாதிமதி தனையணிந்த சிவன்மால் வேதன்
பரையீன்ற வாரணத்தோன் பாதங் காப்பாம்.

முடிவு :

உய்த்தமே தினகந்தோர் கொடா யானால்
ஓடுகிற னோயையினிப் பூத்துக் கேழ்க்கும்
மெய்த்ததோர் மேகங்கள் ரெண்டு பத்து
மேலான கிரந்தியரை யாப்புக் குஷ்டம்
வைத்ததொரு அஷ்த்திசொரம் அஸ்த்தி வெட்டை
கரப்பனொடு சிரங்கு சொறி சிரங்கு
மேகமெல்லாம் போகும்

வேலு மயிலும் துணை

குருபாதந் துணை

முற்றிற்று.

காலம் :

இல்லை

குறிப்பு :

— இது 'வைத்தியத்திரட்டு' போல் இருக்கிறது. இதில் பிளாஸ்த்திரி, சதைமுள்ளி ஆறாத புண்ணுக்கு, அளிகிரந்தி, துத்த பிளாஸ்த்திரி, கஞ்சநிமிளை, பிளாஸ்த்திரி, குக்கில் பிளாஸ்த்திரி, நிமிளைத்துருசு பிளஸ்த்திரி, பச்சை பிளாஸ்த்திரி, காரகில், சூத காரசீலை, உள்ளுக்கு சாப்பிட எண்ணெய் முதலியன உள்ளன.

குறிப்பாக பிளாஸ்த்திரி வகைகளும், தீரும் வியாதிகளும் கூறப்பட்டுள்ளன.

★ ★ ★

வரிசை எண் : 2218

சுவடி எண் : 1178- り

## புலிப்பாணி கைவல்லாதி

ஏடுகள் : 9 கி. எண்ணிக்கை 150 அளவு : 21×3 செ.மீ.
பக்கத்திற்கு : 6—7 வரிகள் ஆசிரியர் : புலிப்பாணி பொருள் : மருத்துவம்
நிலைமை : பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

**தொடக்கம் :**

ரசம் கெந்தகம் ரசகர்பூரம் அரிதாரம்
காந்தம், துருசு, துத்தம் மிருதார்சிங்கி சுக்கு
ஓமம் மஞ்சள் திப்பிலி அறத்தை கோஷ்டம்
வாலுளுவை சோம்பு யேலம்

**முடிவு :**

## வெள்ளை குங்கிலியக் குழம்பு

வெள்ளைக் குங்கிலியம் பலம்-1 ரசம் விராகனெடை—1
துரிசு விராகனெடை — 1 துத்தம் விராகனெடை—1
சூடம் விராகனெடை — 1 ரசகற்பூரம் விராகனெடை — 1

**காலம் :**

இல்லை

**குறிப்பு :**

இதில், தாம்புர மெழுகு, இடிவல்லாதி, பேதி மாத்திரை, குழம்பு, பேதிக்குழம்பு' வெள்ளைக்கும் கட்டி புண்ணுக்கும் பேதியெண்ணெய் முதலியன உள்ளன.



வரிசை எண் : 2219 சுவடி எண் :1178

## புலிப்பாணி பலதிரட்டு—100

ஏடுகள் : 46(62—107) கி. எண்ணிக்கை : 800 அளவு : 21×3 செ. மீ.
பக்கத்திற்கு ; 6-7 வரிகள் ஆசிரியர் : புலிப்பாணி பொருள் ; மருத்துவம்
நிலைமை : பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்

**தொடக்கம்**

வேதாந்த நாயகியே விமலி வேணி
வீரமா காளியம்மாள் ருத்ர ருபி
நாதாந்தத் துட்பொருளே அகோர வீரி
நாரணியே (காரணியே) தேவி சக்தி

முத்தாந்த சித்தருட பரையே துற்கை
    மூவருக்கும் முதல்ப்பொருளே ஆனந் தாயி
மாசுரந்தம் தனையீன்ற செகத வல்லி
    மாமுகத்தோன் பலதிரட்டு காப்புத் தானே ! 1

முடிவு :

அழுந்துவார் சாஷ்த்திரத்தை நிசமென் றெண்ண
    அடவான பெரியோரை வணங்கிக் காரு
நழுந்துவார் பொய்யொன்றும் சொல்லொண் ணாது
    நாதனுக்கு ஆளாக வேணு மென்றால்
கொழுந்துபோல் தீபத்தை நோக்கிப் பாரு
    கோபமொன்றும் மாகாது குணமே வேணும்
செழுந்திருக்கும் போகருட கடாட்சத் தாலே
    சேர்ந்திருக்கும் புலிப்பாணி பலதிரட்டு முற்றே ! 100

வேலு மயிலும். முற்றிற்று

குருவே துணை

ஆகப் பாட்டு சரியாக நூறு
அதுக்குப் பிசகில்லை

முற்றிற்று

காலம் :

இல்லை

குறிப்பு :

இதில், ரசக்கட்டு, உருவு மாத்த மை, அஞ்சனம், மாரணம், பேதனம், வித்துவேசனம், பில்லி சூனியம், பறவை அஞ்சனம், குறிசொல்ல, லவண்டைக் கட்டை வித்தை, சாக்குப் பொடி, விந்துகட்டு, ஸ்திரிவசியம், கற்பம் முதலியன உள்ளன பாடல் எண்கள் சரியில்லை, 100 என்ற எண்ணுள்ள ஏடு முறிந்துள்ளது.

இது எமது சுவடி எண் 196a ; D. 313, போன்றது. பிழைகள் மலிவு

வரிசை எண் : 2220 சுவடி எண் : 1178-d

# வைத்தியத் திரட்டு

ஏடுகள் : எண்ணிக்கை ; 8 கி.எண்ணிக்கை : 100 அளவு : 21 × 3 செ.மீ.
பக்கத்திற்கு : 6—8 வரிகள் ஆசிரியர் ; பலர் பொருள் : மருத்துவம்
நிலைமை : பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்

**தொடக்கம் :**

தாளக பற்பம்

செங்கிப்பட்டியைச் சேர்ந்த விளங்குடிக் குருக்கள்

சொன்ன வாக்கியம்

தாளகம் பலம்—1 சிறியா நங்கைச் சாறுவிட்டு
நாலு நாழி அரைக்கும் தனிலும் ஷ சாறு
குறையாமல் விட்டு வில்லை தட்டிக்
காயவைத்து ஓட்டில்

**முடிவு :**

காலையில் எண்ணெயும், அந்தியில் மிளகு திரேக கூறறிந்து
குடுக்கவும், எண்ணெய் துட்டே, மெழுகு களச்சி
வீதம் வாதத்தைப் பத்திய சூடும், பித்தத்திலெழுந்த
சூடு, அய்யத்தி லெழுந்த சூடுக ளெல்லாம் போகும்.

குருவே துணை

முற்றிற்று

**காலம் :**

இல்லை.

**குறிப்பு :**

இதில், பரஷாணக்கட்டு, கருவங்கச் சுண்ணம், ரசமுறிவுக்கு பாசாணம், சண்டிக் கட்டு, தேளுக்கு மருத்து, சருகுக்கிஷாயம், மேகங்களுக்கு எண்ணெய் கைபர்கம் முதலியன உள்ளன.

★ ★ ★

வரிசை எண் : 2221 சுவடி எண் : 1179-a

# அகத்தியர் வல்லாதி — 600

ஏடுகள் : 11+1 கி. எண்ணிக்கை : 150 அளவு : 30×3 செ.மீ
பக்கத்திற்கு : 5—6 வரிகள் ஆசிரியர் : அகத்தியர் பொருள் : மருத்துவம்
நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றற்றது. எழுத்து : தமிழ்,

**தொடக்கம் :**

ஆதியென் றனாதியுட பாதம் போற்றி
அரசனுடைய மெஞ்ஞானக் குருவைப் போற்றி
சோதியென்ற பராபரத்தின் பாதம் போற்றி
துரியவெளி தன்னில்நின்ற சுந்தரியே போற்றி
வாதியென்ற பெரியோர்கள் பாதம் போற்றி
வைத்தியந்தா னறுநூறும் வளமாய்ச் சொல்வேன்
பாதிமதி ரவிபுவியில் மனுடர்க் கெல்லாம்
பகரறியாத் தொழிலை யெல்லாம் பாடுகு றேனே !

**முடிவு :**

போகுமே அரையாப்பு மேக வாய்வு
புத்துடனே கரப்பான் புண்கள் பிளவை யேது
யேகுமே பவுத்திரங்கள் விதன மெல்லாம்
யெழுதிநன் றாய்நூறும் சுறுக்கு மெத்த
ஆகுமே பத்தியங்க ளில்லை யில்லை
ஆகாத வஸ்துவெல்லா மறுக வேணும்
நாகமே தரித்தபிரா னுமைக்கும் சொன்னார்
நல்லயினிப் பானதென்றும் நாட்டொண் ணாதே ! 36

**காலம் :**

இல்லை

**குறிப்பு :**

இதில், சூத வல்லாதி, சீனவல்லாதி, சேங்கொட்டை சுத்தி, அமுருத கெந்தி, வல்லாதி, நல்ல கெந்தி வல்லாதி, நீல வல்லாதி, சீனவல்லாதி, வல்லாதிச் சூரணம் ஆகியன உள்ளன.

இதன் பின்னர், தாளிச பத்திரிச் சூரணம் எழுதிய ஏடொன்று உள்ளது.



வரிசை எண் : 2222 சுவடி எண் : 1179-b

## வாலை வாகடம்

ஏடுகள் : 98(62-159+1) கி. எண்ணிக்கை : 1500 அளவு : 30 × 3 செ.மீ.
பக்கத்திற்கு : 4—6 வரிகள் ஆசிரியர் ; மகா முனி பொருள் : மருத்துவம்
நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்

தொடக்கம் :

### காப்பு வெண்பா

வாக்குண்டாம்........................தமக்கு

### செங்கிரந்திக் குணம்

### வெண்பா

செங்கிரந்தி ரோகஞ் சிகப்பாங் கருங்கிரந்தி
பொங்கு மிடர்கட்டிப் போகு(மே) —நங்கையேகேள்
பேய்போலே சீறியமும் பெருத்தபட்சி தோஷம்
வாறாய் கழியும் பச்சிவாது

(வெண்பா சரியில்லை)

முடிவு :

### விருமானந்த வயிரவன் மாத்திரை

சாதிலிங்கம் வெங்காரம் மிளகு நாவி
சரிசமமாய் எலிம்மிச்சார் தன்னாலாட்டி
யேதமறக் குண்டியிடை வுண்டை செய்து
இஞ்சியுட சாத்தினிலே யிடுவீ ராகில்
பேதமுடன் சுரமேகும் பித்தம் போகும்.
பின்னுமொரு தேள் விஷமும் பேசி யோடும்.
ஓதுவிரு மானந்த வயிரவனா மென்றே
உலகிலிதை மகா முனி யுரைசெய் தாரே ! 197, 200

குருமுன்னிற்க

காலம் :

இல்லை

குறிப்பு :

இதில், செங்கிரந்திக் குணம், தேரையின் குணம், செரியா — மாந்தம், பேர் மாந்தம், கட்டு மாந்தம், விஷமாந்தம், களி மாந்தம், மகாகணம் சூளிகணம், பெண் தோஷத்தின் குணம், விஷ மாந்தத்தின் குணம், மாந்த முழுதுக்கும், குடிநீர், வால சஞ்சீவி மாத்திரை, மலசலம் போகிறதற்கு அடை மருந்து, பிள்ளைகள் மாத்திரை முதலியன உள்ளன.

இதன் பின்னர் சண்டசெந்தூரம் எழுதிய ஏடு ஒன்றுளது.

—o—

வரிசை எண் : 2223 சுவடி எண் : 1180

## அகத்தியர் வாகட வைத்தியம் — 16

ஏடுகள் : 5 கி. எண்ணிக்கை 100 அளவு : 30 × 3 செ.மீ.
பக்கத்திற்கு : 5—6 வரிகள் ஆசிரியர் : அகத்தியர் பொருள் : மருத்துவம்
நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது. எழுத்து : தமிழ்

தொடக்கம் ;

அரிதாரம் பிரிதிவுமாய் நிற்கும்
ஆனதொரு சவ்வீர மப்பு மாகும்
பெரிதான கெவுரிதான் தேய்வு மாகும்
பின்னுமொரு வெள்ளையுந்தான் வாய்வே யாகும்

முடிவு

யேற்றிடவே சன்னி தோஷம்
யெழும்பிடுங் குஷ்ட ரோகம்
யாத்திடும் பரங்கி சூலை
பல்கடி முதலா யுள்ள
போற்றிடத் தீரு மென்றே
பொருப்பைய மிருத்திச் சொன்னார் 16

முற்றிற்று

அகஸ்தியர்

காலம் :

இல்லை

குறிப்பு :

இதில், தராளக பற்பம் முதலியன உள்ளன.

இது எமது சுவடி எண் 254-b/D 454 போன்றது.

★ ★ ★

வரிசை எண் : 2224 சுவடி எண் : 1181

## அகத்தியர் வைத்தியத் தருக்க நூல் — 16

ஏடுகள் : 6 கி. எண்ணிக்கை : 150 அளவு : 22×3 செ.மீ.
பக்கத்திற்கு : 6—7 வரிகள் ஆசிரியர் : அகத்தியர் பொருள் : மருத்துவம்
நிலைமை : பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்

தொடக்கம் :

சீர்பொருந்து சாஷ்த்திரமும் மருந்து வைப்புந்
தெய்வீக மானபொருள் வலதுஞ் சொல்லி
பேர்பொருந்தும் யெழுத்தாணி அம்மி ஓலை
இயல்வான கருவிமுதற் கூரைச் செம்பு
கூர்பொருந்துஞ் சாஷ்த்திரத்தைச் சொன்னா ரானால்
குருவாகு மவருடனே யெதிர்க்க வேண்டாம்
தார்பொருந்துஞ் சாஷ்த்திரங்கள் சொல்லா விட்டால்
சண்டாளப் பயல்களுடைய பையை வாங்கே.

முடிவு :

வாதுரைக்கும் வைத்தியரே சொல்லக் கேளு
வைத்தியர்க்குக் கண்மூன்று தலையும் மூன்று
நீதமுடன் சாரமொடு திரேக மாறு
நிலவரமாய்ப் பாதைபத்து நாலுண் டென்பார்
ஆதரவாய்க் கண்டறிந்தோன் வைத்திய னாவான்
அல்லாமற் செய்துவிட்டால் மட்டை யாவான்
தேசமெல்லாம் மனிதரையு மவனே கொல்வான்
செத்தசவம் போலவுஞ்செய் மருந்தும் பொய்யே ! — 16
அகத்தீசர் தர்க்கநூல் முற்றிற்று

குருபாதம்

**காலம் :**

1877-ம் வருஷம் ஜூன் மாதம் 29-ந் தேதிக்குத் தமிழ் ஈஸ்வர வருஷம் ஆனிமாதம் 15-ந் தேதி உத்திராடம் கூடிய சுபயோகத்தில் எழுதி முகிந்தது.

முற்றும்

காசோகிவே மிருகடிரிடபம். யா. வேயுதலாம் ?

**குறிப்பு :**

இது எமது சுவடி எண் 224/D352 அகத்தியர் வைத்திய தர்க்கம் இருபத்தைந்து போன்றது. இதில் மருந்துகள் செய்வதற்கான கல்வம், குழவி குப்பி வைப்புச்சரக்குகள் இவைகளின் தாத்பரியம், கஞ்சமுடா, பித்தளை அண்டா முதலானவைகள் கூறப்பட்டுள் ளன. பாட வேறுபாடுகள் மிக்குள்ளன. இதில் 16 என்றே உள்ளது. (கேள்வி பதில்) தர்க்க நடையாகப் பாடல்கள் உள்ளன.

—OO—

வரிசை எண் : 2225 சுவடி எண் : 1182-a

## இராமதேவர் வைத்தியம் — 51

ஏடுகள் : 20 கி. எண்ணிக்கை : 500 அளவு : 23×3 செ.மீ.
பக்கத்திற்கு : 6—7 வரிகள் ஆசிரியர் : இராமதேவர் பொருள் : மருத்துவம்
நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்

**தொடக்கம் :**

பெண்ணே கேள் சாரணைவேர் முந்தி ரீவேர்
முயலான முருங்கைவேர் வேம்பு தானும்
தன்னவே குமரிவேர் மரவள்ளிவேர் சீந்தி
சலந்திரட்டி கரிசாலை பொன்னாங் காணி
வின்னவே அமுக்குராவேர் சங்கங் குப்பி
வெள்ளிண்டு நீர்ப்பூலா விளிவி யோடு
தண்ணமாம் நிலப்பனைவேர் அத்திப் பட்டை
சிறுவிளவேர் வெள்ளருகு வல்லாரை யாமே — 1

**முடிவு :**

அலையாமல் சாடங்கள் நிவர்த்தி செய்து
அட்சரத்தை அறிந்துசடத் தூணிப் பார்க்க
கலையான தொட்டெட்டும் மொன்றிற் சேரும்
கருவறிந்து அவ்வுஞ்சவ்வு மிகுந்த வீட்டை

மலையாம லறிவுள்ளே அறிவு குன்னி
அன்னமென்ற சுழியிலே மனக்கண் ணாடி
அலையாம லிருக்கவென்றால் சொல்லக் கேளு
அடிமூலக் கண்டத்தி லகார மூணே ! — 51

குரு முன்னிற்கவும்

காலம்:

யுவ வருஷம் பங்குனி மாதம் 9-ந் தேதீ சோமாவாரம் உத்திராடத்தில்

முற்றிற்று

குறிப்பு:

இதில், லவண பற்பம், அரையாப்புக்கு, கபாடச் சூரணம், வாளகச் சூரணம், அரிதார எண்ணெய், சிரங்குக்குத் தயிலம், கெந்தக செந்தூரம், பஞ்ச பாண செந்தூரம் பூரணாதி முதலியன உள்ளன.

★ ★ ★

வரிசை எண் : 2226 சுவடி எண் : 1182-b

## வைத்தியத் திரட்டு

ஏடுகள் : 26 கி. எண்ணிக்கை : 500 அளவு : 23 × 3 செ.மீ.
பக்கத்திற்கு : 6—7 வரிகள் ஆசிரியர் : பலர் பொருள் : மருத்துவம்
நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ரச பற்பம்

ரசங் கால்ப் பலம் வாங்கிவந்து கல்வத்திலிட்டு
பணைமட்டைச் சாற்றா லாட்டி மையினம் போலே
வழித்து பச்சை பனை யோட்டில் வைத்து யோட்டாலே
தானே சுத்தி மூடி அகலிலே வைத்து ஈரத்தோடும்

முடிவு :

வெள்ளைக்குக் கிசாயம்

நீலகிரி ஈர வெங்காயம் ஒரு காசு, சீரகம், மெழுகு வக்கை [வகைக்கு காசு 2 க்கு வாங்கி கிசாயத்தே தொக்கச் சேர்த்து அரைப்படியாகக் காச்சி இருவேளையும் வீசம்படி சாப்பிடவும், பத்தியம் மோருஞ் சாதமும் சாப்பிடவும், மித்தொன்று மாகாது.

காலம் :

இல்லை

குறிப்பு

இதில், முந்திரி யெண்ணெய், லவண பற்பம், மூலக்கிராணி கழிச்சல், யெறச்சல் இதுகளுக்குக் கபாடச் சூரணம், அரிதார எண்ணெய், கெந்தக செந்தூரம், மேலெளப்பு உப்புசம் இருமலுக்கு நன்னாரிக்கஞ்சி, பஞ்சபாண செந்தூரம், வெள்ளைக்கு மருந்து பல்வலிக்கு மருந்து முதலியன உள்ளன.

★ ★ ★

வரிசை எண் : 2227 சுவடி எண் : 1.83

## கொங்கணர் வைப்பு சூத்திரம் — 103

ஏடுகள் : 29 கி. எண்ணிக்கை : 600 அளவு : 17×3½ செ மீ
பக்கத்திற்கு : 9—10 வரிகள் ஆசிரியர் : கொங்கணர் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிகப் பழுது. முழுமை : முற்றுப்பெறாது எழுத்து : தமிழ்

தொடக்கம் :

ஆதியந்த மில்லாத வெளியுந் தாண்டி
யகண்டுநின்ற போகருட பாதம் போற்றி
சோதியென்ற சின்மயத்தின் ஆயிபாதம்
துலங்கியதோ ரிஷிகளுட பாதம் போற்றி

முடிவு :

நாமப்பா தொட்டிக்கு அரைத்துக் கொண்டு
நலமாக சட்டிக்குள் மூடிக் கொண்டு
ஏமப்பா எரித்திடுநீ மசான்னென் சொன்னேன்
உத்தமனே துறைக்கெல்லா மாதி கூட்டே. 104

கொங்கணர் வைப்பு முற்றும்

காலம்

இல்லை

குறிப்பு :

இது, எமது சுவ்டி எண் 231-e/D 380 போன்றது.

வரிசைஎண் : 2228 சுவடி எண் : 1184

# சரக்கினுட குண வாகடம்

ஏடுகள் : 20. கி. எண்ணிக்கை 300. அளவு : 23 × 3 செ.மீ.
பக்கத்திற்கு ; 6—7 வரிகள் ஆசிரியர் : அறியுமாறு இல்லை பொருள் : மருத்துவம்
நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது. எழுத்து : தமிழ்.

**தொடக்கம் :**

**மிளகின் குணம்**

ரோகை சுரங்களறுஞ் சூலைகப நோய்போக்கும்
தாகமறு மந்தந் தனைப்போக்கும் - மேகச்
சிலந்தி கிருமியுடன் சில்விஷங்கள் நாசமாம்
கலங்குமது பேதிகளைக் கட்டும்.

**முடிவு:**

**நீராகாரம்**

வாதபித்த மையம் வரட்சிதனை மாற்றிவிக்கும்
போதமிகுந் தாது பொருந்துவிக்கும் - நீதமாய்
வாராகா ரம்பெருமா மாமதுர முண்டாக்கும்
நீராகா ரம்கொள்ளும் நேர் — 105

சிவமயம்

**காலம் :**

இல்லை

**குறிப்பு :**

இதில், இஞ்சி, பெருங்காயம், வசம்பு, மஞ்சள், கஸ்தூரி மஞ்சள், மரமஞ்சள், சீரகம் கருஞ்சீரகம், திப்பிலி, ஈருள்ளி, வெந்தயம், ஓமம், அதிமதுரம், கோஷ்டம், தேவதாரம், ஏலம் முதலான சரக்குகளின் குணங்கள் வெண்பாவால் கூறப்பட்டுள்ளன.

★ ★ ★

வரிசை எண் : 2229 சுவடி எண் : 1185

## சுந்தரானந்தர் தீட்சை

ஏடுகள் : 12. கி. எண்ணிக்கை : 350. அளவு : 41 x 4 செ. மீ.
பக்கத்திற்கு : 5—7 வரிகள். ஆசிரியர் : சுந்தரானந்தர். பொருள் : மருத்துவம்
நிலைமை : பழுது. முழுமை : முற்றுமுளது. எழுத்து : தமிழ்,

தொடக்கம் :

ஆதியந்த மூலந்தாண்டி ஒளியுந் தாண்டி
அடர்ந்துநின்ற சிவசக்தி பாதங் காப்பு
ஊதியந்த பிராணவஸ்து அமர்ந்து நின்ற
உரைத்துநின்ற அற்புதந்தான் பாதங் காப்பு
ஆதியந்த மாலயனுந் தேடிக் காணாச்
சதாசிவனார் தானதுவுங் காப்பு (?)
வீதியந்த மாதார முன்னி ருந்த
விநாயகனும் வல்லபையு விதியுங்காப்பே.

முடிவு :

செல்லப்பா கைலாச மூர்த்தி யங்கே
சிறந்திருந்தார் தெண்டனிட்டு மயேந்தி ரத்தில்
நல்லப்பா ஆயிரம்பேர் சித்த ரோடே
நானிருப்பேன் பதிதெண்டம் பண்ணினதே யானால்
செல்லப்பா காயசித்தி ... ... ...த்த கற்பம
கணக்கையுண்டு ஒருவனும் சித்த னாவான்
அல்லப்பா யெனையாண்ட கைலாய மூர்த்தி
அருளாலே சொல்லிவைத்தேன் தீட்சை முற்றே! — 51

சுந்தரானந்தர் தீட்சை 51 முற்றும்

குருவே துணை

காலம் :

இல்லை

குறிப்பு :

இதில், புவனை தீட்சை, காயசித்தி, அஷ்டகேசம், அஷ்டநாகம் அஷ்டசக்தி அஷ்டபாலர், அஷ்டதுர்க்கை, முப்பத்து முக்கோடி தேவர் முதலானவை கூறப் பட்டுள்ளன.



வரிசை எண் : 2230 சுவடி எண் : 1186-அ

# தேரையர் வைத்தியம்

ஏடுகள் : 186 கி. எண்ணிக்கை : 2700 அளவு : $22\frac{1}{2} \times 3$ செ.மீ.
பக்கத்திற்கு : 5—7 வரிகள் ஆசிரியர் : தேரையர் பொருள் : மருத்துவம்
நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

**தொடக்கம் :**

**சயித்தியத்துக்கு**

அரிசித்திப்பிலி, வெள்ளுள்ளி பலம் - 1
இது ரெண்டையும் முருங்கைப்பட்டைச் சாத்தா லரைத்து
களச்சிக்காயளவு சாப்பிடவும். இருநேரமும் பத்தியம்
சயித்திய பதார்த்த மாகாது

**முடிவு :**

இவையெல்லாம் மைபோ லரைத்து குகையிலிட்டு
உருக்க மணியாகும். ஆறினவுடனே எடுத்து
வைத்துக்கொண்டு மேலனுபானத்தில் பணவிடை
பொடித்துப் போட்டுக் கொடுக்கவும்

**காலம் :**

இல்லை

**குறிப்பு :**

இதில், வயறு கடுப்புக்கு, சீமூலம் கிராணி கழிச்சலுக்கு, மூலவாயுவுக்கு, தண்டு வாதத்துக்கு, கல்லடைப்புக்கு, தத்த வாயுவுக்கு, சந்து வாதத்துக்கு, குடல் வாதத்துக்கு, உருளை வாய்வுக்கு, முழங்கால் வாய்வுக்கு, குதிங்கால் வாதத்துக்கு, சருவாங்க வாய்வுக்கு முதலியன உள்ளன.



வரிசை எண் : 2231

சுவடி எண் : 1186-b

## கருவூரார் பாடல்

ஏடுகள் : 16(187—200) கி. எண்ணிக்கை : 250 அளவு : 22½×3 செ. மீ.
பக்கத்திற்கு ; 5—7 வரிகள் ஆசிரியர் : கருவூரார் பொருள் : மருத்துவம்
நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்

**தொடக்கம்**

**குன்மத்துக்கு**

பேசும் பிரண்டையுடன் பேரிசைந்த வேப்பலகும்
பூசும் புரசவித்து மோதகமும் — வாசிபண்ணு
கொள்ளிற் கிசாயமதிற் குன்ம வலிக்கிருமி
விள்ளில் விழுந்தேகு மிது.

முடிவு ;

**காதிற் சீ விழுகிறதுக்கு**

குருஞ்சா யிலையும் கருஞ்சீரகமும்
மிளகு மஞ்சள் நல்லெண்ணெயில் காச்சி
யடைக்கவும்... தீரும்

**காலம் :**

இல்லை

குறிப்பு :

இதில், பித்தத்துக்குக் கிஷாயம், கெந்தக பற்பம், பல்லுவலிக்குக் கிஷ்ாயம். பிள்ளை களுக்குப் பிரளி வாயுவுக்கு கிஷாயம், கெந்தகச் சூரணம், சூத மெழுகு, லிங்க பற்பம், பூரபற்பம், மஞ்சள்காமாலைக்கு, வலிப்புக்குத் தயிலம், சகல கிரந்தி, சூலைக் கரப்பா னுக்கு எண்ணெய் முதலியன உள்ளன.

தொகுப்புபோல் காணப்படுகிறது.

* * *

வரிசை எண் 2232 சுவடி எண் : 1187

# நட்சத்திரம் பார்த்துச் செய்யும் வைத்தியம்

ஏடுகள் : 9 கி. எண்ணிக்கை: 200 அளவு : ?0×3 செ.மீ
பக்கத்திற்கு : 5—6 வரிகள் ஆசிரியர்: புலிப்பாணி பொருள்: மருந்துவம்
நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்

**தொடக்கம்**

அசுபதி

தானென்ற அசுபதியில் முதற்கா லையா
 தயவாக ஒன்பது நாள் சுரமே தீரும்
தேனென்ற ரெண்டாங்கால்க் கொல்லு மப்பா
 திரமாக ஒன்பதாநாள் மரண மாவான்
கோனென்ற மூன்றாங்கால் பதினஞ்சு நாளில்
 குணமாகாட்டால் நாலாங்கால் மரணஞ் செய்யும்
வானென்ற பரணியில் முதற்கா லையாமூன்றும்
 வளமாக ரெண்டாங்கால் ஏழா மெண்ணே ! — 1

முடிவு :

முருங்கைப் பிஞ்சு முருங்கையிலை துவரம்பருப்பு
வாழைக் கச்சை கூட்டவும்
கைப்போடு புளியுந் தள்ளவும்
ஒருவனுக்கு எட்டுநாள் ரெண்டு பழம்
அதிலேயுந் தீராட்டால் திரும்ப நாலு பழம் கூட்டவும்

**காலம் :**

இல்லை

**குறிப்பு :**

இதில் இருபத்தேழு நட்சத்திரத்துக்கும் செய்யும் வைத்தியம் மரணத்துக்குரிய எட்டு வாரத்துக்கும், வெள்ளைக்கு, ஈரல்குலை எரிவுக்கு லிங்க மெழுகு, தலையிடிக்கு நசியம், வெள்ளோக்காளத்துக்கு ஊதுகாமாலைக்கு முதலியன உள்ளன.

★ ★ ★

வரிசை எண் : 2233 சுவடி எண்: 1188

## மருந்து வாகடம்

ஏடுகள் : 72 கி. எண்ணிக்கை : 1000 அளவு : 28 × 3 செ.மீ.
பக்கத்திற்கு : 4—ரி வரிகள் ஆசிரியர் : தன்வந்திரி பொருள் : மருத்துவம்
நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றற்றது. எழுத்து: தமிழ்

தொடக்கம் :

| | | |
|---|---|---|
| வீரம் | விராகனெடை | — 2 |
| லிங்கம் | ,, | — 4 |
| சீனாக்காரம் | ,, | — 1 |
| பலகைச் சூடன் | ,, | — 1 |

இந்த மருந்து நாலும் கல்வத்தில் போட்டு நல்லா நுணுக்கி
முலைப்பால்விட்டு ரெண்டு நாழிகை அரைத்து,
ஒருவில்லையாகத் தட்டி நல்ல காய்ந்த பிறகு எடுத்து

முடிவு :

தீரும் வியாதிகளாவான மேகம் குரிதுவாரம், யெரிப்பு
லிங்கப் புத்து, கிரந்தி வாய் நாற்றம், சூலை, வெடி ரிணங்கள்
தீரும். கடுகு நல்லெண்ணெய் நீக்கவும். வாய்வு
பதார்த்தங்கள் ஆகாது.

முகப்பு ஏட்டில்

திருச்சினாப்பள்ளி தாலுக்காவைச் சேர்ந்த எட்டரை கிராமத்திலிருக்கும் முத்துக் கருப்பன பண்டிதர் சுவடி மருந்து வாகடம் எழுதியது

முற்றிற்று

காலம் :

திருச்சினாப்பள்ளியைச் சேர்ந்த திருவானைக்காவல் கீழக் கொண்டையம்பேட்டை சறாஜி முத்துராஜா 1947 ல் சித்திரை மாதம் 20-ந் தேதி சனிக்கிழமை பகல் 11 மணிக்கு இந்த முறை சொன்னார்

விரோதிகிருது வருஷம் மார்கழி மாத 15-ம் தேதி முத்துக்கருப்பன் எழுதினதுதான்.

குறிப்பு :

இதில், ரசபற்பம், சகல காச்சலுக்கும் லிங்க மாத்திரை, கணைக்கு வாதமாருத மெழுகு, பூநாளி செந்தூரம், தன்வந்திரியார் சண்ட மாருத செந்தூரம், மருந்து கொடுக்காத பேர்களுக்கு முதலியன உள்ளன.

வரிசை எண் : 2234 சுவடி எண் : 1189

# தெட்சிணாமூர்த்தி மெய்ஞ்ஞானம் — 1500

ஏடுகள் : 277 கி. எண்ணிக்கை : 10000 அளவு : 36 × 3½ செ.மீ
பக்கத்திற்கு : 6—8 வரிகள் ஆசிரியர் : தெட்சிணாமூர்த்தி பொருள் : மருத்துவம்
நிலைமை : மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்,

**தொடக்கம் :**

சீரான முடைய காளை
சிவன் மகன் தமிழானை
வாரண முலையாள் பெற்ற
மதகரி வல்லோ ரந்த
நாரணன் மருகன் செஞ்சொல்
நல்த்தமிழ்க் குடையேன் பூசை
காரண முடைய தும்பி
கணபதி காப்புத் தானே !

**முடிவு :**

வாழியாம் அண்டரெண்டர் புவனம் வாழி
மானிலத்தில் சீவசெந்து வோடும் வாழி
காளியான வனதுர்க்கை எல்லாம் வாழி
கடல்வாழி மலைவாழி கருவும் வாழி
ஆழியாம் சித்தர்கள் எல்லாம் வாழி
அசுராதி தேவர் வாழி முற்றே ! 1487

(மூன்று அடிகளே உள்ளன)

தெட்சணாமூர்த்தி துணை

அகத்தீசர் சுவாமி துணை

குருநாதன் துணை.

**காலம்**

இல்லை

குறிப்பு :

இதில் கபாடவாசல் எழுத்து, நவக்கிரக விபரம், வாத பித்தத்தின் குணம், சரக்கு, வாத பித்த சிலேத்தும விபரம், பச்சிலை சரக்கு, மறப்பு, பூ நிகண்டு, சற்குருவைக் காண, வச்சிரக்குகை, பித்த சுரம் கிசாயம், வாதசுரம், சூரணம், லேகியம் முதலியன உள்ளன.

இடையிடையே விடுபட்டுள்ளன.

★ ★ ★

வரிசை எண்: 2235 சுவடி எண்: 1190-a

## வாகடச் சுவடி

ஏடுகள் : 19 கி. எண்ணிக்கை : 600 அளவு : 34×3 செ.மீ.
பக்கத்திற்கு : 4—7 வரிகள் ஆசிரியர் : தன்வந்திரி பொருள் : மருத்துவம்
நிலைமை : பழுது முழுமை : முற்றுற்றது எழுத்து : தமிழ்

தொடக்கம் :

(இதில் முதல் 11 ஏடுகள் இச்சுவடியின் அட்டவணை) (12-வது ஏட்டில்)

தேவிசகாயம்

சித்திரை வையா சிக்குஞ்
செழுங்கதி ருதயந் தன்னில்
அத்துமா ஆனி ஆடி
அற்பிசை கார்த்தி கைக்கு
மத்தியானத்தில் பார்க்க
மார்கழி தையு மாசி
வித்தகன் கதிரோன் மேற்கே
விழுகின்ற நேரந் தானே ! 1

முடிவு :

நாபியில் வாத மாகு
நான்கினுங் குலத்தில் பித்தம்
தூவிய நெஞ்சில் பித்தஞ்
சாரவே சிலேட்டு மந்தான்

காலம் :

இல்லை

குறிப்பு :

இதில், பீனிசத்துக்கு நசியம், குன்மங் குடல் வாதத்துக்கு, சுரத்துக்கு தாளக மாத்திரை. சுரவீக்கத்துக்கு, தொந்த சுரத்துக்கு. அதிசார சுரத்துக்கு, உஷ்ண சுரத்துக்கு, குளிர் தாப சுரத்துக்கு, சன்னிவாத சுரத்துக்கு, உதிர சுரத்துக்கு, வீக்கத்துக்கு, வாதமை, சுரத்துக்கு, தாப சுரத்துக்கு முதலியன உள்ளன.

—o—

வரிசை எண் : 2236 சுவடி எண் : 1190-b

## வைத்தியர் கணிதம்

ஏடுகள் : 3(20–23) (19-ஆம் ஏட்டின் பின்புறத்தில் தொடக்கம், 21-ஆம் ஏட்டின் பின்புறம் இல்லை) கி. எண்ணிக்கை : 75 அளவு : 31 × 3 செ.மீ. பக்கத்திற்கு : 6—7 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : மருத்துவம் நிலைமை : பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்

தொடக்கம் ;

1-ஆம் பிறையில் வியாதி பட்டால்
30 நாளில் வாசியாம்
2-ஆம் பிறையில் வியாதி பட்டால்
14 நாள் 21 நாள் கடினம்
தப்பினால் மரணம்
3-ஆம் பிறையில் வியாதி பட்டால்
10 நாளில் வாசியாம்

முடிவு :

### வைத்தியர் மருந்து செய்ய வேண்டிய நாள்

காரிய புதனே திங்கள்
கருதிய மருந்து தீதாஞ்
சீரிய வெள்ளி தோவாஞ்
செவ்வாய் வியாழம் பிணிதீரும்
ஆதிய னருளி னாலே
அருக்கனில் மருந்து செய்ய
பாரிய பிணிக ளெல்லாம்
பறந்திடும் உண்மை தானே !

காலம் :

இல்லை

குறிப்பு

இதில், கூழ்பாண்டகிருதம், புளியாரைக் கிருதம், நயன சஞ்சீவிக் கிருதம், பரங்கிப் பட்டை மஞ்சக்காமலை, சூசிக வாய்வுக்கு, நீரடைப்புக்கு முதலியன உள்ளன என்று அட்டவணை கூறுகிறது. ஆனால் 29 பிறைகட்கு உரியநோய் கணக்கு கூறப்பட்டுள்ளது.

★ ★ ★

வரிசை எண் : 2237

சுவடி எண் : 1190-c

## மச்சமுனி மெஞ்ஞானம்

ஏடுகள் : 12(24-35) கி. எண்ணிக்கை 500 அளவு : 34 x 3 செ.மீ.
பக்கத்திற்கு : 7—8 வரிகள் ஆசிரியர் : மச்சமுனி பொருள் : மருத்துவம்
நிலைமை : பழுது முழுமை : முற்றற்றது. எழுத்து : தமிழ்

தொடக்கம் :

பருபதந் தன்னில் யார்க்கும்
பரிவுசேர் முனிவன் சொன்ன
அருமையாய் இந்நூல் பார்த்து
(வரி இல்லை)
வருசையி லுரைக்கு ரேன்.
மானிடர்க்கு வரிசை சேறு
உருபல வியாதி வந்தால்
உகந்தநல் பிடாரன் வேணும்

முடிவு :

ஒருபடி தூளுக்கு நாலுபடி காடிவிட்டு
பழச்சாறு கால்படி விட்டு முன்போலே
இறுத்துப் போடவும்
மறுபடி பசுவின் மோர் நாலுபடி பழச்சாறு கால்படி
கூடவிட்டு முன்போலே இறுத்துப் போடவும்
மறுபடி பசுவின் பாலை நாலுபடி கொண்டு வந்து
ரெண்டு படியாகக் காச்சி, அந்தப் பாலை விட்டுக்
கிளரிக் காயவைத்துக் கொண்டு பார்க்கக்
கற்பு எல்லாம் பொய்

**காலம்:**

இல்லை

**குறிப்பு:**

இதில், மச்சமுனி நூலிலிருந்து தெகுத் தெடுத்து எழுதப்பட்டுளது. இதில், பல சூரணம், மூலத்துக்கு, சூலை கிரந்தி குஷ்டம், வாத வாய்வு, சில்விசகடி, சகலத்துக்கும் சூரணம், பிள்ளையில்லாத பேருக்கு, வயிற்றுக் கடுப்புக்கு மூலக்கிராணிக் கடுப்பு, சாதி லுள்ள வியாதிக்கு முதலியன உள்ளன.



வரிசை எண் : 2238 சுவடி எண் : 1190-d

## தன்வந்திரி வாகடம்

ஏடுகள் : 115(36-150) கி. எண்ணிக்கை : 2300 அளவு : 34×3 செ.மீ.
பக்கத்திற்கு : 6—8 வரிகள் ஆசிரியர் : தன்வந்திரி பொருள் : மருத்துவம்
நிலைமை : பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்

**தொடக்கம் :**

அமுர்த சர்க்கரை

அமுர்த சர்க்கரை யாச்சுது, இதுவோடே சேருகிற மருந்து
சீனிச்சர்க்கரை 1/8 படி போட்டுக் கலந்து கொண்டு
திரிகடுகு அதிமதுரம், ஓமம் வாய் விளங்கம் நறுக்கு மூலம்
பச்சைக் கற்பூரம், சாதிக்காய், சாதிப்பத்திரி, கிறாம்பு

**முடிவு :**

தொப்புள் முதல் கழுத்தளவு தடவி சலா இருவிரக்கடை
அளவு துணியில் தடவிப் போட்டவும், துணி காயாமல்
அடிக்கடி போடவும், மேலே சன்னி கண்டால் முண்டுத்
தயிலம் மேலே போடவும். சயிவாளுக்கு கிராம்புக்
கிஷாயத்தில் குடுக்கவும்.
நஞ்சுக் கொடிச் சுன்னமாவது - காடிகாரம்

**காலம் :**

இல்லை

குறிப்பு :

இதில், அசுவ கெந்தித் தயிலம், திசமூல லேகியம், புளியாரைக் கிருதம், கூழ் பாண்டகிருதம், உள் மூலத்துக்கு சீரக ரசாயனம், சவுபாக்கிய சுண்டி, நட்டுவாக்காலிக்கு, பல் குத்துக்கு அமுர்தாதிக் குளிகை, பாம்பு கடிக்கு, குழந்தைகளுக்கு மாந்தம், மூக்காலே ரெத்தம் விழுகிறதுக்கு முதலியன உள்ளன.



வரிசை எண் : 2239

சுவடி எண் : 1191

## அகத்தியர் சப்த காண்டத்தில் சப்தரிஷி திறம்

ஏடுகள் : 136 (118-235) கி. எண்ணிக்கை: 4000 அளவு : 27 × 3 செ.மீ.
பக்கத்திற்கு : 8—10 வரிகள் ஆசிரியர் : அகத்தியர் பொருள் : மருத்துவம்
நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்

தொடக்கம் :

### ஊழிக் கழிச்சலுக்கு விபரம்

கேளப்பா ஊழியென்ற காற்றைச் சொல்வேன்
கெடியான சாமளா தேவி யாலே
நாளப்பா மைபோலே கருத்தே நிற்கும்
கண்ணுக்கும் தோத்தாது கடினமாகும் மெத்தவே
கேளப்பா காழினுட விபர மெல்லாம்
மைந்தனே சொல்லுகிறேன் வகையுறவே கேளு
யாளப்பா பண்ணிவிடும் உலக மெல்லாம்
யரிசுத்த மாயிரதால் பறக்கும் பாரு !

முடிவு :

### பூத கலிக்கம்

சுக்கு, மிளகு, திப்பிலி, துரிசு, வாளம், சீமன் கூட்டி
பழச்சாற் விட்டு சாமம் ஒன்று அரைத்துக்
கம்பியாய் உருட்டி நிழலுலத்தி வைத்துக் கொண்டு
வெத்திலை சாத்தில் யிட சன்னி, தலைபாரம், பேய் பிசாசுகள்
யிது தீரும்

காலம் :

இல்லை.

குறிப்பு :

இதில், லிங்க சுத்தி, கற்பூர சுத்தி, ரசகற்பூர சுத்தி, நாவரட்சிக்குக் கிஷாயம், கண்ட அவுள்தம், வித்துவகை, பூரணாதி, சுரத்துக்கு, நாவரட்சிக்கு, சருவாங்க மாத்திரை, பித்தம் நாற்பதுக்கும் எண்ணெய், நஞ்சு தின்ன பேருக்கு முறிவு, சயத்துக்குக் குளித்தயிலம், சுர தோஷம் அறுபத்து நாலுக்கும் கிஷாயம் முதலியன உள்ளன.

* * *

வரிசை எண் : 2240 சுவடி எண் : 1192-a

## அகத்தியர் பலதிரட்டு சாத்திரம்

ஏடுகள் : 13 கி. எண்ணிக்கை : 300 அளவு : 27×3 செ. மீ
பக்கத்திற்கு : 6—8 வரிகள் ஆசிரியர் : அகத்தியர் பொருள் : மருத்துவம்.
நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்

தொடக்கம் :

வாக்குண்டாம் ........... தமக்கு

சிவகணபதி துணை

பாரப்பா ருசுகெட்ட சாராயம் தனைக்குடித்தால்
வீரப்பா தானேறி பித்தநீர் மேலேயேறி
ஊரப்பா திரேகமெல்லாம் அரிப்பு மீறி
உண்டதொரு கற்பமெல்லாம் விழலாய்ப் போக்கி
நீங்காத நரைதிரையாய்ச் சாவான் பாரே !

முடிவு :

கையைநீ பிடித்துப் பார்த்து
கடுகவே நிமிர்த்தி விட்டு
உய்யவே னானு மென்று
உகந்துநீ நாடி பார்க்கில்
பையவே தொங்கி தொங்கி
புதரியே ஓடு மாகில்
அய்யமே நாடி யென்று
அறிந்துநீ விட்டுப் போக்கே 47

காலம் :

முகப் பேட்டின்

1884-ஆம் வருடம், தாரண வருஷம் அற்பிசை மாதம் 17-ஆம் தேதி வெள்ளிக் கிழமை எழுதினது.

குக்கு பட்டாளம், கும்பினி வாத்தியார் ஆறுமுகம்பிள்ளை குமாரன் சப்பாணியா பிள்ளை, எழுதி இனியானூரிலே யிருக்கும் மோகனம்சுவடி. எடுத்த பேர் குடுக்க வேண்டியது.

குறிப்பு :

இதில், பெண்மலடே இல்லை, ஆண்மலடே என்றும், கெற்பக் கோளின் குணம் முதலியனவும், வியாதி அதிகம் தாழ்வு, வாத சரீர குணம், பித்தசரீர குணம், சிலேட்டும சரீர குண , பித்தம் பிறக்கிறது, வாதபித்தம் பிறக்கிறது, வாதத்தின் குணம், வியாதி வருகிற கூறு முதலியன உள்ளன.

மேற்குறிப்பிட்ட முடிவு 14-ஆம் ஏட்டில் இருக்கிறது, 13-ஆம் ஏட்டில் 46-ஆம் செய்யுள் முடிகிறது.

* * *

வரிசை எண் : 2241 சுவடி எண் : 1192-b

## அகத்தியர் குருநாடி

ஏடுகள் ; 6(14-19) கி.எண்ணிக்கை : 200 அளவு : 27 × 3 செ.மீ.
பக்கத்திற்கு : 6—8 வரிகள் ஆசிரியர் ; அகத்தியர் பொருள் : நாடி சோதிடம்
நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்

தொடக்கம் :

வன்ன மயிலே செம்போத்து
மாடப் பிறாவை இவைகோட்டான்
என்ன நடக்கும் இவைவாதம்
இதின்மேல் பிறளி பித்தமென்ன
உண்றும், பிள்ளை பூநாகம
முரட்டு சரட்டே யென முருக்கில்
பன்னிப் பார்க்க வேண்டாங்காண்
யகர்ந்தா யேபார் தனிலே ! — 1

முடிவு :

சிலேற்பனத்தில் சிலேற்பன மாகில்
திடம்பெற அறியும் நீதான்
நாற்பன நல்லதாகார் கனிவிது
மெய்யே மெய்யே சொன்னோம்
கூத்துவ னிவனே யாகும்
குருமுனி பொய்யே யாகும்
சாத்திர மறிந்து சொன்னோம்
ஆதிரை நாடி தானே ! — 31

குருநாடி முற்றிற்று

காலம் :

இல்லை

குறிப்பு

இதில், தொடக்கம் 6 பாடல்கள் இல்லை. 14 ஆம் ஏட்டின் தொடக்கத்தில் முன் நூலின் இறுதிப்பாடல் (47) இருக்கிறது அதன்பின் 7 ஆம் பாடல் தொடங்குகிறது.

இது எமது சுவடி எண் 175 / D 279 'அகத்தியர் குருநாடி' யின் வேறாயது போல் தோன்றுகிறது. இதற்குத் தலைப்பு இல்லை.

19-ஆம் ஏட்டில் 'குருநாடி' முத்தித்து என்பதால் இத்தலைப்பு தரப்பட்டது

★ ★ ★

வரிசை எண் : 2212

சுவடி எண் : 1192c.

## நாடி அகவல்

ஏடுகள் : 3 (19—21) கி. எண்ணிக்கை : 50 அளவு : 27×3 செ மீ.
பக்கத்திற்கு ; 6—7 வரிகள் ஆசிரியர் : அகத்தியர் பொருள் : நாடி சாத்திரம்.
நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்

தொடக்கம்

ஐங்கரன் தன்னை அருள்புரிந் தின்னையாள்
சங்கரன் பாகம் தய்யலா ளுந்த
வல்லிசொல் குமரன் மலர்ப்பத மிறைஞ்சி
நல்லிருள் வெளிதர நாடி நூலினை

முடிவு :

நடத்திடும் இருவகை காய்கறி யிசைந்திடும்
கண்டீர் அறிவுள்ளோர் கண்ட றிந்தே
உரைத்திடும் என்றே ஏனாதி வங்கிஷம்
பண்டே யுரைத்த பன்னூல் படியே !

நாடி அகவல் முற்றிற்று

சிவகணபதி துணை

**காலம்**

இல்லை

குறிப்பு

இதில், நாடி பற்றிய செய்திகள் ஆசிரியப்பாவால் கூறப்பட்டுள்ளன.

★ ★ ★

வரிசை எண் : 2243 சுவடி எண் : 1192-சி

## வைத்தியத் திரட்டு — சுர நிதானம்

ஏடுகள் : 13(22-34) கி. எண்ணிக்கை 300 அளவு : 27 × 3 செ.மீ.
**பக்கத்திற்கு** : 6—7 வரிகள் ஆசிரியர் : பலர் பொருள் : மருத்துவம்
**நிலைமை** : நல்ல நிலை முழுமை ; முற்றற்றது எழுத்து : தமிழ்.

**தொடக்கம்**

அசாத்திய குணம்

நேத்திர முகங்கள் காது
நேர்பட நெஞ்சு வற்றி
நேத்திரம் வெளுத்து மூக்கு
நேர்பட மடங்கு மாகில்
நீத்தன்னில் நூதலாய் கேளாய்
நிச்சயம் பயித்தி யத்தை
சிலேட்டுமம் வாங்கிச் சிவன்
சொல்லுத லறிந்து கொள்ளே ! — 1

முடிவு :

அப பத்தியம்

பூவும் மஞ்சள் சந்தனமும்
பொருந்து பாக்கு வெத்திலையும்
மேவுங் கொடிகி வேப்படை
மெத்தை வெல்லம் மெள்ளெண்ணெய்
தாவும் காத்து வரும்வீடும்
தங்கள் மனையாள் தனைப்பார்க்கில்
நாவுண் ருசியாம் அந்தமுடன்
நன்றுநோய் சுரத்துக் கபத்தியமே / — 53

காலம்

இல்லை

குறிப்பு

இதில், சுரநிதானம் அறியும்படி, வாத சுரத்தின் குணம், பித்த சுரத்தின் குணம், சிலேட்டுமத்தின் குணம், வாத சிலேட்டுமத்தின் குணம், சிலேட்டும சுரத்தின் குணம், வாத சிலேட்டும சுரத்தின் குணம், பித்தவாத சிலேட்டுமத்தின் குணம், திரிதோஷத்தின் குணம், அதிசார சுரத்தின் குணம் முதலியன உள்ளன.

* * *

வரிசை எண் : 2244 சுவடி எண் : 1192-e

## சன்னி பதின்மூன்றுக்கும் பேர் — கவி

ஏடுகள் : 4(34-37) கி. எண்ணிக்கை : 50 அளவு : 27×3 செ.மீ.
பக்கத்திற்கு : 6—7 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : மருத்துவம்
நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்

தொடக்கம் :

தாந்திறகம் மந்தரகம் முகுதாங்கம்
தன்னிகரில்லா சித்திர வீறப்பிறகம்
சீதாங்கம் தானக்குணீகம் பன்னிய
கண்டகுச்சம் மாத்துரஷட் டிரத்த சன்னி
பத்திநேத் திரமுடனே பின்னிய
பிரலாபம் சினமுகம்
பெருகிய அவுநியாசகம்
சன்னி பதிமூன்றே — 1

முடிவு :

பந்திசின முகமொடு பதினேழு நாளாம்
நன்றுவ நீகாசன்னி பதினஞ்சு நாளென்றும்
வந்துசிறு தென்மலையில் மேவுகுரு மாமுனிவர்
சிந்தைமகிழ் வாதியே செப்பினான் செகத்தே

சன்னி பதிமூன்றும் குணமகவாது

முற்றும் ஆக பாட்டு — 73

காலம் :

இல்லை

குறிப்பு :

இதில், சன்னி பதின் மூன்றுக்கும் பேர் இன்னின்ன தென்று கூறப்பட்டுளது.

—OO—

வரிசை எண் : 2245 சுவடி எண் : 1192-f

## பிரமியம் பிறக்குறது

ஏடுகள் : 10(37-46) கி. எண்ணிக்கை : 200 அளவு : 27 × 3 செ.மீ.
பக்கத்திற்கு : 6—7 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : மருத்துவம்
நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்

தொடக்கம் :

(37-ஆம் ஏட்டின் பின்பக்கம்)
தானே பூர்வ வியாதி யதனால்
சாகும் பிணிகளெல்லாமல்
மானே விழியார் வேற்கையினால்
வருந்தும் பிணிதும் பசியாலே
தானே பொறுத்து உங்கையினால்
தாகம் தன்னால் மிகச்சார்ந்து
தேனே கமலம் புண்ணாகி
செய்யும் பிரமியம் செயல்தானே ? — 1

முடிவு :

## நயனப் பரீட்சை குணம்

மன்னிறத்த மாயி மஞ்சனம்போல் விளிதரும் சன்னி
பொன்னிறத் தோடு பசுங்கழல் போன்ற காமாலை
கன்னிய கட்டி பவளமா கக்குவா னிருமல்
உன்னி யிப்படி நேத்திர பரிச்சை யென்றுஉரையே ! —55

காலம்

இல்லை

குறிப்பு

இதில், மாங்கிசமுருக்கிக் குணம், சிலேட்டும சலபத்துக் குணம், வாதசலக் குணம், கப சலக் குணம், வாதபித்த சிலேட்டும சல குணம், சிலேட்டும பித்த சலக் குணம், சுக்கில பிரமேகத்தின் குணம், வரக்காமாலை, நீரிழிவின் குணம், மூத்திரப் பரீட்சையின் குணம், மலப்பரீச்சைக் குணம் முதலியன உள்ளன.

---

வரிசை எண் : 2246 சுவடி எண் ; 1192-g

## குண வாகடத் திரட்டு

ஏடுகள் : $13\frac{1}{2}$(47-60) கி. எண்ணிக்கை : 300 அளவு : 27×3 செ.மீ.
பக்கத்திற்கு : 6—8 வரிகள் ஆசிரியர் : அகத்தியர்? பொருள் : மருத்துவம்
நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

### காஸத்தின் குணம்

காச மிருமல் கட்டிவிழும்
களைந்து சேரு மடிக்கடிதான்
நாசி யணலாம் தணல்ப்போலாம்
நளிரு முடம்பு வத்திவரும்
மூசை நாரி பஞ்சவர்ணம்
முதிரம் வீளு வாந்திபண்ணும்
ஓசைக் குரலும் கம்மிவிடும்
முத்து வெதும்பு முறமிதுவே.

முடிவு :

### சீ கட்டின குணம்

சீ கட்டியிருந்தால் அடி வயற்றில் குத்தல் எடுக்கும்; வலிக்கும்
பசிதீவனம் குடுக்காது. தண்ணீர் தாகம் குடுக்கும்
மேலே காந்தல் குடுக்கும் யெரிவாகும்
இதுக்கு மருந்து... ... ...

காலம் :

இல்லை

குறிப்பு :

இதில், செய்யுட்கள் தொடர்ச்சியாக இல்லை.

இதில், மந்தற காசத்தின் குணம், பித்த காசத்தின் குணம், வாத காசத்தின் குணம், மூலத்தின் குணம், பயித்தியமூல குணம், காமாலையின் குணம், குன்ம நிதானம் அறியும்படி, வாத வெரி குணம், மரண வாத குணம், கபால வாத குணம், பிறவீசுவு குணம் முதலியன உள்ளன.

★ ★ ★

வரிசை எண் : 2247 சுவடி எண் : 1192-h

## அகத்தியர் சப்த காண்டத்தில் ஊழிக்கழிச்சலுக்கு விபரம்

ஏடுகள் : 2½(60-62) கி. எண்ணிக்கை : 100 அளவு : 27×3 செ.மீ.
பக்கத்திற்கு : 9—10 வரிகள் ஆசிரியர் ; அகத்தியர் பொருள் : மருத்துவம்
நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்

தொடக்கம் ;

கேளப்பா ஊழியென்ற காத்தைச் சொல்வேன்
கெடியான சாமளா தேவி யாலே
நாளப்பா மைபோலே கருத்தே நிற்கும்
கண்ணுக்கும் தோத்தாது கடினமாகும் மெத்தவே
கேளப்பா காழினுட விபரம் எல்லாம்
மைந்தனே சொல்லுகிறேன் வகையறவே கேளு
பாளப்பா பண்ணிவிடும் உலகம் மெல்லாம்
பரிசுத்த மாயிருந்தால் பறக்கும் பாரு — 1

முடிவு :

சோதியுடன் வந்ததொரு ஊழி யுந்தான்
சொல்லுமுன்னே ஓடுமடா துன்பம் நீங்கிவிடும்
வியாதியுடன் மூதண்டம் கொண்டு வந்து
என்மகனே ஊழியது ஒதுங்கிப் போகும் — 10

அகத்தியர் பாடல் முற்றும்

காலம் :

கும்பினி வாத்தியார் ஆறுமுகப்பிள்ளை குமாரன் சப்பாணிபிள்ளை எழுதினது. வடமலை பிள்ளை குமாரன் மோகனம் பிள்ளை சுவடி. எடுத்த பேர் குடுக்க வேண்டியது.

தாருண வருஷம் கார்த்திகை மாதம் எழுதினது.

குறிப்பு :

இதன் முழுத் தலைப்பு. 'அகந்தியர் சப்த காண்டத்தில் சப்தரிஷி திறமென்றொரு சாத்திரம். அதில் 1802-ம் பாட்டு முதல் 1812-ம் பாட்டு வரைக்கும் – ஊழிக் கழிச்சலுக்கு விபரம்' என்பதாம். 10 — பாடல்களே உள்ளன.



வரிசை எண் : 2248 சுவடி எண் : 1193-a

## அகத்தியர் ரெத்தினச் சுருக்கம்

ஏடு : 1 கி. எண்ணிக்கை 50 அளவு : 27 × 3 செ மீ.
பக்கத்திற்கு : 8—9 வரிகள் ஆசிரியர் : அகத்தியர் பொருள் : மருத்துவம்
நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

பூரணமா முள்மூலம் பொறியிற் சூடாம்
புகையெழும்பி மேகமதாய்ச் சிரசில்ச் சூடாம்
காரணமாய் நீர்கலந்து கண்ணில் ரோகம்
கனலெழுந்து வாயுவினால் சூலை ரோகம்

முடிவு :

மருந்துக்கு முறிவுகள்

கொள்ளு, காடி, கொமட்டிக்காய், கோழி, பண்டி, கொக்கு
செவ்வாடும், சேம்பு, சீனியவரை, சுரக்காய், பாவக்காய்
பயத்தங்காய், பூசணிக்காய், கடலை, பெரும்பயறு,
காட்டுப் பாகல்காய், பழுபாவை, மாங்காய், புளி, கடுகு,
தேங்காய், மேதிபால், நெய், சாராயம், தென்னங்கள்ளு,
பனங்கள்ளு, உளுவை, விலாங்கு, கூனி, கெண்டைகள்,
அயிரை இது முதல் கரப்பான் பதார்த்தம், எள்ளு பிரமாணம்
தின்றாலும் மருந்துகள் முறிந்து உடம்பில் பிணி
பிலக்கும் என்றவாறு

காலம் :

இல்லை

குறிப்பு :

தலைப்பு : அகத்தியர் ரெத்தினச் சுருக்கம் என்றிருப்பினும் பாடல் அகத்தியர் 205-ன் பாடலாகத் தெரிகிறது. 4 பாடல்களே உள்ளன பின்னர் மருந்து முறிவுகள் உள்ளன.

★ ★ ★

வரிசை எண் : 2249 சுவடி எண் : 1193-b

## பால வாகடம்

ஏடுகள் : 19. கி. எண்ணிக்கை : 800. அளவு : 27 x 3 செ. மீ. பக்கத்திற்கு : 6—9 வரிகள். ஆசிரியர் : அகத்தியர் பொருள் : மருத்துவம் நிலைமை : நல்ல நிலை. முழுமை : முற்றற்றது. எழுத்து : தமிழ்.

குழந்தைகளுக்கு 20 மாந்தங்கள்
உற்பத்தியாகும் விபரம்

தொடக்கம் :

கிரந்தி, செங்கிரந்தி, கருங்கிரந்தி, பட்சிதோசம்
மாந்தம், கணைகள், பிறளி கரப்பான்கள்
செவ்வாப்பு, தொண்டைக்கட்டு

முடிவு :

கோரோசினை விராகனிடை — 5 இதுவெல்லாம் போட்டு
காச்சிக்குடுக்க வேளைக்கி அரைக்கரண்டி வீதம்
குடுத்துவிடவும்; தீரும். சகல மாந்தம், கணைகள்
சுளிகணம் இதுவும் கணம் எல்லாம் தீரும்
நாள் 3 கொடுக்கவும். பத்தியம் : உப்பு, புளி
புகையிலை ஒன்றும் ஆகாது. 6 நாளைக்கு
வென்னீரும் சாதமும் சாப்பிடவும்.

காலம் :

இல்லை

குறிப்பு

இதில், மாந்த குணம், வாத மாந்த குணம், பித்த மாந்த குணம், சிலேட்டும மாந்தம், பிள்ளை பிறந்தவுடன் தொண்டை கட்டின குணம், அரைவீட்டிலே கழுத்து வீங்கி வலிக்கிற குணம், பட்சி தோஷத்துக்கு மருந்து, கறப்பான் கட்டி குணம், மருந்து, பாலமாந்த குணம், சுழிமாந்த குணம் முதலியன உள்ளன.

நல்ல சுவடியாகத் தெரிகிறது.

★ ★ ★

வரிசை எண் : 2250 சுவடி எண் : 1193-c

## பிள்ளைப் பிணி வாகடம்

ஏடுகள் : 12(20-31) கி. எண்ணிக்கை 300 அளவு : 27×3 செ.மீ.
பக்கத்திற்கு : 4—6 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : மருத்துவம்
நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றற்றது. எழுத்து : தமிழ்

தொடக்கம் ;

### முதல் நாள், முதல் மாதம், முதல் வருடம்

பிள்ளை பிறந்த முதல்நாள், முதல்மாதம் முதல்வருடம்
காளி என்னும் பேயன் செய்யும் குணம்
வெதுப்பும் வாந்தி பண்ணும், வயறு கழியும்
அதுக்கு பெலி : மாவாலே எருமை பண்ணி
சந்தனம் தெளிச்சு எருக்கம் பூச்சூடி

முடிவு :

தை முதல் மூன்று மாதம் செயநீறுக்குக் கால மாகும்
ஆடிமுதல் மூன்று மாதம் தீரா ஆகமும்
செந்தூரம் செய்யும் காலம்

இந்தப் படிக்கு காலம் அறிந்து செய்ய
சித்தியாகும்

காலம்

இல்லை

குறிப்பு :

இதில், ஒவ்வொருநாள், ஒவ்வொரு மாதம், ஒவ்வொரு வருடத்திற்கும் உரிய நோயும், அதற்கு உரிய தேவதையும் செய்யும் பரிகாரமும், எழுதிக்கட்டும் அட்சரமும், சக்கரங்களும் உள்ளன. மாந்திரீக நூலாகவும் காணப்படுகிறது.

—o—

வரிசை எண் : 2251 சுவடி எண் : 1194

## தன்வந்திரி வைத்திய சிந்தாமணி — 1000

ஏடுகள் : 54(63-117) கி. எண்ணிக்கை : 1500 அளவு : 27×3 செ.மீ.
பக்கத்திற்கு : 9—10 வரிகள் ஆசிரியர் : தன்வந்திரி பொருள் : மருத்துவம்
நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

திரைகட லுலகி லுள்ள
சனங்களுக் கிடரில் லாமல்
உரைமறை புகலு மீசன்
உமைதனக் குபதே சித்த
விரைதமிழ் வடநூ லுள்ள
விருத்தியும் பலநூல் தேர்ந்து
வரைகவி யதனாற் செய்த
வாகட மருளு வோமே 1 — 1

முடிவு :

நாறு மலமும் வத்திப்போம்
நன்றாய்ப் பிரமேக முண்டா
மீறு மண்ட வாதமுடன்
மிக்க சூலை கள்ளவாதம்
கூறுங் கிளியே யிதுதனிலே
குணமாய் வெளையு மௌமுனிவர்
தேறுஞ் சிவனார் திருவாணை
சொன்னார் சொன்னார் சொன்னாரே ! 681

காலம் :

இல்லை

குறிப்பு :

இதன் முகம்பு ஏட்டின் பின்புறம், 'விசக்கடி அறிவது' என்ற தலைப்பில் விளக்கம் இருக்கிறது, இதில், கெற்ப உற்பத்தியின் வரலாறு, கெற்ப தானங்கள், அங்காதி பாதம், அண்டவாதத்தின் குணம், மருந்துகள், மரண வாதத்தின் குணம், பித்த வேரிக்கு எண்ணெய், நயன தோஷத்தின் குணம், நேத்திர வியாதிக்கு மாத்திரை' வாதக் கிராணிக் குணம், வாத சன்னிக் குணம் நீர்ப் பீனிசத்தின் குணம் முதலியன உள்ளன.

* * *

வரிசை எண் : 2252 சுவடி எண் : 1195

## தெட்சிணாமூர்த்தி சௌமிய சாகரம் — 1200

ஏடுகள் : 157 கி. எண்ணிக்கை : 8000 அளவு : 45×3½ செ. மீ.
பக்கத்திற்கு : 9—10 வரிகள் ஆசிரியர் : தெட்சிணாமூர்த்தி பொருள் : மருத்துவம்
நிலைமை : பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்

தொடக்கம் :

ஆதி கணபதியும் அறுமுகனைப் பெத்த
ஆத்தாள்தன் பாதத்தை அன்பில் வைத்து
நீதியுடன் தெய்வரிசி முனிவர் பாதம்
நிகழ்த்தாம லனுதினமும் நெஞ்சில் வைத்து
சோதியெனும் வேதமுந் நூல்க ளாய்ந்து
சொல்லுகிறேன் சவுமியசா கரத்தை நன்றாய்

வாதியெனும் பெரியோர்கள் மகிழ்ந்து கொண்டு
மனதில்வைத்து உருமையுடன் வாசி காப்பே ! — 1

**முடிவு :**

முத்தான சாகரந்தான் மைந்தா மைந்தா
முழுதுமதை ஆதியந்தம் ஒன்றாய்ப் பார்த்து
சித்தான சித்துவிளை யாடு தற்கு
சிவசிவா குருநூலாய்த் தேர்ந்து கொண்டு
சுத்தான சுத்தற்குச் சோதி யாகும்
சோதிமய மானசிவ சூட்சந் தன்னைப்
பத்தான திசதீட்சை முத்தி பெற்று
பரமபதத் தெல்கையிலே பதிவாய் முற்றே ! 1201

அருமை நாகலிங்கம்

**காலம் :**

இவை புத்தகம், அலசூரில் வீத்திருந்த ஏகாம்பர சுவாமிகளினுடையது அவர் பரிபூரணமடைந்தபின், அவர் குமாரன் அனந்த ராமகிருஷ்ண முதலியாரால் ஸ்ரீமுகுந்த சுவாமிகளுக்குக் கொடுக்கப்பட்டது. ஸ்ரீ முகுந்த சுவாமி பூரண கிருபையால் தமது மாணாக்கனாகிய சீவரம் அருணாசல முதலிக்கு கிடைக்கப்பட்டது.

பிரமாதீச வருஷம் தை மாதம் 9-ந் தேதி
குருநாதன் துணையாகவும்

**குறிப்பு :**

இதில், ஐம்புலன் பஞ்சபுலன் விபரம், கரணம் விபரம், பிரிதிவியின் கூறு, அப்புவின் கூறு, தேயு, வாயு, ஆகாசக் கூறுகள், யேடணை விபரம், ஆதாரம் ஆறுக்கும் மூலக் கிணேசன் தியானம், சரிகை, கிரிகை, யோக, ஞான மார்க்கங்கள், நாலு பதவியும் பெற்றவர்கள் விபரம், நேமம் பத்து வகைக்கும் சொல்வது முதலியன உள்ளன.

இதன் பின்னர் மருந்துகள் எழுதிய ஏடு ஒன்று உளது.

❋ ❋ ❋

வரிசை எண் : 2253 சுவடி எண் : 1196

## அகத்தியர் — 5

ஏடுகள் : 2 கி. எண்ணிக்கை : 30 அளவு : 25×3 செ.மீ.
பக்கத்திற்கு : 7 வரிகள் ஆசிரியர் : அகத்தியர் பொருள்: மருந்துவம்
நிலைமை : மிகப் பழுது முழுமை : முற்றுமுளது. எழுத்து : தமிழ்

**தொடக்கம்**

நாடியதோர் நந்திமுகன் தனைப்ப ணிந்து
நயமாக உரைத்திடுவார் நந்தி பின்னும்
தேடியதோர் மந்திரத்தில் அஷ்ட்ட சித்தி
திறமாக உரைக்கிறேன் யோகி யோர்க்கும்

**முடிவு :**

பாசமுடன் தீசேந்து மவுன மாகி
பாங்கான நாத (வெளி) சிதம்ப ரத்தில்
ஓசையுடன் உறுதியாய்த் தேரும் பாரு
ஒருவருக்கும் விள்ளாதே அஞ்சு மூற்றே !

அகத்தியர் அருளிச் செய்த அஞ்சு
முற்றிற்று

குரு கடாட்ச முண்டாக வேண்டியது

**ரகம்ல்:**

இல்லை

**குறிப்பு :**

இது, எம்து சுவடி எண் 236-h/D 400 போன்றது. பாட வேறுபாடுகள் உள்ளன.

* * *

வரிசை எண் : 2254 சுவடி எண் ; 1197

## அகத்தியர் — எட்டு

ஏடுகள் : 3 கி. எண்ணிக்கை : 50 அளவு : 25×3 செ. மீ
பக்கத்திற்கு : 7—8 வரிகள் ஆசிரியர் : அகத்தியர் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்

தொடக்கம் :

துடிகொண்ட முப்பூவின் குருவைக் கேளு
சோதியுப்பு ஆதித்தனைச் சொல்லக் கேளு
முடிகொண்ட வழலையென்னுங் கல்லுப் பென்று
முனையான சுழினையென்றும் வண்ணா னென்றும்

முடிவு :

உண்மையுடன் நூலெடுத்து ஒடுக்கந் தன்னில்
ஒருமையுடன் மவுனமதாய் உகந்து பாரு
நன்மையுடன் மனதுகந்து பார்த்தா யானால்
நல்லபத முன்னாகும் நாடிப் பாரே! — 8

காலம் :

இல்லை

குறிப்பு :

இது, எமது சுவடி எண் 248-ஐ/D 438—ன் வேறாயது.

★ ★ ★

வரிசை எண் : 2255 சுவடி எண் : 1198

## அகத்தியர் — பனிரண்டு

ஏடுகள் : 4 கி. எண்ணிக்கை : 80 அளவு : 23×3 செ.மீ.
பக்கத்திற்கு : 7—8 வரிகள் ஆசிரியர் : அகத்தியர் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிகப் பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்

தொடக்கம் :

எங்கும் நிறைந்த உயிர்க்குயி ராகிய
எம்பிரா னிருபாத மாமிது
தங்கு மிடமுந் துரிக்கத் தடமுந்
தாண்டவஞ் சிலம் பொலியும்

முடிவு:

சொன்னதொரு பதினொன்றுக் கப்பால் கேளு
சொல்லுவார் மெஞ்ஞானத் தேசி யோர்கள்

பின்னுமவ ரிப்புவியில் பிறப்பதில்லை
............ ............ ............ — 12

(இவ்வளவே உள்ளது)

நாலம் :

இல்லை

குறிப்பு :

இது, எமது சுவடி எண் 226-c/D 359—ன் வேறாயது

★ ★ ★

வரிசை எண் : 2256 சுவடி எண் : 1199

## அகத்தியர் — 31

ஏடுகள் : 8 கி. எண்ணிக்கை : 200 அளவு : 25×3 செ.மீ.
பக்கத்திற்கு : 7 வரிகள் ஆசிரியர் : அகத்தியர் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்

தொடக்கம் :

ஆதியென்ற வாலையவ ளிருந்த வீடு
ஆச்சரிய மெத்தமெத்த அதுதான் பாரு
சோதியந்த நடுவீடு பீடமாக
சொகுசு பெற இனிதிருந்த துரைப்பெண் ணாத்தாள்
வீதியிலே யறுகோண வீதி யாகும்
விளையாடி நிற்பதொரு கோலம் பாரீர்
பாதியந்த மதிசூடி யிருந்த காமி
பத்துவய தாகுமிவள் வாமி தானே ! — 1

முடிவு :

தெளிவுதனில் தெளிவுதரும் சிவந்த மேனி
திருவடியு முடியுமொரு க்ஷணத்தில் காணும்
வழியதனில் நல்லவழி வழியுங் காட்டும்
மகத்தான வேதாந்தச் சித்தங் காட்டும்
ஒளிவதனில் ஒளிவுதரும் ஒருதி சொல்ல
உற்பனத்தில் உற்பனமாம் உறுதி தோணும்

வெளியதனில் வெளியாகி நாதத் துள்ளே
விளங்கிநின்ற வாலைப்பெண் ணாதி யாமே ! — 31

சற்குரு பாதமே கெதியென்று
நம்பு மனமே
சிவமயம்

**காலம் :**

இல்லை

**குறிப்பு :**

இதில், வாலைப் பெண், வெதாந்த சூட்சம், சாலவித்தை முதலான செய்திகள் காணக் கிடைக்கின்றன.

★ ★ ★

வரிசை எண் : 2257 சுவடி எண் : 1200

## அகத்தியர் கருமான் சூத்திரம் — 81

ஏடுகள் : 15. கி. எண்ணிக்கை 500. அளவு : 25×3 செ.மீ.
பக்கத்திற்கு ; 8 வரிகள் ஆசிரியர் : அகத்தியர் பொருள் : மருத்துவம்
நிலைமை : பழுது முழுமை : முற்றுமுளது. எழுத்து : தமிழ்.

**தொடக்கம் :**

அரியான முதலெழுத்தை அறிய மாட்டார்
அப்பாலும் நகாரபட் டணத்தைக் காணார்
அரியான முதலெழுத்தை சிவமுஞ் சத்தி
ஆச்சரியம் மகாரமடா பூமி யாச்சு
சரியான பதினெட்டு எழுத்துக் கெல்லாம்
தானந்த மாதியென் நின்ற தாலே
விரியாமல் விரிந்துபரப் பிரம்ம மாகி
வேதாந்த சாத்திரமாய் விளங்குந் தானே ! — 1

**முடிவு :**

தான்வலாய் நின்றுதவஞ் செய்ய வேணும்
சற்குருவின் தரிசனத்தைக் காண வேணும்

பானமுர்த முண்டுபசி தீர வேணும்
பங்கயத்தின் தெரிசினங்கள் பத்த வேணும்
நானவனாய் நிறைந்தஉப நிடத மார்க்கம்
நற்கமல மாயிரத்தெட் டிதழைப் பற்றி
கோனருளால் நின்றவனே நீநா னென்று
குருவிருக்குஞ் சந்நிதியில் குவிந்து போற்றே ! — 30

குரு முன்னிற்கவேணும்

காலம் :

இல்லை

குறிப்பு :

இதில், தலைப்பு 'அகத்தியர் கருமானச் சூத்திரம் 81' என்றுளது. பாடல்கள் 80 மட்டுமே உள்ளன.

ரசகற்பம், கருசூட்சம், இடைபிங்கலை, அண்டம், பூரணம், கற்ப மறியவும், பஞ்ச சத்திக் கற்பம், முதலியன உள்ளன.

★ ★ ★

வரிசை எண் : 2258 சுவடி எண் : 1201

## அகத்தியர் சகல கலைக்கியானச் சுருக்கம்

ஏடுகள் : 19 கி. எண்ணிக்கை : 600 அளவு : 25 × 3 செ.மீ
பக்கத்திற்கு : 8 வரிகள் ஆசிரியர் : அகத்தியர் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை ; முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஆதிசத்தி சிவமான சோதி காப்பு
அண்டமெனும் பூரணத்தின் அருளே காப்பு
சோதியெனும் வாலைமனோன் மணியின் காப்பு
சொல்லடங்கா விண்ணொளியின் சுடரே காப்பு

முடிவு :

என்னுடைய பிள்ளையென்றால் கற்பான் சூட்சம்
எட்டான அஷ்டசித்தும் பெறுவா னய்யா

கண்ணான தொழிலொன்று சொல்லக் கேளு
கருவான பிண்டமது சமூலம் வாங்கிப்
பண்ணான கல்லுரலில் நொறுக்கிக் கொண்டு
பாண்டமதில் தானிட்டுக் குழித்தயிலம் வாங்கி — 77

(இவ்வளவே உள்ளது)

**காலம் :**

இல்லை

**குறிப்பு :**

இது, எமது சுவடி எண் 235-e/D 392 'அகத்தியர் கலைஞான சுருக்கம்—120' போன்றது. இதன் 6-வது ஏடு பாதியாக முறிந்திருக்கிறது. 67—69 பாடல்கள் எழுதப் படவில்லை.

—0—

வரிசை எண் : 2259 சுவடி எண் : 1202

## அகத்தியர் சூத்திரம் மறைப்பு — 32

ஏடுகள் : 9 கி. எண்ணிக்கை : 350 அளவு : 25×3 செ.மீ.
பக்கத்திற்கு : 7—8 வரிகள் ஆசிரியர் : அகத்தியர் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்

**தொடக்கம் :**

உரைக்கிறேன் மறைப்புதன்னைச் சித்திர மாக
உலகத்தோர் பிழைப்பதற்குக் கருவை யெல்லாம்
நிறைக்கிறேன் சிவஞானம் தங்கித் தானால்
சித்திமுத்தி ரெண்டுமொன்றாய்ப் பாரு பாரு
திறைக்கிறேன் திருலோகஞ் செயிக்க லாகுஞ்
சொற்பெரிய அதிசயத்தில் விதன்றாத் தானும்
தரைக்கிறேன் அறிவுடனே செய்து பாரு
சாத்திரத்தின் கருவையெல்லாம் இதுவே பாரே!

**முடிவு :**

ஆகுமே வாதகெற்பமதில் கருவெல்லாஞ் சொன்னேன்
யோகமே லோகசித்தி யுப்பினில் பிறவியெல்லாம்

சாதுமே காரஞ்சித்தி சதாசிவனும் கேட்டால்
போதுமே பாவமெல்லாம் போக்குடன் செய்து பாரே ! — 32

அகத்தியர் சுவாமி அருளிச் செய்த

மறைப்பு — 32 முற்றிற்று

குருகடாட்ச முண்டாக வேண்டியது

காலம்

இல்லை

குறிப்பு :

இதில், வாதயோக அஞ்சனங்கள், வாத கற்பம், கருங்குருவித் தயிலம், பேய்ப் பீர்க்குத் தயிலம், மால்தேவி, யோகம் முதலியன கூறப்பட்டுள்ளன.

★ ★ ★

வரிசை எண் : 2260 சுவடி எண் : 1203

## அகத்தியர் ஞானம் — 6

ஏடுகள் : 2 கி. எண்ணிக்கை : 50 அளவு : 25×3 செ. மீ
பக்கத்திற்கு ; 6—7 வரிகள் ஆசிரியர் : அகத்தியர் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்

தொடக்கம்

சொல்லுவேன் சூட்சத்தின் மகிமை கேளு
சுருதிவெளிக் கெட்டாத சூட்ச மப்பா
வெல்லுவையே சொல்லுதற்குப் பிள்ளாய் பிள்ளாய்
வேதாந்த சித்தாந்த அறைபறையி னுள்ளே

முடிவு :

துலைக்குளியால் நிலைக்கவந்து அமுர்த முண்ணும்
சோதியாம் பராபரத்தின் சியலே யுன்னி
அலைத்து விட்டு ஆதியந்த மில்லா திடத்தை
அறிந்துமே கட்டிநின்ற விடந்தான் காணே ! — 6

அகத்தியர் ஆறு

முற்றும்

**காலம் :**

இல்லை

**குறிப்பு :**

இது, எமது சுவடி எண் 388-b/D804 'கொங்சணர் ஞானம்' என்ற சுவடி போன்றது, பாட வேறுபாடுகள் மிகுந்து காணப்படுகின்றன. ஆதாரங்கள் ஆறின் தத்துவங்களைக் கூறுகின்றது.



வரிசை எண் : 2261 சுவடி எண் : 1204

## அகத்தியர் தண்டக பட்சணி — 134

ஏடுகள் : 14 கி.எண்ணிக்கை : 350 அளவு : 25 × 3 செ.மீ.
பக்கத்திற்கு : 6—7 வரிகள் ஆசிரியர் : அகத்தியர் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்

**தொடக்கம் :**

பூவது வாச மாகும்
　　பொருந்திய தண்ட கத்தை
நாவது ஓடுந் தானே
　　நடுவணை யிருந்துங் கேளு
போவது வருவ தாகும்
　　பூரணங் காப்ப தாகும்
ஆவது கோடி வித்தை
　　ஆனந்தங் காப்புத் தானே! — 1

**முடிவு :**

முத்திலும் நூறுங் கூட்டி
　　முப்பத்தி ரெண்டும் பாரு
முத்திட மதுவாய்க் காணு
　　முற்பனத் துறுதி தோணும்
கத்தவ ரென்னூல் தன்னைக்
　　கைவிடார் கருவைக் காண்பர்

செத்தபே ரில்லை யின்னூல்
சேர்ப்பது முத்தி யாமே ! — 134

குருபாதமே கெதி

தெட்சணா மூர்த்தி துணை

ஹரி : ஓம்.

காலம் :

இல்லை

குறிப்பு :

இது, எமது சுவடி எண் 17–e/D 23 'அகத்தியர் பட்சணி நூற்றுமுப்பத்திரண்டு' போன்றது.

இதில் யோக ஞான முறைகள் பரிபாஷையாகக் கூறப்பட்டுள்ளன.

❋ ❋ ❋

வரிசை எண் : 2262 சுவடி எண் ; 1205

## அகத்தியர் ரசமணி மார்க்கம் — 14

ஏடுகள் : 5 கி. எண்ணிக்கை : 150 அளவு : 25×3 செ.மீ.
பக்கத்திற்கு : 6—7 வரிகள் ஆசிரியர் : அகத்தியர் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்

தொடக்கம் :

ஆதியந்த மில்லாத சின்மயத்தின் பாதம்
அகண்டபரி பூரணமாம் ஆத்தாள் பாதம்
சோதிநிற மாகிநின்ற கணேசன் பாதம்
சொல்தனக்கு எட்டாத சூட்சா சூட்சம்
சோதியென்ற பராபரத்தில் நந்தி பாதம்
வேதாந்த சாத்திரத்தின் வெளியின் மார்க்கம்
சோதியெனும் பராபரத்தில் நடனஞ் செய்யும்
சுடரொளியின் பாதமது காப்புத் தானே! — 1

முடிவு :

பார்க்கவே யிம்முறையைச் சொன்னா யானால்
பாழான நரகமது யெய்தும் பாரு
கார்க்கவே சீஷனுட மனத்தைக் கண்டு
கைமுறையாய்ச் சொல்லிவிடு ஞான மார்க்கம்
ஏர்க்கவே ரசமணியின் மார்க்கந் தானும்
என் மக்காள் சொல்லிவிட்டேன் ஏக மார்க்கம்
சேர்க்கவே இம்முறையை உனக்குச் சொன்னேன்
சிவகருணை பதினாலுஞ் செவிக்க முற்றே! — 14

குருகடாட்ச முண்டாக வேண்டியது
சுப்பிரமணியக் கடவுள் துணையுண்டாக வேண்டியது.

காலம் :

இல்லை

குறிப்பு :

இதில், ஞானக்குளிகை, விந்து ரசம், வாசிமூலி முதலான தத்துவக் கூறுகள் பேசப் படுகின்றன.

❋ ❋ ❋

வரிசை எண் : 2263 சுவடி எண் : 1206

## அகத்தியர் வழலைக் கருமான சூத்திரம் — 13

ஏடுகள் : 4 கி. எண்ணிக்கை : 100 அளவு : 25 × 3 செ.மீ
பக்கத்திற்கு : 6—7 வரிகள் ஆசிரியர் : அகத்தியர் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை ; முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

திருவிருக்கும் பொதிகைமலை தன்னில் வாழும்
தெட்சணா மூர்த்திகுரு பாதம் போற்றி
கருவழலை உருவெடுத்த மார்க்கஞ் சொல்ல
கருமுகனு மறுமுகனுங் கமலத் தானும்

இருளையற உருப்படுத்தும் வேதன் தேவி
இன்பமுட னிவர்களுட பதத்தைப் போற்றி
அருவுருவாய் விளங்கிமன தறிவாய் நின்ற
அப்பொருளை யெப்போது பிரிவார் சித்தே ! — 1

முடிவு :

முத்திதரும் கும்பமுனி பதத்தை நித்யம்
முனைமூக்கு மத்தியிலே உன்னிப் பாரு
சித்திதரும் பத்திதரும் கருமம் போகும்
செகசால மாய்கை யெல்லாந் தீருந் தீரும்
பத்தியுட னாசானை நித்தம் காரு
பணிவிடைகள் தப்பாமல் பாரு பாரு
அத்திபுற மேல்வட்டத் தய்யன் கோவில்
அடையாள மென்பெருமை அறிவால் முற்றே ! — 13

ஹரி : ஓம்.

காலம் :

இல்லை

குறிப்பு :

இது, தத்துவப் பொருளை மறைமுகமாகக் கூறுகிறது.

★ ★ ★

வரிசை எண் : 2264 சுவடி எண்: 1207

## இடைக்காட்டுச் சித்தர் சூத்திரம்

ஏடுகள் : 5 கி. எண்ணிக்கை : 150 அளவு : 25×3 செ.மீ
பக்கத்திற்கு : 7—8 வரிகள் ஆசிரியர் : இடைக்காட்டுச்சித்தர் பொருள் : மருத்துவம்.
நிலைமை : மிகப் மிகப் பழுது முழுமை : முற்றுமுளது. எழுத்து: தமிழ்

தொடக்கம் :

காருலாவு மேக.....................கங்கை சத்தி யேசிவம்
பாரில்வாழ் சவட்டுப்புச் சத்தியுப்பனை புவரப்பு வாகநீர்
சீருலாவு கங்கையார் தெளிந்த வெள்ளை யுப்பிலே
நீர்கலந்த போதழல் நீடுலாவு சுண்ணமே !

முடிவு :

வழலை யென்னவென்று சொல்ல வாதிநீதான் கேளப்பா
வழலையே நிலவுப்படா வாய்த்தகரி யுப்படா
வழலைமூல மடியடா வாறுமூன்றுங் குருவடா
வழலைதா னிதுவிட்டால் மட்டைவாதி யாவரே ! — 55

இடைக்காட்டார் சூத்திரம்

முற்றும்

காலம் :

இல்லை

குறிப்பு :

இதில் சாரச்சுண்ணம், தங்கம் வெள்ளி முதலியன கூறப்பட்டுள்ளன.

—O—

வரிசை எண் : 2265 சுவடி எண் : 1208

## கடைப்பிள்ளை நாயனார் கருமானச் சுருக்கம் — 100

ஏடுகள் : 27 கி. எண்ணிக்கை 300 அளவு : 25×3 செ.மீ.
பக்கத்திற்கு: 8—9 வரிகள் ஆசிரியர்: கடைப்பிள்ளை நயானார் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றற்றது. எழுத்து : தமிழ்

தொடக்கம் ;

சாத்திரம் பார்ப்போர்க் கிந்த
சமையமே வாய்க்குங் கேளு
தோத்திரஞ் செய்து பாரு
தொக்கிலே சூட்சங் காணும்
மாத்திர மரிய மூலம்
மங்நங்மாவா மவுனத் தாயைச்
சூத்திரச் சுருக்க மாகச்
செல்லுவேன் துதிக்கை காப்பே ! — 1

முடிவு :

தானென்ற யோகமடா பேதா (பேதம்)
தானேதான் வந்துதடா உனக்கு யோகம்

தானென்று வந்ததிந்த யோக மார்க்கம்
............ பெருமைதங்கி வந்த மூலம்
தானென்று நினைத்தாலே மவுன மோதி
............ ருமையறிந் துருமை யாகி
தானென்ற வெளிகாட்டி வெளியி னுள்ளே
............ நிராமயமா யிருந்த வாறே ! — 90

**காலம் :**

இல்லை

**குறிப்பு :**

இதில், மந்திர அட்சர மகிமை, பூரண நாளுக்கு விபரம் சுவாச விபரம், மதியமுர்த செய்கை, நவக்கிரகம், களச்சிக்கட்டு களச்சிக் கிருகை விபரம், தாய் பூசை, கணபதி பூசை, மவுன பூசை பதினெட்டுக் கருவின் முறை, குருமகிமை, அருகு மூலம், வசியமூல மந்திரம் முதலியன உள்ளன.

——o——

வரிசை எண் : 2266 சுவடி எண் : 1209

## கருவூரார் அதிசயம்

ஏடுகள் : 9 கி. எண்ணிக்கை : 200 அளவு : 25×3 செ.மீ.
பக்கத்திற்கு : 6—7 வரிகள் ஆசிரியர் : கருவூரார் பொருள் : மருத்துவம்
நிலைமை ; பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

**தொடக்கம் :**

உரைக்கிறேன் மறைப்புதனைச் சித்திர மாக
உலகத்தோர் பிழைப்பதற்குக் கருவை யெல்லாம்
திறக்குறேன் சிவஞானந் தங்கித் தானால்
சித்திமுத்தி ரெண்டுமுண்டாம் பாரு பாரு

**முடிவு :**

சாகுமே காரஞ் சத்தி சதாசிவனுங் கேட்டால்ப்
போகுமே மறப்பெல்லாம் போக்குடன் செய்துபாரே ! — 32

சிவகாமி கிருபையுண்டாக வேண்டியது
குரு கடாட்ச முண்டாக வேண்டியது

**காலம் :**

இல்லை

**குறிப்பு :**

இது, எமது சுவடி எண் 1202 'அகத்தியர் சூத்திரம் மறைப்பு 32' போன்றது. பாட வேறுபாடுகள் உள்ளன.

★ ★ ★

வரிசை எண் : 2267 சுவடி எண் : 1210

## கும்மிச் சித்தர் பாடல்

ஏடுகள் : 4 கி. எண்ணிக்கை : 80 அளவு : 25 × 3 செ.மீ
பக்கத்திற்கு : 7 வரிகள் ஆசிரியர் : கும்மிச் சித்தர் பொருள் : மருந்துவம்
நிலைமை ; மிக மிகப் பழுது முழுமை : முற்றுமுளது ? எழுத்து : தமிழ்

**தொடக்கம் :**

வெட்டவெளி வெளியா யிருக்க
வெளியில் மனோன்மணி மேவி நிற்க
நட்டதைத் தெய்வமென் றேதொழுவோர்கள்
நாணக்கும்மி யடியுங்கடி

**முடிவு:**

பஞ்சமா பாதகம் போய்விடுமே
பத்துவயசுக ளாயிடுமே
நெஞ்சகத்துள் மாயனைக் கண்டு
நிறுத்திக் கும்மி யடியுங்கடி — 31

பத்திதழ் மாயன் தனைக்காத்து
பரிந்து ருத்திரர் மேலிருக்கும்
சித்தர்கள் சித்தனை முக்கோண ராயனைச்
சிறக்கக் கும்மிய டியுங்கடி — 32

**காலம் :**

இல்லை

குறிப்பு :

இது, தத்துவப் பொருள் புகட்டும் மறைமுகக் கும்மிப் பாடல்,

* * *

வரிசை எண் : 2268 சுவடி எண் : 1211

## கொங்கணர் சூத்திரம் — 60

ஏடுகள் : 16 கி. எண்ணிக்கை : 300 அளவு : 25×3 செ.மீ
பக்கத்திற்கு : 6—7 வரிகள் ஆசிரியர் : கொங்கணர் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்

தொடக்கம் :

ஆதியந்தங் கடந்துநின்ற பூரணந்தான் போற்றி
அம்மனொடு மூலத்திற் கணேசன் காப்பு
பாதியிந்து மலர்க்கடந்த மூலர் காப்பு
பரமாகிப் படியிருந்த போகர் காப்பு
சோதியாய் நின்றதொரு பெரியோர் காப்பு
துரியவெளிக் குள்ளான ரிஷிகள் காப்பு
நீதிபெற அறுபதுக்குள் தீட்சை மார்க்கம்
நெறியாக உள்ளபடி நிலைக்கின் றேனே — 1

முடிவு :

கள்ளமென்று திரியாதே தீட்சை மார்க்கம்
கயிலாசத் தேகுடியா யிருக்கப் பண்ணும்
வெள்ளனென்ன மனங்கண்டால் விள்வா ரன்பாய்
வெறுவீணர் போல்திரிந்தா லேது மில்லை
உள்ளபடி முப்பாழுக் கப்பால் நின்ற
ஓகோகோ சுருதிமுடிந் திட்ட வாறு
வள்ளலே பூரணத்தின் தீட்சை சொன்னேன்
வளமான கனியொன்றாய்க் கனிந்த முற்றே ! — 67

சற்குரு கடாட்ச முண்டாக வேண்டியது
சுப்பிரமணியக் கடவுள் துணையுண்டாகி
ரெட்சிக்க வேண்டியது

**காலம் :**

இல்லை

**குறிப்பு :**

இது, தீட்சை மார்க்கத்தினை மறைமுகமாகக் கூறுகின்றது. இதன் கடைசியில் ''அரியன கமலைப்பிரன் ... ...... ...... நில்லு நில்லு; என்ற செய்யுளும், 'லேகியலட்டு' என்ற மருத்துவமும் எழுதிய ஏடு ஒன்றுளது.

—OO—

வரிசை எண் : 2269 சுவடி எண் : 1212

## கொங்கணர் ஞானபிண்ட உற்பத்தி

ஏடுகள் : 7 கி. எண்ணிக்கை : 150 அளவு : 25 × 3 செ.மீ.
பக்கத்திற்கு : 7 வரிகள் ஆசிரியர் : கொங்கணர் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்

**தொடக்கம் ;**

ஒன்றான கைலாச பரம்பரையாய் வந்த
உத்தசிவ மூலகுரு பதத்தைப் போற்றி
நன்றான காலாங்கி யெழுவர்பதம் போற்றி
நலம்பெரிய போகருட பதத்தைப் போற்றி

**முடிவு :**

வானென்ற அதுகடந்து சிலம்பொலியில் புக்கி
மயங்கியங்கே மாறிவந்தேன் மக்காள் மக்காள்
பானென்ற ரவிகோடி காந்தி யான
பரமகுரு மூலர்பாதம் பணிந்தேன் முற்றே ! -- 2

கொங்கணர் சுவாமி யருளிச் செய்த
ஞானபிண்ட உற்பத்தி

முற்றும்

**காலம் :**

இல்லை

குறிப்பு ;

இது, ஞானபிண்ட உற்பத்தியினை மறைபொருளாகக் கூறுகின்றது

இது, எமது சுவடி எண் 120-e/D188 போன்றது.

★ ★ ★

வரிசை எண் : 2270 சுவடி எண் : 1213

## கொங்கணர் பூசாவிதி

ஏடுகள் : 9 கி. எண்ணிக்கை : 200 அளவு : 25×3 செ. மீ.
பக்கத்திற்கு ; 7—8 வரிகள் ஆசிரியர் : கொங்கணர் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்

தொடக்கம் :

பராபரத்தி லடைந்துநின்ற மூல னாயன்
    பதமிறைஞ்சி முக்காலுந் தொழுது போற்றி
நிராமயத்தி லுணர்ந்துநின்ற பெரியோர் பாதம்
    நீங்காமற் றொழுதிறைஞ்சி நெஞ்சில் வைத்து
தராதரமா யெனையாண்ட போகர் பாதம்
    சதாநித்தந் தொழுதிறைஞ்சித் தாச னாகி
துறாதுறச்சி சிவன்பதமும் போற்றி போற்றி
    சொல்லுகிறே னேழுலட்சஞ் சுருக்கித் தானே ! — 1

முடிவு :

நேராதபி ............ வாத மேது
    நிலையாத மனத்தோர்க்கு ஞான மேது
பாராத மோடருக்கு யோக மேது
    பராபரையை அறியார்க்குப் பலன்தா னேது
காராத சீஷனுக்குக் குருதா னேது
    கைகாட்டத் தொழில்முறைக்குக் கரைதா னேது
தீராத கற்மிக்கு அறிவங் கேது
    செகசால மாடுதற்கு லவணங் கேனே. — 32

திருச்சிற்றம்பலம்

கொங்கணர் நாயனார் பூசாவிதி

சிவமயம்

**காலம்**

இல்லை

**குறிப்பு**

இதில், பூசாவிதி மறைமுகமாகக் கூறப்பட்டுள்ளது.

* * *

வரிசை எண் : 2271 சுவடி எண் : 1214

## சட்டைமுனியார் கற்ப விதி

ஏடுகள் : 9 கி. எண்ணிக்கை : 200 அளவு : 25 × 3 செ.மீ.
பக்கத்திற்கு : 8 வரிகள் ஆசிரியர் : சட்டை முனியார் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிகப் பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்

**தொடக்கம் :**

பாடுகிறேன் காயகற்பம் ஐங்கரனே காப்பு
பரிவான சின்மயத்தின் பாதங் காப்பு
நாடுகிறேன் சித்தருட பாதங் காப்பு
நாதாந்த மனோன்மணித்தாய் பதமே காப்பு

**முடிவு :**

பாரிந்த சூதமொன்று தங்கம் ணாலில் — 39

(இதற்கு மேல் இல்லை)

**காலம் :**

இல்லை

**குறிப்பு:**

இது, எமது சுவடி எண் 351/D694, சுவடி எண் 352/D695 போன்றது.

வரிசை எண் : 2272 சுவடி எண் : 121

# சட்டைமுனியார் நிகண்டு — 1200
# (சட்டைமுனி நாயனார் வாதநூல்)

ஏடுகள் : 105 கி. எண்ணிக்கை : 3000 அளவு : 33 × . செ.மீ.
பக்கத்திற்கு : 7—8 வரிகள் ஆசிரியர் : சட்டை முனியார் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிகப் மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்,

**தொடக்கம் :**

காப்பேடு

அகண்டபரி பூரணமா முமையாள் பாதம்
அப்புறத்தே நின்றதொரு அய்யர்பாதம்
+ + + + + + + + + + + +
முகண்டுஎன்னை ஈன்றெடுத்த சின்மயத்தின் பாதம்
மூவுலகு மெச்சுதற்குக் காப்புத் தானே — 1

சச்சிதானந்த சற்குரு பாதமே கெதி.
சட்டைமுனி நாயனார் வாதநூல்.

தேவிசகாயம்

ஆதியந்த மில்லாத பூரணத்தை நோக்கி
அடுக்கிநின்ற உன்மனைத்தாய் பதத்தைப் போற்றி

**முடிவு :**

நீட்டினே னாயிரத்து யிரநூ றுந்தான்
நேராக நிகண்டினுட கடைதான் முற்றே ! — 1227

வெண்பா

ஆதி சிவன்முதலா யண்டத்திற் சித்தரெல்லாம்
ஓதியநூ லெல்லாம் மொளிப்பென்று—சோதித்து (?)
எந்தைசட்டை நாதமுனி யார்வகுக்கு மேதெரிய
இந்தநூல் செப்பின ரே !

**காலம்:**

இல்லை

குறிப்பு :

இது, எமது சுவடி எண் 26 b,c/D44,45 போன்றது. தலைப்பு 'சட்டைமுனி நிகண்டு ஆயிரத்திருநூறு' எனல் வேண்டும் காப்பேட்டில் மட்டுமே 'சட்டைமுனியார் வாதநூல்' என்றுளது.

★ ★ ★

வரிசை எண் : 2273 சுவடி எண் : 1216

## சட்டைமுனியார் வாதம் — பத்து

ஏடுகள் : 3 கி. எண்ணிக்கை : 70 அளவு : 15×3 செ மீ.
பக்கத்திற்கு : 7 வரிகள் ஆசிரியர் : சட்டைமுனியார் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை: முற்றற்றது எழுத்து : தமிழ்

தொடக்கம் :

..................ய மறிந்தா யானால்
உள்புகுந்து யோகமொடு ஞான மார்க்கம்
நானென்ற ஆண்மையைத்தான் தள்ளிப் போடு
நலமான சடாட்சரத்தே செவித்தே நில்லு.

முடிவு :

நாட்டினோ மிந்தமுறை யாத்தா ளாணை
நலமான சின்மயத்தின் பாதத் தாணை
பூட்டினேன் சிவசுப்ர மணியத் தாணை
உத்தமமாம் பதினெட்டுச் சித்த ராணை
காட்டினா ளெனக்கிப்போ ஆத்தாள் தானும்
வாதத்துக் குருவென்றும் வாதந் தானே ? — 10

முற்றும்

(3 வரிகளே உள்ளன)

சாசனம் :

இல்லை

குறிப்பு :

இதில், வாதம் பற்றிய செய்திகள் கூறப்பட்டுள்ளன.

வரிசை எண் : 2274 சுவடி எண் : 1217

## சட்டைமுனியார் வேதாந்த வாதம் — 1000

ஏடுகள் : 56 கி. எண்ணிக்கை 2000 அளவு : $32\frac{1}{2} \times 3$ செ.மீ
பக்கத்திற்கு : 8—9 வரிகள் ஆசிரியர் : சட்டைமுனியார் பொருள் : வேதாந்த.
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

**தொடக்கம் :**

நிற்குணமாய் நிர்மலமாய் நிரஞ்சனமு மாகி
நேரான பூரணமாய் மனமெட் டாத
சற்குணமாய்ச் சமரசமாய்த் தானுந் தாண்டி
சச்சுதா னந்தவெளிக் கப்பால் நின்ற

**முடிவு :**

பொய்யென்று போகாமல் கருவை யெல்லாம்
புகட்டிவிட்டே னென்னூலில்..............
சுட்டியல்லோ கல்வத்தில் வெங்காயச் ......... — 321.

**காலம் :**

இல்லை

**குறிப்பு :**

இதில், பூரண லேகியம், யெண்ணை வாங்க, கடுங்காரம், செயநீர், நாகவங்கம் முதலியன உள்ளன. ஏடுகள் மிகவும் பூச்சியரித்திருப்பதால் படித்தறிவது கடினம்.

★ ★ ★

வரிசை எண் 2275 சுவடி எண் : 1218

## சுப்பிரமணியர் — 5

ஏடுகள் : 2 கி. எண்ணிக்கை : 20 அளவு : $25 \times 3$ செ.மீ.
பக்கத்திற்கு : 7 வரிகள் ஆசிரியர் ; சுப்பிரமணியர் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்

தொடக்கம் :

சீர்மேவும் நாவினா லணடத்தி டாமல்
செலுத்தடா மனந்தன்னை அண்ணாக்கு நேரே
பார்மேவும் அண்டவுச்சி தன்னி லேதான்
பாயுமடா வாசியுந்தான் பரத்த னூடே.
தார்மேவும் மூலமடா தன்னி லிங்கம்
தனித்துநிற்கும் அண்டத்துள் தமர்தா னிற்கும்
கார்மேவும் விந்துவடா பிடரிமார்க்கஞ் சென்று
கசிந்துருகி யிறங்குமடா கண்டு பாரே ? — 1

முடிவு :

எடுத்திடவே மெழுகதுபோல் திரண்டு நிற்கும்.
எந்தெந்த சரக்குவகை யெல்லாம் நீக்கும்
அடுத்துமிகத் தாம்பரத்தின் நீரை வாங்கும்
அடங்காத நோய்களெல்லாம் மருண்டே யோடும்.
கொடுத்திடவே நறை திறை மண்டலத்தில் மாறும்
கோடிகற்ப யுகம்வரைக்கும் வாழ லாகும்
கடுத்துமிகத் திரியாதே அகத்தியனே அய்யா
கண்மணியே யிதுபாகங் கருத்தைந்து முற்றே — 5

குருமூர்த்தி சகாயம் உண்டாக வேண்டியது.

சுபமஸ்து

ஹரி : ஓம்.

காலம் :

இல்லை

குறிப்பு :

இது, சுப்பிரமணியக் கடவுள் அகத்திய மகாமுனிவருக்கு உபதேசித்த வைத்திய நூல்.

வரிசை எண் : 2273 சுவடி எண் : 1219

## சுப்பிரமணியர் — 12

ஏடுகள் : 4 கி. எண்ணிக்கை 100 அளவு : 25×3 செ.மீ.
பக்கத்திற்கு ; 7 வரிகள் ஆசிரியர் : சுப்பிரமணியர் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றுமுளது. எழுத்து : தமிழ்.

**தொடக்கம் :**

சீர்பெருகும் வேதாந்தத் துள்மூ லத்தின்
செயலறிந்து மனமடங்குந் துரிய வீட்டில்
நீர்பெருகுங் காரமறிந் துண்டு வாசி
நேரறிந்து நிரைசெலுத்தி முனையி லேறி
பேர்பெருகுங் கேசரியைக் கண்டு போற்றி
பேசாமல் கித்திருந்த பெரியோர் பாதம்
நேர்பெருகு நெஞ்சில் வைத்துத் தொழுது போற்றி
நிச்சயமாய்ச் சொல்லுகிறேன் உப்பைத் தானே ! — 1

**முடிவு :**

வாவென்பாள் வாசியென்ற குதிரை (மேலே)
வங்குசிங்கு லகம்பூட்டி யேறி னார்கள்
(மே) வென்பாள் நாலையுந்தா னெட்டில் (சே)ர்த்து
மெய்யறிந்த சித்தனென்றால் வெளியைக் காட்டி
மாவென்பாள் துரியமணி பூரகத்தி னுள்ளே
வந்தமந்த னா(லுசத்தி) மவுன மூலம்
ஓவென்பா ளுகாரத்தி னொளியைப் பாரு
உதித்தொடுங்கி பன்னிரண்டில் ஒன்றாய் முற்றே ! — 12

ஹரி : ஓம்.

குருமூர்த்தி சகாயம்

**காலம் :**

இல்லை

**குறிப்பு :**

இதில் வைத்தியம் தத்துவ ரூபமாக பேசப்படுகிறது. எழுத்துக்கள் செல்லரித்துள்ளன

வரிசை எண் : 2277 சுவடி எண் : 1220

## சூரியானந்தர் – 12

ஏடுகள் : 4 கி. எண்ணிக்கை : 80 அளவு : 25×3 செ.மீ.
பக்கத்திற்கு : 7 வரிகள் ஆசிரியர் : சூரியானந்தர் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிகமிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

**தொடக்கம் :**

சீர்கொண்ட அருள்பரையின் .........நின்ற
தெட்சணாமூர்த்தியுட பாதங் காப்பு
......ர்கொண்ட சூத்திரமே பதிமூன்றுக்குள்
விரித்துரைப்பேன் பூவழலை பெருமை யெல்லாம்
நீர்கொண்ட உவ்க்ஷரத்தின் மகிமை தன்னை
நிசமாகச் சொல்லாமல் மறைத்துப் போட்டார்
ஆர்கொண்ட வேணியனார் உமைக்குச் சொன்னார்
ஆத்தாளு மடியேனுக் கரைந்திட் டாளே ! — 1

**முடிவு :**

சொல்வதென்ன ரேசகத்தை முன்னி டாதே
மேலேத்து மாத்திரையை மறந்தி டாதே
சொல்வதென்ன கற்பத்தை மறந்தி டாதே
செந்தூரஞ் சேறயிலே சிதறி டாதே
கொல்வதே அவிற்றையிலே மனம்பா றாதே
குளிகைக்கு சாறணைசெய் குணமா முற்றே — 13

சூரியானந்தர் சூஸ்த்திரம் பதிமுனு

முற்றும்

**காலம் :**

இல்லை

**குறிப்பு :**

இதில், ரேசக, பூரக, கும்பகம் முதலியன பேசப்படுகின்றன.

வரிசை எண் : 2278 சுவடி எண் : 1221

## சொரூபானந்தர் ஆனந்தக் களிப்பு — 50

ஏடுகள் : 13 கி. எண்ணிக்கை : 250 அளவு : 25×3 செ.மீ.
பக்கத்திற்கு : 7 வரிகள் ஆசிரியர் : சொரூபானந்தர் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்

**தொடக்கம்**

தனதந்த னாதந்த தானா — தன
 னாதந்த னாதந்த னானா (?)
அந்திக்கி முன்வந்தா னோடே - அதி
 காலமே அய்யனை அன்பாகக் கண்டு
சந்தித்து வையகந் தாங்கி - னாதன்
 தாங்கிய போதிலில் தன்னுடன் பொதிந்து

**முடிவு :**

செந்தமிழ்க் குள்ள காரம் — முன்னே
 சென்றமெதல் லாஞ்சிவ தீட்சைய தாகும்
பிந்திய பந்தடி போமே — கூட
 பேசிய தேவியின் தீட்சைய தாகும்
சந்தம மோங்காரங் கூட்டி — எங்கு ந்
 தானா யிருந்திடுஞ் சத்தியின் தீட்சை
வந்தாக்கால் தேகமுஞ் சித்தி — வாத
 முஞ் சித்தி சித்தியாந் தோழி — 50

சிவகாமி சகாயம்

**காலம் ;**

இல்லை

**குறிப்பு :**

இதில், 3–ம் ஏடு முகப்பு ஒடிந்துள்ளது. மருத்துவம் மிகவும் எளிய நடையில் கூறப்பட்டுள்ளது.



வரிசை எண் : 2279 சுவடி எண் : 1222

## ஞானத் தாழிசை

ஏடுகள் : 4 கி. எண்ணிக்கை : 60 அளவு : 25×3 செ.மீ.
பக்கத்திற்கு : 7 வரிகள். ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : மருத்துவம்
நிலைமை : மிகப் பழுது முழுமை : முற்றுமுளது. எழுத்து : தமிழ்,

**தொடக்கம் :**

சுழியாகிய முனைகண்டபின் சுத்தார் உறவத்தார்
சூதும்பல பொய்பேசிய தொழிலும்பிறக் கிட்டால்
வளியாகிய துறைகண்டபின் அனுஷ்டானமு மத்தாய்
வழங்குப்பல நூல்கத்திடும் நினவுபிறக் கிட்டாய்
விழியாகிய மலர்கண்டபின் உயிர்அர்ச்சினை யத்தாயி

**முடிவு :**

துலையாத உறக்கத்தொடு சுகதுக்கமு மற்றேன்
துறவாத ஞானக்கடல் முழுதுந்துறை கண்டேன்
அலையாமலி ருக்குஞ்சுகம் அதிலேகுடி புற்கேன்
அனந்தம்வெ ளிப்பட்டபின் யானொன்றையு மறியேன்

ஞானத் தாழிசை முற்றும்

குரு கடாக்ஷமுண்டாக வேண்டியது

**காலம்:**

இல்லை

**குறிப்பு :**

இது, எமது சுவடி எண் 142-d போன்றது.



வரிசை எண் : 2280 சுவடி எண் : 1223

# டமரானந்தர் வாதம் — 6

ஏடுகள் : 5 கி. எண்ணிக்கை : 100 அளவு : 25×3 செ.மீ
பக்கத்திற்கு : 7 வரிகள் ஆசிரியர் : டமரானந்தர் பொருள்: மருந்துவம்
நிலைமை : மிகப் பழுது முழுமை : முற்றுமுளது. எழுத்து : தமிழ்

தொடக்கம் :

ஆனந்த நிற்குணத்தி னருளே காப்பு
அடியேனை ஆண்ட நத்தி பதமே காப்பு
தானந்த சனகாதி ரிசிக ளெல்லாந்
தாசனென்றோ பேரும்பெற்றேன் டமரா னந்தன்
மோனெந்த பிரணவமாஞ் சுகதா னத்தில்
மூச்சற்று தவக்கிஞான நிஷ்டை செய்தேன்
ஞானந்தான் பேசிவைத்தேன் எழுவத் நஞ்சில்
நலமாக வாதவித்தை நவிலு வேனே ! — 1

முடிவு :

சத்துபதஞ் சலிவியாக்கிர மருக்குத் தான
பிள்ளைகளில் யானொருத்தன் .........
வித்தையெல்லாங் கண்டு கொண்டேன்
விசுவகர்மா தனக்குமுப தேசஞ் செய்தேன்
சித்துவிளை யாடுதற்குக் கிரந்த நூலைச்
செப்பினேன் சிவனூலைத் தெளிந்து பார்த்து
அத்துவித மானறம ரானந்தர்
அருளியசொல் பதினாறு மடக்க முற்றே !

காப்புள்பட பாட்டு — 17

குருமூர்த்தி சகாயம்

காலம் :

இல்லை

குறிப்பு :

இதில், வாதம் பற்றிய செய்திகள் மறைமுகமாகக் கூறப்பட்டுள்ளன.

★ ★ ★

வரிசை எண் : 2281 சுவடி எண் : 1224

## திருமூல நாயனார் — 80

ஏடுகள் : 17 கி. எண்ணிக்கை : 35 அளவு : 25×3 செ.மீ.
பக்கத்திற்கு : 7 வரிகள் ஆசிரியர் : திருமூலர் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

**தொடக்கம் ;**

அரிவுதிரு ........ான மானந்த குமரன்
சுருதி முடிவான சுருக்க மிதுவே
பரிவாத ........த மூண்டு சமாதி
யிருவரு மாயிரு பூரணங் காப்பே ! — 1

**முடிவு :**

முத்தியடா வேதாந்தஞ் சித்தாந்தஞ் சித்தி
முத்திபரி பூரணமாய்க் கண்டால் முத்தி
யுத்திபட்ட னிதுபாரு கருத்தாள் தோணும்
பூரணமே யிந்நூலாயிப் பொருந்தி ஆடும்
சத்தியடா சத்தியமாய் வருவா ளாத்தாள்
தன்கெட்டும் ரெண்டுமொன்றா யெய்தும் பாரு
வெத்தியடா வேதாந்தம் பார்த்துக் கொள்ள
வெகுசுருக்கு கருமானச் சுருக்க முற்றே ! — 85

காப்புள்பட பாட்டு – 85

சுப்பிரமணியக் கடவுள் துணையுண்டாக வேண்டியது.

**காலம் :**

இல்லை

**குறிப்பு :**

இது, கருமானச் சுருக்கம் பற்றிக் கூறுவது. மிகச் குட்சுமமாகக் கூறப்பட்டுள்ளது.

★ ★ ★

வரிசை எண் : 2282 சுவடி எண் : 1225

## திருமூலர் திருமந்திரம் — 30

ஏடுகள் : 7 கி. எண்ணிக்கை : 150 அளவு : 25×3 செ.மீ.
பக்கத்திற்கு : 7—8 வரிகள் ஆசிரியர் : திருமூலர் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்

**தொடக்கம் :**

மூத்திர மாவது மூவ ரிருப்பிடம்
மூத்திர மென்றது மூவ ரறிகிலார்
மூத்திர மாவது மூலத் தெழுந்தது
மூத்திரந் தன்னை முழுங்கச் சயிலமே — 1

**முடிவு :**

மேலாந் துரிசி வெண்கார முப்பூவுடன்
பாலாஞ் சதிரக் கள்ளிப்பால் வார்த்து
கோலா லேகீரிக் குக்குடம் போட்டிட
ஆகுங் குருபற்ப மாகும் வயிரமே ! — 30

கரிசாலை குப்பைமேனி …………
………… மகாரசமாவது நாகம்

விந்து ரசமாவது ரசம்

**காலம் :**

இல்லை

**குறிப்பு :**

இது, மூலமும் உரையுமாக உள்ளது. பாடல் 30-க்குப் பின் விந்து இறுக மருந்து சொல்லப்பட்டுள்ளது.



வரிசை எண் : 2283 சுவடி எண் : 1226

## திருமூலர் திருமந்திரம் — 100

ஏடுகள் : 11 கி. எண்ணிக்கை : 300 அளவு : 25×3 செ.மீ.
பக்கத்திற்கு : 7—10 வரிகள் ஆசிரியர் : திருமூலர் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்

**தொடக்கம் :**

உப்பும் புளியு முடன்கார சாரமும்
உப்பும் புளியு முடன்சூடன் கண்டனும்
உப்பும் புளியு முறவா மமுரியும்
உப்பும் புளியு முணர்வாகச் சூட்டியே! — 1

**முடிவு :**

யேளொடு முன்னே யெடுசுண்ணங் கலக்குரு
வாளொடு சூதரை வளமாய்ச் சரியூட்டி
நாளொடு வாய்நீரும் நல்ல வமுரியுங்
கோளொடு நாதங் குலாவி யிருக்குமே! —97

**காலம் :**

இல்லை

**குறிப்பு :**

இதில், சுண்ணம், அமுரி, ரசமணி, செந்தூரம், சுண்ணாம்பரிய பற்பக்குருவு கற்பம், அண்ட நாகம், பரிக்குரு, வங்க நாகம், கண்டரகுரு, அறுவகை உப்பு முதலியன கூறப்பட்டுள்ளன.



வரிசை எண் : 2284 சுவடி எண் : 1227

## திருமூலர் ரச சுத்தி

ஏடு : 3 கி. எண்ணிக்கை 75 அளவு : 25×3 செ.மீ. பக்கத்திற்கு : 7—8 வரிகள் ஆசிரியர் : திருமூலர் பொருள் : மருத்துவம் நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

**தொடக்கம் :**

சித்தர்க்குச் சொன்னேன் தெளிவாம் பெரியோர்க்கு
சித்தர்க்குச் சொன்னேன் தெளிவா மவுனிக்கு
சித்தர்க்குச் சொன்னேன் திறமான யோகிக்கு
சித்தர்க்குச் சொன்னேன் செயரச முத்துமே — 1

**முடிவு :**

சுண்ணம் வழலையால் துரைதோறுஞ் சுண்ணமாம்
வண்ணங் கல்லுப்பாலே வங்கமுஞ் சுண்ணம்
எண்ணிலா பற்ப மிசைந்தார்க ளங்கங்கள்
கண்ணுற வேதையாங் காயமுஞ் சித்தியே ! — 21

**காலம் :**

இல்லை

**குறிப்பு :**

இதில், ரசசுத்தி, பூநீறு, வெள்ளைக்கல், சூதம், வங்கம் முதலியன பேசப்படுகின்றன

★ ★ ★

வரிசை எண் : 2285 சுவடி எண் : 1228

## திருவள்ளுவநயினார் — அகவல்

ஏடு : 5 கி. எண்ணிக்கை : 100 அளவு : 25×3 செ.மீ. பக்கத்திற்கு: 7 வரிகள் ஆசிரியர் : திருவள்ளுவர் பொருள் : மருத்துவம் நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து ; தமிழ்

**தொடக்கம் :**

வேதம் பரஞ்சோதி பார்வையினால் விளங்கிய
சீரெட்டு ... ... ... கேள் ஓங்கார மாகியே
நின்றதோ ருண்மை பரத்தின் பதியுள்ளே
... ... த்துவ னரும்பரஞ் சோதி உருவம்

**முடிவு :**

... ... ... ... ... கோட்டை யழித்து
துரியா தீத விளக்கையு மேற்றி

ஆரிய நாடு திரையாடு மானால்
ஆனந்தக் கூற்றும் காணலு மாமே.

திருவள்ளுவர் நயினார் அகவல்

முற்றும்

ஸ்ரீ குருப்யோ நம :

**காலம் :**

இல்லை

**குறிப்பு :**

இதில், மூலாதாரத்திருப்பவன் விநாயகன், சிவ்விலிருப்பவன் மாயவன், வவ்விலிருப்பவன் ருத்திரன், மற்றும் மயேசுவரன், சதாசிவன் முதலானவர்கள் இருப்பிடம் முதலானவையும் வைத்தியமும் பேசப்படுகின்றன.



வரிசை எண் : 2286 சுவடி எண் : 1229

## தெட்சிணாமூர்த்தி அனாதி மவுனம் -- 12

ஏடுகள் : 3 கி. எண்ணிக்கை : 100 அளவு : 25 × 3 செ.மீ.
பக்கத்திற்கு : 7—8 வரிகள் ஆசிரியர் : தெட்சிணாமூர்த்தி பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்

**தொடக்கம் :**

ஆதியாய் நின்றமனோன் மணியைப் போற்றி
அகண்டவடி வானசிவன் தன்னைப் போற்றி
சோதியாய் நின்றபூ ரணத்தைப் போற்றி
சொல்லுகிறேன் நாதாக்கள் பாதம் போற்றி
நீதியாய் நின்றவை வரையும் போற்றி
நெஞ்சகத்தி லெப்போதும் நேச மான
வீதியிலே நடுவீதி கமலத் துள்ளே
வீத்திருந்த நந்திகுரு கணேசன் காப்பே ! — 1

**முடிவு :**

பத்தென்றால் பூசையென்ன யோக மென்ன
பரமான மனந்தானும் நினைக்க வேணும்
முத்திகுரு ஆயியடா மூன்று மொன்றாய்
முடிந்தவிடம் சுழினையடா மூட்டிப் பாரு

சத்தியிவ ளிருந்தவிடம் சுழினைக் கண்டந்
தாண்டவங்கள் கொலுச்சேர்வை தன்னைப் பாரு
முத்திகுரு ஆதியடா மூல வீட்டில்
முனையறிந்து மேலறி முற்றும் பாரே ! — 12

அனாதி மவுன முற்றும்

குரு கடாட்சம்

**காலம் :**

இல்லை

குறிப்பு :

இதில், மணி பீடம், பாஷண்டி, நந்தி, சுழினை முதலியன பேசப்படுகின்றன. தத்துவ ரூபமாகக் கூறப்பட்டுளது.

★ ★ ★

வரிசை எண் : 2287 சுவடி எண் : 1230

## தெட்சிணாமூர்த்தி சாத்திரம் — 6

ஏடுகள் : 2 கி, எண்ணிக்கை : 50 அளவு : 25 × 3 செ,மீ
பக்கத்திற்கு : 7 வரிகள் ஆசிரியர் : தெட்சிணாமூர்த்தி பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்

**தொடக்கம் :**

சத்தியமே பராபரமே ஒன்றே தெய்வம்
சகலகுரு சீவனும்யீ ரார்தா னாச்சு
புத்தியினா லறிந்தோர்கள் புண்ணி யோர்கள்
பூதலத்தில் கோடியிலே ஒருவ னுண்டு
பத்தியினால் மனம்ஒடுங்கி நிலையில் நிற்பார்
பாளிலே மனதைவிட்டார் பரமஞானி
சுத்தியென்ன ஆவதிநிலை சூக்ஷா சூட்சம்
சுருக்கிலே நிலையறிந்தால் மோட்சந் தானே ! — 1

**முடிவு :**

நிற்கயிலே மனக்கொறங்கு பொல்லா தப்பா
நெகுளாதே பளியாதே மைந்தா மைந்தா

போக்கவே நானென்ற ஆணுவத்தை அமக்கிக் கொள்ளு (?)
பேசாதே மவுனந்தா னேறு யேறு
பெண்ணாசை யோனியுட ஆசை தள்ளு
வேதமெல்லாம் சித்திக்கும் உபதேசம் வேணும்
சிகசாலம் யென்மகனேவாசி பாரு பாரே ! — 6

குருபாதம் கெதியாக வேணும்

**காலம்**

இல்லை

**குறிப்பு**

இதில், சரீர சுத்தி, நல்லொழுக்கம் முதலியன தத்துவ ரூபமாகக் கூறப்பட்டுள்ளன.

★ ★ ★

வரிசை எண் : 2288 சுவடி எண் : 1231

## தெட்சிணாமூர்த்தி சிவ சுருக்கம்—65

ஏடுகள் : 17 கி. எண்ணிக்கை : 500 அளவு : 25 × 3 செ.மீ. பக்கத்திற்கு : 7—8 வரிகள் ஆசிரியர் : தெட்சிணாமூர்த்தி பொருள் : மருத்துவம் நிலைமை : மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

**தொடக்கம் :**

பேர்சொன்னே னவள்சிவந்த சிருக்கி யாகும்
பேசறியோ மென்றுசொன்னாள் அம்மை கன்னி
ஊர்சொல்லு மவள்சிவந்த நச்சு வாச்சி
ஊதாரி வாய்கடிது பேசப் போமோ
சீர்சொல்லிக் காலாலே உதைத்தாள் பாரு
சீசீசீ அவள்குணந்தான் அவள்க்கே யாகும்
நேர்சொல்லி மார்பாஷை வாவா வென்றாள்
நேர்ந்துகொள் வேளையும்நீ நிறுத்திப் பேசே — 1

**முடிவு :**

சிவசுருக்க மறுபத்து நாலு மொன்றாய்
செப்பினேன் கருவறிந்து கண்டே கொள்ள
பவமறுக்குங் கசடறுக்கும் மவுனந் தோன்றும்
பதியான துலக்கமெல்லா மொருவ னான

நவசுருக்க மறிவாயே யென்தாய் பூசை
நாதாந்த ஸ்ரீகோணத் துள்ளாய் நின்று
சிவசுருக்கம் படித்தோர்கள் கேட்டோர் எல்லாஞ்
சிவயோகி எனப்பேறு பெற்றார் முற்றே !

சிவ சுருக்கம் முற்றும்

சிவகாமி சகாயம்

ஸ்ரீதேவி சகாயம்

வாலை, திரிபுரை, புவனை உண்டாக வேண்டியது

குருமூர்த்தி துணை,

காலம் :

இல்லை

குறிப்பு

இதில், சிவ சுருக்கமே அன்றி, கலைக் ஞானச்சுருக்க விபரமும் இடம் பெற்றுள்ளது. மறை பொருளாகவே கூறப்பட்டுளது.

★ ★ ★

வரிசை எண் : 2289 சுவடி எண் : 1232

## தெட்சிணாமூர்த்தி வகாரம்—12

ஏடுகள் : 4 கி. எண்ணிக்கை : 80 அளவு : 25×3 செ.மீ. பக்கத்திற்கு : 5—7 வரிகள் ஆசிரியர் : தெட்சிணாமூர்த்தி பொருள் : மருத்துவம் நிலைமை: மிகப் பழுது முழுமை: முற்றுமுளது எழுத்து : தமிழ்

தொடக்கம் :

தாயான உன்மனையாள் பாதம் போற்றி
சாஸ்த்திரமோ ராயிரத்தி யிருநூறுக்குள்
தேயாத கருவையெல்லாந் திரட்டிச் சேர்த்து
சொல்லடக்க மாயுரைத்தேன் வழலை மார்க்கம்
காயாகு மதைக்குறுக்கி யிதுவுஞ் சொன்னேன்
கனிபோலே யிந்தனூல் பனிரெண் டுக்குள்
வாயாறச் சொல்லுகிறேன் வழலை மார்க்கம்
மதியிரவி யண்டபிண்ட வளமை கேளே ! — 1

**முடிவு :**

நானென்ற அண்டபிண்டக் குருவைச் செய்ய
தவம்வேணும் சிவம்வேணும் தியானம் வேணும்
மானென்ற அக்கினியா முப்பைக் காண
மதிவேணும் விதிவேணும் வாசி வேணும்
நானென்ற யாணுவத்தை நீக்க வேணும்
நலமான சிவயோகம் நாட்டம் வேணும்
தேனென்ற சற்குருவைக் காற்க வேணும்
சித்தியடா பனிரண்டு சிறக்க முற்றே ! — 12

தெட்சிணாமூர்த்தி வகாரம் பனிரெண்டு
எழுதி முகிந்தது; முற்றும்.

**காலம் :**

இல்லை

**குறிப்பு :**

இதில், வைத்திய சாஸ்த்திரம் ஆயிரத்திருநூறில் சிறந்தவைகளைத் தொகுத்தெடுத்தோதப்பட்டுள்ளன. தத்துவ ரூபமாகப் பேசப்படுகிறது.



வரிசை எண் : 2290 சுவடி எண் : 1233

## நந்திதேவர் பலதிரட்டு — 33

ஏடுகள் : 3 கி. எண்ணிக்கை : 70 அளவு : 25×3 செ மீ.
பக்கத்திற்கு : 7—9 வரிகள் ஆசிரியர் : நந்திதேவர் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை ; முற்றுபெறாது எழுத்து : தமிழ்

**தொடக்கம் :**

வாறான சத்திதனை அறியா மல்தான்
மாதர்கள்தன் மாதவிடமாய் சத்தி யென்று
வீறான மானிடர்கள் பெண்ணைக் கூடி
மெய்யாக மாதாந்தங் கொள்வா னப்பா
கூறான மாதவிடாய் கொண்ட பேர்கள்
கொடிதான தேகமதில் அனலோ,மீறி
தீறாத யிருமலுட னீளை காசம்
சிக்கியல்லோ தேகமது அழிந்து போமே ! — 1

முடிவு :

தானான அமுர்தமதைத் தானே கொண்டு
    தாண்டினா ரண்டம்வரை வாஸ்சு தேவர்
ஊனான கற்பமென்ற உப்பு தன்னில்
    உத்தமனே கடுகளவு எடுத்துக் கொண்டு
கோனான குருவருளால் மண்டலமே கொண்டால்
    குருவான வாசியது அட......... .........ட்டில்
பூனான வாசியது அடங்கி நின்றால்
    பொருமையென்ற பெயராச்சு போக மாச்சே, — ?

காலம் :

இல்லை

குறிப்பு ;

இதில், பெண்களின் மாதவிலக்கு முதலான பல சிறந்த மருத்துவங்கள் கூறப்பட்டுள்ளன,



வரிசை எண் : 2291 சுவடி எண் : 1234

## நந்தீசர் சூத்திரம் — 30

ஏடுகள் : 5 கி, எண்ணிக்கை : 100 அளவு : 25×3 செ.மீ.
பக்கத்திற்கு : 7 வரிகள் ஆசிரியர் : நந்தீசர் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்

தொடக்கம் :

பூரண மான பொன்னடி மூலம்
காரண மான கணபதி பாதஞ்
சாறணை மேலாய்ச் சார்ந்திடுஞ் சோதி
ஆறணை மான வடிமுடி காப்பே ! — 1

முடிவு :

கோலமீ தென்ற குருவிது னாலே
காலனு மில்லை கவிகளு மில்லை

மாலெனு மமுர்த பானமு முண்டா
மூலமி தான முப்பது முற்றே ! — 33

தெட்சிணாமூர்த்தி துணை

நந்தீஸ்வர சூஸ்த்திரம் 30 முற்றும்

சிவகாமி சகாயம்

***காலம் :***

விரோதி வருஷம், கார்த்திகை மாதம் 21 ந் தேதி
புதவாரம் எழுதி முடிந்தது, முற்றும்

**குறிப்பு :**

மிகஎளிமையான வைத்தியங்கள் கூறப்பட்டுள்ளன.



வரிசை எண்: 2292 சுவடி எண் : 1235

## நந்தீசர் சூத்திரம் — 10

ஏடுகள் : 11 கி. எண்ணிக்கை : 200 அளவு : 25 × 3 செ.மீ.
பக்கத்திற்கு : 6 வரிகள் ஆசிரியர் : நந்தீசர் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்

**தொடக்கம் :**

நாலுநூ றாயிரக் கர்ப்பிணி மந்திரம்
நாலாயிரமு மின்னூலி லடக்கம்
பாலான வாத மறுபதும் பத்தியம்
காலாடி மின்னாள் கற்தறும் போதே !

**முடிவு :**

உறைகளைச் சொல்லி யுணர்வாய் விடுத்து
தறையினில் சாகா வரந்தான்ங் கொடுத்து
கூறையேற்றி விட்டுக் கைமுறை காட்டித்
திருமூலனைப் போலத் திடமுற முற்றே !

நந்திகேசுவர சுவாமி பாடல் சூத்திரம்

முற்றும்

குருகடாட்சமுண்டாக

**காலம் :**

இய்லை

**குறிப்பு :**

இதில், வாதம் வேனத முதலானவைகள் பற்றிக் கூறப்பட்டுள்ளன.



வரிசை எண் : 2293 சுவடி எண் : 123

## பிரம முனி — 13

ஏடுகள் : 4 கி. எண்ணிக்கை : 100 அளவு : 25 × 3 செ.மீ.
பக்கத்திற்கு : 7 – 8 வரிகள் ஆசிரியர் : பிரமமுனி பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்

**தொடக்கம் :**

திருவளரு மெய்ஞ்ஞான சோதி பாதம்
செப்பரிய கணேசனொடு கந்தன் பாதம்
மருஉருவாய் ஆதியந்த வெளியுந் தாண்டி
அகண்டுநின்ற சின்மயந்தின் பாதம் போற்றி
பரிவுடைய பூரணத்தின் சூட்சம் சூட்சம்
பதியிருந்த மனோன்மணித்தாய் பாதம் போற்றி
குருவருளால் நாதாக்கள் பாதம் போற்றி
கூறுகிறேன் வைத்தியசூத திரந்தான் பாரேன் — 1

**முடிவு :**

காசிடைதான் குருபோட்டுச் செய்தா யானால்
...... காணா தோடுமடா நோய்க ளெல்லாம்
கூசாதே வாதியென்றால் செய்வான் பாரு
குறிகெட்ட வயித்தியரோ செய்யப் போறார்
வாசியென்ற முப்பூவும் செய்யா விட்டால்
மய்ந்தனே பூநீரும் நன்றாய்ப் போது
தேசியே பதினாறு திரம்தான் சுத்தி
செய்திடவே வைத்தியத்தைச் செய்து பாரே ! — 13

**காலம் :**

இல்லை

குறிப்பு :

இதில், முப்பு பற்றிய செய்திகள் கூறப்பட்டுள்ளன. தலைப்பில் 'சோதிடம்' என்று எழுதப்பட்டுளது.

—o—

வரிசை எண் : 2294 சுவடி எண் : 1237

## புசுண்டர் — 80

ஏடுகள் : 23 கி. எண்ணிக்கை 400 அளவு : 25×3 செ மீ.
பக்கத்திற்கு : 7 வரிகள் ஆசிரியர் : புசுண்டர் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

சிறந்தபரா பரமாகி யெங்குந் தானாய்
தீர்க்கமுடன் ரவிமதியும் சுடர்மூன் றாகி
பிறந்தருளு மைம்பூத மாய்கை தோன்றி
பல்லாயிரங் கோடியண்டம் படைத்த போதம்
வறம்பெருகி யனந்தனந்தம் முயிறு மாகி
மதபேத மாகவுந்தான் வடிவைக் காட்டி
சறம்பெருகி யண்டத்தி லெழுந்து நின்ற
சச்சுதா னந்தமதைப் பணிகு வோமே ! — 1.

முடிவு ;

பாறடா பரப்பிரம்மத் தூடே சென்று
பருதிமதி அக்கினிஇம் மூன்று மொன்றாய்
நேறடா ஆதியுந்தான் யெதிரே தன்னை
நிட்சயமாய்ப் பார்த்திடவே நீறிப் போவான்
கூறடா கோடான கோடி சித்து
குறித்திடவே ஆடுமடா பிரமத் தாலே
வீறடா யிந்நூலைக் கொடுத்தி டாதே
வெத்தியுள்ள யெண்பதுந்தான் விளங்க முற்றே

குரு முன்னிற்க வேணும்.

காலம் :

இல்லை

குறிப்பு :

இதில், புஜண்டர் 80 என்று எல்லா ஏடுகளிலும் எழுதப்பட்டுள்ளது. சிறந்த வைத்திய முறைகள் உள்ளன.

★ ★ ★

வரிசை எண் : 2295 சுவடி எண் : 1238

## போகநாதர் சோடச பூரணம் — 51

ஏடுகள் : 10 கி. எண்ணிக்கை : 200 அளவு : 25×3 செ. மீ.
பக்கத்திற்கு : வரிகள் ஆசிரியர் : போகநாதர் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்

**தொடக்கம் :**

முப்பாழுக் கப்பால் முதலான நிற்குணப்பாழ்
அப்பாழ் வழலை அணிவிரால் - எப்போதும்
தானவனாய் நிற்கும் சகலகுரு வானதொன்றாம்
ஆனைமுகன் காப்பா மறி,

முடிவு :

வானுறு சூடனொன்று வாருதி உப்பதொன்று
காலுறு கல்லின்னாதம் அகலரிது அன்னபேதி
ஊனுறு மமுரி மந்திரமு முனியான குருவா முத்தே — 51

(3 வரிகளே உள்ளன)

முத்தும்

திருச்சித்தம்பலந் துணை

வீறம் வெடியுப்பு .........பாலும் விட்டரைத்து

**காலம்**

இல்லை

குறிப்பு :

இதில், பல வைத்தியங்களும், அண்டச் சுண்ணமும் கூறப்பட்டுள்ளன.

—oo—

வரிசை எண் : 2296 சுவடி எண் : 1239

## மச்சமுனியார் சூத்திரம் — 80

ஏடுகள் : 10 கி. ஏண்ணிக்கை : 200 அளவு : 25×3 செ.மீ.
பக்கத்திற்கு : 7—8 வரிகள் ஆசிரியர் : மச்சமுனி பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்

**தொடக்கம் ;**

நடுமைய காரம் வகாரத் திரையமே
கடவிகடத் தானைமுகன் காப்பாந் — தடமான
சாரத் துரையுந் தனிச்சூடந் தண்ணீருங்
காரத் துரையே கண்ங்காண்.

முடிவு :

ஒப்பான ஆயிரமா மிதழ்க் கண்டவன்
எப்போதுஞ் சாகா திருப்பன்ஞ் சிவனவன்
அப்பா பறாபறத் தான வெழுத்தை
செப்பச் சிவமாஞ் சேர்வு முற்றே. — 82

மச்சமுனி நாயனார் சூத்திரம் எண்பது
எழுதி நிறைந்தது முற்றும்

சுப்பிரமணியக் கடவுள் துணை உண்டாக வேண்டியது

குருமூர்த்தி சகாயம்
தெட்சணாமூர்த்தி துணை உண்டாக வேண்டியது

**காலம் :**

இல்லை

குறிப்பு :

இதில், முப்பு, விந்துநீர், பூச் சுன்னம் முதலியன கூறப்பட்டுள்ளன.

* * *

வரிசை எண் : 2297 சுவடி எண் : 1240

# யாகோபு — 300

ஏடுகள் ; 65 கி.எண்ணிக்கை : 1200 அளவு : 25×3 செ.மீ.
பக்கத்திற்கு : 7 - 8 வரிகள் ஆசிரியர் : யாகோபு பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்

**தொடக்கம் :**

சவுக்காரம்

மயில்தனிலே யேறுகின்ற முருகன் பாதம்
மகத்தான கணபதியின் பாதம் போற்றி
அயிலமெல்லாம் நிறைந்திருந்த அம்மன் பாதம்
அடுத்துநின்ற பரமசிவன் பாதந் தன்னை
ஒயிலாகத் துதிசெய்து மனத்துள் வைத்து
ஒழுங்காக எழுநுற்றைச் சுருக்கி யானும்
குயில்போலப் பாடினேன் முன்னூற் தன்னில்
கொட்டினேன் வாதவயித் தியமுந் தானே ! — 1

**முடிவு :**

பிறமியங்... .....வெட்டை சொட்டு முத்திறு
பிலனழியும் நீறாமை பிரிந்து போகும்
குறமான புண்ணாறும் லிங்கந் தன்னில்
குளிரினது அரியதெல்லாங் குடிவிட் டோடும்
திறமாகுங் கிறிச்சினங்கள் சொல்லா தோடும்
தீந்துவிடும் மண்டூர செந்தூ ரந்தான்
தம்பமற எடுத்துவைத்த செந்தூ ரத்தில்
தாக்கியரை ............ ............ ......... — 288

(இவ்வளவே உள்ளது)

**காலம் :**

இல்லை

**குறிப்பு :**

இதில் சவுக்காரம், வழலைச் சுண்ணம், அரிதார பஸ்பம், சூதக்கட்டு, தாம்பூர வெட்டை, ஷசுண்ணம், அயக்காந்த பற்பம், திருவரங்க செந்தூரம், வெடியுப்புத் திராவகம், வாலைரசம் எடுக்க, வாலைரசபற்பம், நாகற்...... பற்பம், தீரும்வியாதி செந்தூரத்தில் வன்னி பற்பஞ் சேர்க்க, தாளக சிந்தூரம் முதலியன உள்ளன.

வரிசை எண் : 2298

சுவடி எண் : 1241

# யாகோபு செந்தூரம்

ஏடுகள் : 13 கி. எண்ணிக்கை 300 அளவு : 32×3 செ மீ
பக்கத்திற்கு : 8 வரிகள் ஆசிரியர் : யாகோபு பொருள் : மருத்துவ
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

எகுவதனைத் தகடாக்கி முட்டிச் சாத்தி
லேழுதரம் தோய்த்தாட்டி யடிக்கத் தூளாம்
பகருமுன் னிலைச்சாத்தா லரைத்த ரைத்து
பரும்புட மாய்ப்போடச் செந்தூர மாகும்
அகிலமதில் நோயாள ரன்பு கொண்டு
அரிந்தனுப்பா னத்துடனே யீயக் குன்மம்
வெகுபிணியை யகத்திமெய்யை யெகுத்தூ ணாக்கி
விளங்க வயிக்கு மிந்திரியம் விளைவு மாமே! — 1

முடிவு :

காயிது...... வருமிடித்துப் பாகுதனில்
கலந்துவெள் ளாட்டுநெய்யுஞ் சேரு வார்த்து
தீயிரக்கி யிடுகாசும் தன்னி லுண்ண
சீமூலக் கிராணிரெத்தக் கடுப்பு மாறும்
நோயகலுங் குதிவாத மாங்கி றாணி
நுக்குமல மிரங்குமுன்னே ரெத்தக் காய்ப்பு
வாய்வுபித்த சிலேஷ்டுமத்தின் பேதி நீங்கி
வய-மிதைப் புகலாதே மனதி லூனே! — 51

காலம் :

இல்லை

குறிப்பு :

இதில், எஃகு செந்தூரம், லோக செந்தூரம், தாம்புர மெழுகுலோக தாம்பூர செந்தூரம், சுயமக்கினி, பழத்தரை பொடி, நாக பற்பம், தாமிர பற்பம், உப்பு பற்பம், குன்மத்துக்கு திராவகம், விரைவாதத்துக்கு, காச வகைக்கு, வாதகுன்ம சுவாச காசத்துக்கு, நீர்க்கட்டுக்கு, சோம்பு திராவகம், முதலியன உள்ளன.

★ ★ ★

வரிசை எண் 2299 சுவடி எண் : 1212

# யூகிமுனி பிடிவாத சுருக்கம்—100-ல் எடுத்தெழுதிய சீன ரசகற்பூரம்

ஏடுகள் : 2 கி. எண்ணிக்கை : 50 அளவு : 25 × 3 செ.மீ.
பக்கத்திற்கு : 8 வரிகள் ஆசிரியர் ; யூகிமுனி பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

**தொடக்கம் :**

காண ....... ........... ........... ...........
கனிவாக பெருநூலில் பெருசாய்ச் சொன்னேன்
ஊணவே ............ அடித்த எத்தில்
விந்துமே யிருக்காது குறைந்து போகும்
தோணவே நெருப்புக்கு நின்றிடாது
து......யாக அதைஉண்ணக் காய சித்தி
வேணவே யில்லையப்பா பிணிகள் போகா
விதமாக சித்தியில்லை வீத மாமே — 1

**முடிவு :**

கேளுநீ ரெண்டுபத்து சாமந் தானும்
கொடியாக எ......... பற்ப மாகும்
ஆளுமே வயிரம்போ லிருக்கும் பாரு
அடவாகு .......... ......... ........ — 10

**காலம் :**

இல்லை

**குறிப்பு :**

இதில் பாடல்கள் முழுமையாக இல்லை.



வரிசை எண் : 2300 சுவடி எண் : 1243

## யூகிமுனி வாதவிதி 5ரு-ல் எடுத் தெழுதியது

ஏடுகள் : 6 கி. எண்ணிக்கை : 125 அளவு : 25×3 செ.மீ.
பக்கத்திற்கு : 8 வரிகள் ஆசிரியர் : யூகிமுனி பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றுமுளது? எழுத்து : தமிழ்

**தொடக்கம் ;**

ஆமேதான் சீனரச கற்பூ ரத்தை
ஆதியாய்ச் சொல்லுகிறேன் உலகி லுள்ள
(வா) மேதான் வெடியுப்பு அஞ்சாங் காச்சல்
வளமாகப் பலம்பத்து நிறுத்துக் கொண்டு
தாமேதாம் பழம்புளியும் அஞ்சு பத்து
........................ ............ ...... ... ......
காமேதா னிரண்டு மொன்றா யிடித்து நீயும்
கனிவாகப் புதுச்சட்டி அடுப்பி லேத்தே ! — 1

**முடிவு :**

பானென்ற சீனரச கற்பூ ரத்தை
பதிவாக யெடுத்துநீ தான ரைத்து
வானென்ற ... ..ள்ளியெட்டு செம்பு ரெண்டு
வடிவாகச் சேர்த்துருக்கிப் பணிம......
... ........ ......டைதா னுள்ளே தாக்கு
நவமாக மாத்தெட்டுக் காணு மப்பா
கோனென்ற குருவருளைச் சொல்லிப் போட்டேன்
குணங்கெட்ட மடையரே குணமும் பாரே ! — 25

**காலம் :**

இல்லை

**குறிப்பு :**

இதில், சீனரச கற்பூரம் பற்றிய பல செய்திகள் கூறப்பட்டுள்ளன.



வரிசை எண் : 2301 சுவடி எண் : 1244

# இராமதேவர் அஷ்டாங்க தெட்சணி பாடல்

ஏடுகள் : 9 கி. எண்ணிக்கை : 200 அளவு : 25 × 3 செ.மீ
பக்கத்திற்கு : 8 வரிகள் ஆசிரியர் : இராமதேவர் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

**தொடக்கம் :**

ஆதியிலே வாலைமனோன் மணித்தாய் கூவி
அழைத்திட்டு ஆதியந்த மறியச் சொன்னாள்
சோதியிலே கருவுருவை உன்னிப் பாரு
சொல்லவொண்ணா அதிசயங்கள் தானே தோற்றும்
நீதியிலே சதானந்தி என்னைப் பெற்றாள்
நீள்திசையி லுள்ளசித்தர் மெச்சிக் கொள்ள
வாதியென வந்தோர்க்குத் திறவு கோல்போல்
வசனித்தேன் பத்துமொரு எட்டும் ரெண்டாய் ! — 1

**முடிவு :**

தானவனாய் நின்றதொரு மெழுகு தன்னை
தம்பலத்தால் நாதவிந்து தன்னா லட்டி
கோனான சிமிழ்தனிலே பதனம் பண்ணி
கொடிதான நோய்களுக்குக் குன்றி யீய்வாய்
ஊனான ஊனைவிட்டுப் பிணிக ளெல்லாம்
ஓடிவிடும் அவனிருக்கும் ஊரை விட்டு
தேனான பட்சணியின் கருவி னாலே
சிவசிவா அஷ்டாங்கந் திறம்பெற் றேனே ! — 40

**காலம் :**

இல்லை

**குறிப்பு :**

இதில், மருத்துவம், மறைமுகமாகத் தத்துவ ரூபமாகக் கூறப்பட்டுள்ளது.



வரிசை எண் : 2302 சுவடி எண் : 1245

# இராமதேவர் சூத்திரம் — 30

ஏடுகள் : 11 கி. எண்ணிக்கை : 200 அளவு : 25 × 3 செ.மீ.
பக்கத்திற்கு : 6—7 வரிகள் ஆசிரியர் : இராமதேவர் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை ; முற்றுமுளது எழுத்து : தமிழ்

**தொடக்கம் :**

ஆதிகுரு வானதொரு பிரமன் பாதம்
அனுதினமும் நெஞ்சில்வைத்து அருளை நோக்கி
சோதிவெளிக் கப்பாலே துலங்குஞ் சத்தி
துணையெனவே கருமானச் சுருக்கஞ் சொல்ல
நீதியுள்ள வாலைமனோன் மணிதான் வந்து
நிலைத்தபொருள் கருமறைப்பை நிலததுள் ளோர்க்கு
சோதினையாய்ச் சொல்லுவைநீ ராமா வென்று
சொல்லிமனக் கசடகத்தித் துதித்தாள் பாரே — 1

**முடிவு :**

முத்துமிவதைப் பார்க்க......... மவுன மாக
மூடருடன் பேசாதே வாதாடாதே
சுத்தமுள்ள பெரியோரைத் தொண்டு பண்ணி
துவாதசாந் தத்தில்மனந் துலங்கி நில்லு
சித்தமே சிவன்செயலதா னப்பா சொன்னேன்
திருகோண முள்ளசத்தி யரிவாம் பாரு
உத்தபொரு ளீதல்லா லொன்று மில்லை
யூடாடும் வாசியைநீ வணங்கு முத்தே ! — 31

இராமதேவர் சூத்திரம் முப்பது

முடிந்தது ; முத்தும்

**காலம் :**

இல்லை

**குறிப்பு :**

இதில், செயநீரரிதாரம், முதலியன பேசப்பட்டுள்ளன. இதன் பின் கீழ்க்கண்ட செய்யுள் இருக்கிறது

விளம்புரே னின்னமொரு விபரங் கேளு
வேதாந்த மரம்போலே அலையாதே நீ
தழும்பெறவே ஓடெடுத்து அம்மென் றிட்டு
சகலவுயிர் மசிமசிதுரமா தேவி யென்று
குளம்புடனே கடுகையுங் கைக்கொண்டு கீரி
கோட்டையிட்டுப் பெருவிரலால் மிதிக்கும் போது
வளம்பெறவே குதம்வலிமார்தி விக்கம் காணும்
வாங்கிவிட்டால் பிழைத்திடுவானல்லா விட்டாள் மரணந் தானே!



வரிசை எண் : 2303 சுவடி எண்: 1246

## இராமதேவர் பட்சணி

ஏடுகள் : 27 கி. எண்ணிக்கை : 600 அளவு : 25 × 3 செ.மீ
பக்கத்திற்கு : 8 வரிகள் ஆசிரியர் : இராமதேவர் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிகப் பழுது முழுமை : முற்றுமுளது. எழுத்து: தமிழ்

**தொடக்கம் :**

ஆதியந்த நடுவிருந்த சோதி காப்பு
அகண்டபரி பூரணமே அறிவே காப்பு
நீதிகலை வாணிதரு கந்தன் காப்பு
நிரஞ்சனமாய் நிற்குணவ தீதங் காப்பு
பாதியந்த ளிரவுகனல் காலொன் றான
பட்சணியே நிட்சயமாம் பாதங் காப்பு
வீதியாய்ப் பட்சணியாய் விளங்குஞ் சித்தி
விக்கினேசுபரப் பிள்ளையார் காப்புத் தானே — 1

**முடிவு :**

சொல்லடா யின்மறிந்து வாசி யோகஞ்
சூட்டடா சகலகனை சோதி யெல்லாஞ்
கல்லடா காயசித்தி யோக மார்க்கம்
கருவென்ன சவுக்கார மாதி யாதி
அல்லடா பசங்களுக்கு யின்னூ லீய்ந்தால்
நதியிலிடி விழுந்துதலை வெடிக்கு மண்டை

வெல்லடா நவகோடி சித்து மாடும்
 வேதாந்த பட்சணிய தீத முற்றே ! — 109

தெட்சணாமூர்த்தி பாதமே கெதி
சுப்பிரமணியக் கடவுள் துணையுண்டாக வேணும்

**காலம் :**

இல்லை

**குறிப்பு :**

இதில், தம்பனம், வசியம், முதலானவைகளும், அவைகளுக்கான மருந்து செய் முறைகளும் கூறப்பட்டுள்ளன.



**வரிசை எண் :** 2304 சுவடி எண் : 1247

## இராமதேவர் பரஞான வினோத கேசரி – 100

ஏடுகள் : 20 கி. எண்ணிக்கை : 100 அளவு : 2 × 3 செ மீ.
**பக்கத்திற்கு :** 8—9 வரிகள் ஆசிரியர் : இராமதேவர் பொருள் : மருத்துவம்
**நிலைமை :** மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்

**தொடக்கம் :**

ஆதிபரா பரனான கேசரியைத் தானும்
 அசையாமல் நெஞ்சத்தில் அறிவதனால் நிறுத்தி
நீதியெனும் பரஞான கேசரி வினோதம்
 நேர்மையுடன் யான்பாட குருவருளே சரணம்
சாதியெனும் யெழு கையும் தன்வசமாய்க் கண்டு
 சச்சுதா னந்தமென்ற அமுர்தமதைக் கொண்டு
சோதியெனுஞ் செகசோதி ஞானமய மான
 தாண்டாத தீபமதைத் துணையெனக் கொண் டேனே — 1

**முடிவு :**

முத்தான் பரஞான் கேசரி விநோதம்
 முழுதுமிதை மவுனமதாய் மனதுள்க் கொண்டு

சித்தான சித்துவிளை யாடு மைந்தா
　　சிவயோக புனிதமதில் சேர்ந்து நில்லு
வித்தாரந் தான்பேசித் திரிவா னோடே
　　வீரியங்கள் பேசாதே விண்ணை நோக்கி
கர்த்தாவே கதியெனவே கமலம் நோக்கி
　　கற்பூர தீபமதில் கருத்தாய் முற்றே ! — 101

குருசுவாமி பாதாம்புயந் துணை.

**காலம் :**

இல்லை

**குறிப்பு ;**

இதில், அகாரம், உகாரம், வாலை சிதம்பர பூசை, மால்தேவிக்கட்டு, செம்புக்கட்டு வெள்ளி முறை, பற்பச் செயனீர், சீஷருக்கு உபதேசம் பண்ண, ஓமகுண்ட மறிய. செம்பு இரும்பாக, அரிதார ஈயம், சத்திசிவமணி, ரசமணி நாகரசக்களங்கு, குரு, வேதை ரச குளிகை, முதலியன உள்ளன.

இதன் பின் கடைசி 1½ ஏடுகளில் வேறு மருத்துவங்கள் எழுதப்பட்டுள்ளன.

★ ★ ★

வரிசை எண் : 2305 　　　　சுவடி எண் : 1248

## ரோமரிஷி சதநூல் சிவக்கியான போதகம் — 100

ஏடுகள் : 24 　 கி. எண்ணிக்கை : 500 　 அளவு : 25 × 3 செ.மீ.
பக்கத்திற்கு : 7—8 வரிகள் 　 ஆசிரியர் : ரோமரிஷி 　 பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது 　 முழுமை : முற்றற்றது 　 எழுத்து : தமிழ்.

**தொடக்கம் :**

சீருலவு பொதிகைரிஷி பாதம் போற்றி
　　சிவகாமித் தாயார்பொற் பாதம் போற்றி
வேருலவு தந்தைசிவன் பாதம் போற்றி
　　பரன்பழுத்த சித்தருட பாதம் போற்றி
பேருலவு சரசோதி நடனத் தாலே
　　பெருமையன்ன சதநூலைப் பாடு தற்கு
காருலவு திருமேனி துதிக்கை யானை
　　கணபதிசெந் தாமரைத்தாள் காப்ப தாமே ! — 1

முடிவு :

சாற்றாலே வெங்காறஞ் சவ்வீர மோடு
கெந்தி தலையாகும்
யினிபூரம் த...ங்க...... தசி......
முடனரி தாரம் கவரியுடன் நிமிளை
யார்புகழு கெவுரியுடன் பண்ணை லிங்க
மெல்லா .............. ............

காலம் :

இல்லை

குறிப்பு :

இதில், 9-13 வரை ஏடுகள் இல்லை. பிற்பகுதியில் 'மெய் சுருக்கம் 50-ல்' என்ற தலைப்பும், 'துரிசுக்கு மித்துரு' என்ற ஒரு தலைப்பு ஏடும் காணப்படுகின்றன.

இதில், செயநீர், பூரம், கடுங்காரம் முதலியன பேசப்படுகின்றன.

❋ ❋ ❋

வரிசை எண் : 2306 சுவடி எண் : 1249

## வால்மீகர் – 10

ஏடுகள் : 3 தி. எண்ணிக்கை : 60 அளவு : 25×3 செ மீ
பக்கத்திற்கு : 7 வரிகள் ஆசிரியர் : வால்மீகர் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்

தொடக்கம் :

திருமூர்த்தி தேவர்முதல் மனித ரோர்டு
சிவயோகம் பெத்திருந்த மார்க்கந் தன்னைப்
பிரியமுடன் எனைத்தொழுது கேட்ட பிள்ளாய்
பின்கலையு மிடக்லையு மாறும் போது
அறிவுடனே சுழிமுனையில் மனதை வைத்து
அசையாம லொருநினைவாய் காக்கும் போது
குருவான சிவயோகஞ் சித்தி யாச்சு
கோடியுகஞ் சித்தனைப்போல் வாழ லாமே ! – 1

முடிவு :

கொண்டதொரு கூத்தெல்லாம் நாதன் கூத்து
துவலயத்தி லுன்கூத்து வொன்று மில்லை
விண்டுரைத்தேன் சிவயோக மார்க்க மெல்லாம்
விரிவான சாத்திரத்தைக் குறுக்கிச் சொன்னேன்
அன்றுரைத்தார் சித்தர்பதி னெட்டுப் பேரும்
அவனிதனில் பரிபாஷை யாலே சொன்னார்
பண்டுஅரன் விளம்பினதை யறியச் சொன்னேன்
பரமரகசிய சிவயோகம் பத்து முற்றே !

குருபாதமே துணை.

காலம் :

இல்லை

குறிப்பு

இதில், சிவயோக மார்க்க சாத்திரம் சுருக்கமாகச் சொல்லப்பட்டுளது.

★ ★ ★

வரிசை எண் : 2307

சுவடி எண் : 1250

## மதிவெண்பா — சுருக்கம்

ஏடுகள் : 2 கி. எண்ணிக்கை : 30 அளவு : 25×3 செ.மீ
பக்கத்திற்கு : 7 வரிகள் ஆசிரியர் : அகத்தியர் ? பொருள் : மருத்துவம்
நிலைமை : பழுது முழுமை : முற்றறாது எழுத்து : தமிழ்

தொடக்கம் :

கதிருஞ் சரியுங் கலந்து பிரிதல்
விதியுருவ மாயிக் குருநூல்-விள்ளு
மதியுமுரைமூடரே நாளும்
வழலை யறிவரோ வழங்கும்

(இவ்வளவே உள்ளது)

முடிவு :

சாற்றுங் குளிகைதமர் வாசலில் செலுத்தி
யேத்தினால் யேழுசபை யேறாதோ – தோற்று
மனங்கடந்த பூரணத்தில் வாழாதோ காயம்
இனந்தெரிந்து கொள்ளு மியல் — 9

காலம் :

இல்லை

குறிப்பு :

இதில், காரச் சுருக்கம், பூரம் முதலியன பேசப்பட்டுள்ளன.

★ ★ ★

வரிசை எண்: 2308 சுவடி எண் : 1251

## அடுக்குநிலை போதகம் அறியும்படி

ஏடுகள் : 3 கி எண்ணிக்கை : 60 அளவு : 25 × 3 செ.மீ.
பக்கத்திற்கு : 7 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : தத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்

தொடக்கம் :

சொல்லிருந்த இடமெங்கே முப்பா ழெங்கே
துவாரபா லகரெங்கே முதல்ப்பா ழெங்கே
நல்லகங்கை நதியெங்கே வைகுந்த மெங்கே
நாரணனும் ஆலிலைமேற் றுயின்ற தெங்கே
அல்லல்படு மைம்பூத மொடுக்க மெங்கே
ஆறைந்து யி......ரன்றுமுதல் முளைத்த தெங்கே
சொல்லவல்லா ருண்டாகில் அவரை நாமும்
தொழுதுகுரு வெனப்பணிந்து வணங்க லாமே ! — 1

முடிவு :

அவ்வெழுத்து நின்றவிடந் தெளிந்து கண்டோர்
அனுஷ்டானம் பூசைமந் திரத்தை உண்ணார்
உவ்வெழுத்து நின்றவிடந் தெளிந்து கண்டோர்
உடலுயிரென் றேபிரிது உரைக்க மாட்டார்

ஒவ்வெழுத்து நின்றவிடந் தெளிந்து கண்டோர்
ஒருவருடன் வாய்திறவார் பொருளே சொல்லார்
சீயெழுத்து நின்றவிடந் தெளிந்து கண்டோர்
திருவாக்கால் சீயென்று சொல்வ ராதே! — 9

அடுக்குநிலை போதகம் முற்றும்
குருபாதமே கெதியென்றிரு மனமே !

**காலம் :**

இல்லை

**குறிப்பு :**

இதில் அறுகோணம், ஓங்காரம் முதலான தத்துவச் செய்திகள் கூறப்பட்டுள்ளன.



வரிசை எண் : 2309 சுவடி எண் : 1252

## செந்தூரம்

ஏடுகள் : 2 கி. எண்ணிக்கை : 50 அளவு : 25×3 செ.மீ·
பக்கத்திற்கு : 7 வரிகள். ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

**தொடக்கம் :**

திருமாலன் தெண்டனிட்டான் இடையன் பாலை
சென்றிருபத் தொருதினமே பின்னே மிட்டார்
மருவான மைத்துனனே முப்பத் தைந்து
மறவாத கும்மிட்ட வகையே தென்ன
தெருவான வீதியிலே இடப்பெண் கண்டு
திகைத்தேங்கிப் பின்துடர்ந்தே னாயன் வந்து
கருவாகக் கட்டிவைத்தே அடிப்பே னென்றான்
காணாம லோடியவள் தெண்ட னிட்டாள்.

**முடிவு :**

செல்லான செந்தூரம் தனையெ டுத்து
சுத்திசெய்த செம்புதனை யிருவ துக்கோர்
நெல்லான திடைகொடுக்க யெழா மாத்து
நிமையுடைய இறைவழியில் சிலவு செய்வீர். — 6

(இவ்வளவே உள்ளது)

**காலம் :**

இல்லை

குறிப்பு :

இதில், தத்துவ ரூபமாகச் செந்நூரம் செய்முறை, பயன் முதலியன கூறப்பட்டுள்ளன.

★ ★ ★

வரிசை எண் : 2310 சுவடி எண் ; 1253

## வால்மீகர் — 16

ஏடுகள் : 5 கி. எண்ணிக்கை : 100 அளவு : 25 × 3 செ.மீ.
பக்கத்திற்கு : 7—8 வரிகள் ஆசிரியர் : வால்மீகர் பொருள் : மருத்துவம்
நிலைமை ; மிக மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்

தொடக்கம் :

இருள்வெளியாய் நின்றசிவன் பாதம் போற்றி
எழுத்தினுட விபரமதை விரித்துச் சொல்வேன்
அருவுருவாய் நின்றதுவே எழுத்த தாகு
ஆதியந்த மண்டபிண்டம் அதுவே யாகும்
திருவுருவாய் ரவிமதியாய் நின்ற ரூபஞ்
சிவசத்தி திருமாலின் ரூப மாகும்
வருமுருவே சிவசத்தி வடிவ தாகும்
வந்ததிலும் போனதிலும் மனத்தை வையே ! — 1

முடிவு :

தானவனாய் யிருக்கவென்றால் வாசி வேணும்
தன்னுக்குள் தானிற்கும் இடமும் வேணும்
வானவனாய் நின்றவர்க்கு எல்லாஞ் சித்தி
வானுக்குள் மனமிருக்குந் தீபம் போல
தேனவனாய்ச் சித்தருக்குத் தெகுட்டா மூலி
சிறப்பாக உடலுக்குள் பதியே யாகும்
கோனவனா யிருக்கவென்று குறுக்கிச் சொன்னேன்
குவலயத்தில் பதினாறும் குறுத்தான் முற்றே ! — 17

அகண்ட பரிபூரண
குருவே துணை.

**காலம் ;**

இல்லை

**குறிப்பு :**

இதில், கூறப்பட்டுள்ள செய்திகள் தத்துவ ரூப மாணவை.

★ ★ ★

வரிசை எண் : 2311 சுவடி எண்; 1254

## வெடியுப்புக் கட்டு

ஏடுகள் : 16 கி. எண்ணிக்கை : 350 அளவு : 25×3 செ.மீ.
பக்கத்திற்கு : 7—9 வரிகள் ஆசிரியர் : பலர் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்

**தொடக்கம் :**

நாலாங் காச்சல் : வெடியுப்பு விராகனிடை — 1
குஞ்சு பொறித்த முட்டை ஓடு, சவு......... பூத்தது விராகனெடை — 1
வெடியுப்பு விராகனெடை — 1 ரெண்டு சேர்த்து

**முடிவு :**

ரெண்டே விராட்டியில் புடமிடவும். செந்தூரமாம்
நாகம் பலம் 1½ சீனக்காரம் பலம் - 1 கீழும் மேலும் வைத்து ஒரு நாழி ஊதி எடுத்து பதினெரு விராகனிடை ரசம் சேர்த்து பனைமட்டைச் சாறு விட்டு அரைத்து முழப்புடம் போடவும். பஷ்பம்.

**காலம் :**

இல்லை

**குறிப்பு :**

இதில், சவ்வீர பற்பம், கோடாசூளிப் பாஷாணம், செந்தூரம் வீரக்கட்டு, சரக்குக் கட்டு, நாகச்சுன்னம், ரசபாஷாணச் சுன்னம், வெடியுப்புக்கட்டு முதலியன உள்ளன.



வரிசை எண் : 23.2 சுவடி எண் : 12 55

# வைத்தியத் திரட்டு

ஏடுகள் : 130 கி. எண்ணிக்கை : 2500 அளவு : 25×3½ செ மீ.
பக்கத்திற்கு : 7—9 வரிகள் ஆசிரியர் : பலர் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்

**தொடக்கம் :**

யிப்ப...... றந்து ......ஞ்ச சருகு குச்சியனை
திறமாயி பதக்கு சாம்பல் காணும் படியாயிக்
கொண்டு வந்து சுட்டு சாம்பல் லெடுத்து
பதக்குத் தண்ணீர் விட்டு

**முடிவு :**

அதின்மேல் கல்லுப்பு அரைத்து சீலையில் தடவி
சுத்திக் காயவைத்து பானையில் செங்கல் மா பொடி
கொட்டி மருந்து வைத்து மேலுங் கொட்டி
பானைக்குச் சில்லிட்டு சீலை செய்து தீபம் போல
சாமம்-1 கமலாக்கினி-1 கட்டாக்கினி ரெண்டு
எரித்து ஆரவிட்டு யெடுக்கக் கட்டுமே — 1

**காலம்:**

இல்லை

**குறிப்பு:**

இதில், நல்ல நாகக்கட்டு, நாகரச செந்தூரம், பாஷாணக்கட்டு, நயமானது, வீர செந்தூரம், அயக்களங்கு வங்கக்கட்டு சவ்விரக்கட்டு, கெந்தகமெழுகு, கெந்தக செந்தூரம், வங்க செந்தூரம், வெள்ளீயக்கட்டு, முப்பூ விபரம் முதலியன உள்ளன.

—00—

வரிசை எண : 2313

சுவடி எண் : 1256

## வைத்தியத் திரட்டு

ஏடுகள் : 69 கி. எண்ணிக்கை : 1000 அளவு : 28×2 செ.மீ
க்கத்திற்கு ; 4—6 வரிகள் ஆசிரியர் : பலர் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிகப் பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்

**தொடக்கம் :**

காளமேக நாராயண செந்தூரம்

இரதம் பலம் - 1 கெந்தகம் பலம் — 1
சாதிலிங்கம் பலம் - 1 பொன்னரிதாரம் பலம் - 1
மனோசிலை பலம் - 2

இவை யஞ்சும் சுத்திபண்ண வகை

**முடிவு :**

உச்சத்தில் மகாரமிட்டு ...........
பிச்சத்தில் நகாரமிட்டு ...........
மெச்சித்த சித்தரெல்லாம் .........
பச்சத்தில் தியானஞ் செ...........

**காலம் :**

இல்லை

**குறிப்பு :**

இதில்,முதல் ஏடும், கடைசி ஏடும் பாதியாக முறிந்துள்ளன. அரிதாரபற்பம், ரசபூபதி மகாகோடா குளிகை, பலவகைக்கும் அரிதார செந்தூரம், நீர்பீனிசம், ரெத்தப்பீனிசம், எலும்புருக்கி நோவுக்கு, காமாலை, பச்சைக்காமாலை, விந்துகட்டிப் புணர தேவாங்கு, கற்பம் முதலியன உள்ளன.

* * *

வரிசை எண் : 2314

சுவடி எண் : 1257-a

## புலிப்பாணி வைத்தியம் — 500

ஏடுகள் : 90 கி. எண்ணிக்கை : 2800 அளவு : 35×3 செ.மீ
பக்கத்திற்கு : 7—8 வரிகள் ஆசிரியர் : புலிப்பாணி பொருள் : மருத்துவம்
நிலைமை : பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்

தொடக்கம் :

அண்டரண்ட மாகிநின்ற வரனே காப்பு
ஆனந்த மாகிநின்ற உமையாள் காப்பு
குண்டமெனும் குண்டலியின் குறியே காப்பு
குமரகுரு வேள்முருகன் பாதங் காப்பு.

முடிவு :

வியாதியஸ்தனுக்குப் புத்தி கூறல்

நவின்றிட்டோம் புவிதனிலே வைத்திய மார்க்கம்
நன்றாகச் சொல்லிவைத்தேன் இந்நூல் வேண்டும்
பவின்றிட்ட நோயாளர் வைத்தி யோர்க்கு
பண்பாகத் தொழுதேற்றித் தாம்பூல மீய்ந்து
இவின்றிட்ட மவையெல்லா மவர்க்குச் சொல்லி
இதம்பெறவே செய்தபின்பு அவிழ்தங் கொள்வாய்
கவின்றிட்ட போகருட கடாட்சத் தாலே
காசினியில் புலிப்பாணி ஐந்நூறு முற்று ! — 501

புலிப்பாணி மகாமுனிவர் அருளிச் செய்த
வைத்தியம் ஐந்நூறு முற்றிற்று

முற்றும்

காலம் :

விரோதி வருடம், பங்குனி மாதம், 21 ந் தேதி புதவாரம் எழுதிமுகிஞ்சது முற்றும்
தண்டபாணி துணை.

மேலவயலூர் சுப்பாபிள்ளை மகன் முத்து மதுரையாபிள்ளை யெனும் உபாத்தியாயர் சுவடி.

குறிப்பு :

இது, எமது சுவடி எண் 503/D 1099 'புலிப்பாணி வைத்தியம்' போன்றது. இதில் முழுதும் உள்ளது.

இதில், சன்னிக்கு மேல்பூசத் தயிலம், குதகவலிக்கு உப்பு, பெரும்பாட்டுக்கு மருந்து நீரடைப்புக்கு வாழைக் கிழங்கின் நீர், அண்டவியாதிக்கு எண்ணெய், காதுவலிக்கு எண்ணெய், கண்படலந்தீர ரத்னாதிக் குளிகை, மாலைக்கண்ணுக்கு மை, கண்ணில் நீர் வரத்துக்கு மை, கண்வலிக்கு, பல் புழுச்சாக, பேய்கடி, நாய்கடி பூனைக்கடி பூரான்கடி முதலானதுக்கு மருந்து முதலியன உள்ளன. நல்ல முறைகளாகக் காணப்படுகின்றன.

கடைசி ஏட்டின் பின்புறம் 'மாட்டுவாகடம்' எழுதப்பட்டுள்ளது.

வரிசை எண் : 2315 சுவடி எண் : 1257-b

## இராமதேவர் வைத்தியம் — 81

ஏடுகள் : 15 கி, எண்ணிக்கை : 500 அளவு 35×3 செ,மீ
பக்கத்திற்கு : 7 வரிகள் ஆசிரியர் : இராமதேவர் பொருள் : மருத்துவம்
நிலைமை பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்

**தொடக்கம் :**

ஆதியிலே அமைந்தவிதி எழுத்தைக் காண
அருளான நந்திபதம் அன்பாய்க் கொண்டு
சோதியென நின்றிலங்கும் நாத ரூபி
சொரூபமுள்ள வாலைமனோன் மணியைப் போற்றி
நீதியுடன் சஞ்சாரச் சமாதி செய்து
நின்றேனடா ஆதியந்தம் நிலைக்க வேதான்
வாதியென வந்தோர்க்குக் குருவா மின்னூல்
வசனித்தேன் என்பதுமே யொன்று மாச்சே ! —1.

**முடிவு :**

வணக்கமுட னின்னூலை வெளிவி டாதே
வஞ்சருடன் பேசாதே வாதா டாதே
இணக்கமிலா மாந்தருட னிணங்க வேண்டாம்
இன்பமுள்ள வயித்திய நூல் ஈய வேண்டாம்
மணக்குமலர் மதிதனிலே மனத்தை வைத்து
வைத்தியநூ லெண்பதொன்றும் வகையாய்ப் பார்த்து
தனக்குமிது பொருளெனவே வணங்கிப் போற்றி
சதாகாலங் குருபதத்தைச் சார்வாய் முற்றே ! — 81

மேலவயலூர் சிவசுப்பரமணிய சுவாமி துணை
தேரடியாண்டவன் துணை.
உபாத்தியாயர் முத்து மருதையப்பிள்ளை சுவடி.

**காலம் :**

இல்லை

**குறிப்பு :**

இதில், செயநீர், வெள்ளி துருசு சுன்னம், ஐங்காயம், வீரமெழுகு, கற்பம், அஞ்சனம், பாஷாணக்கட்டு, பூரண லேகியம், செம்பு சுத்தி, நவனீதக்குரு முதலியன உள்ளன.

வரிசை எண் : 2316 சுவடி எண் : 1257-c

## இராமதேவர் சூத்திரம் — 50

ஏடுகள் : 11 (16-26) கி. எண்ணிக்கை : 300 அளவு : 25 × 3 செ மீ.
பக்கத்திற்கு : 6 வரிகள் ஆசிரியர் : இராமதேவர் பொருள் : மருத்துவம்
நிலைமை : நல்லநிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

**தொடக்கம் :**

அண்டமெனும் கேசரியாள் பாதங் காப்பு
அருள்பெருகும் பூரணத்தின் அருளே காப்பு
குண்டமெனுங் குண்டலியின் குறியே காப்பு
குறியான பராபரத்தின் குணமே காப்பு
மண்டலங்கள் மூன்று மொன்றாய் நிறைந்து நின்ற
மகத்தான ரவிமதியின் சுடரே காப்பு
பிண்டமெனும் பொருளான அண்ட பிண்டம்
பேரண்டம் நிறைந்து நின்ற கணபதியே காப்பு

**முடிவு :**

அறிவான வழலையென்ற சுண்ணஞ் சொன்னேன்
அண்டபிண்ட மானகரு ரெண்டுஞ் சொன்னேன்,
குறியான அடிநடுவு முடியுஞ் சொன்னேன்
குறிப்பான முப்பூவிற் குணமுஞ் சொன்னேன்
செறிவான தொல்லையற்ற அமுர்தஞ் சொன்னேன்.
சேர்ந்தமுப்பூ முடிவுவரை பாகஞ் சொன்னேன்.
பிபுவான (?) திதிற்பேர்கரு (?) கோடா கோடி
பேரின்ப சாத்திரர்தான் பெரிதா முற்றே ! —51

கடவுள் துணை

குருபாதமே கெதி

மேலவயலூர் சிங்காரவேலவன் பாதமே கெதி
முத்து மருதையாபிள்ளை

**காலம் :**

இல்லை

**குறிப்பு :**

இதில், தலைப்புகள் காணப்பட வில்லை. ஆயினும், அண்டம், பிண்டம், குரு, முப்பூ, அதன்குணம் முதலியன கூறப்பட்டுள்ளன பிழைகள் அதிகமாக உள்ளன.

வரிசை எண் 2317 சுவடி எண் : 1257-ம

## வைத்தியத் திரட்டு மருந்து முறிவு

ஏடுகள் : 2 கி. எண்ணிக்கை : 50 அளவு : 35 x 3 செ.மீ
பக்கத்திற்கு : 5—6 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : மருத்துவம்
நிலைமை : நல்லநிலை முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்

தொடக்கம் :

மருந்துவகை - நாவி பாஷாண முதலானதுக்கு
முறிவு சொல்லல் - மருந்து முறிவு

அவுரிவேர், பிரமியிலை மிளகு இவைகளை
ஓர்நிறையாய்ச் சிதைத்து கியாழஞ் செய்து
ஆறுவேளை கொடுக்க மருந்து வீறு தணியும்

முடிவு :

வீரத்திற்கும் ரச பஸ்பத்திற்கும் பனிரெண்டு
கோழிமுட்டை வெள்ளைக் கருவைத் தண்ணீரில்
கலந்து அடிக்கடி கொடுத்துக்கொண் டிருக்கவும்
அவைகளின் வீறு தணியும்

அவுரிக்கு முற்றின சாரடை சமூலத்திற்கும்
சகலநஞ்சு வஸ்துக்களின் வீறு அடங்கும்

காலம் :

இல்லை

குறிப்பு :

இதில், பாஷாணம் முதலான்வற்றினா லுண்டான் துன்பத்தினைப் போக்குதற்கு மருந்து முறிவுகள் எளிமையாகக் கூறப்பட்டுள்ளன.



வரிசை எண் : 2318 சுவடி எண் : 125

## போகர் நிகண்டு

ஏடுகள் : 260 கி. எண்ணிக்கை : 10500 அளவு : 31 x 3½ செ.மீ.
பக்கத்திற்கு : 6—10 வரிகள் ஆசிரியர் : போகர் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

**தொடக்கம் :**

அகண்டபரி பூரணமாய் மாயிபாதம் போற்றி
அடுத்துநின்ற உன்மனைத்தாய் பதத்தைப் போற்றி
நிகண்டெனவே திருமூலநாயகர் பாதம் போற்றி
நீங்காமல் காலாங்கி அய்யர் பாதம் போற்றி
புகன்றுநின்ற நாதாங்கள் ரிஷிகள் பாதம் போற்றி
பேறான வாக்குடைய வாணி பாதம் போற்றி
முகன்றுநின்ற குஞ்சரத்தின் பதத்தைப் போற்றி
மூவுலகும் மெச்சுதற்கு நிகண்டு கேளே ! — 1

**முடிவு :**

......ணனென ............
பரிவாக யெனையீன்ற பராபரைக்குத்
தேனாக நூறுதரம் சரணம் .........
......... யிரந்தாள் சரணம் மாகும்
ஆனான ரிஷிகள் சித்தர் அநேகங் கோடி
......... ...ட்டென நிகண்டு முற்றே. — 1731

திருச்சிற்றம்பலம்

சற்குரு ............................
மனோன்மணித்தாய் பாதாரவிந்தமே துணை
ஆறுமுகந் துணை, சிவகுரு ......

**காலம் :**

இல்லை

**குறிப்பு :**

இதில், 3-5, 75, 76, 183, 203, 204, 208-210, 248 ஆகிய ஏடுகள் இல்லை, சில ஏடுகள் பாதியாக உள்ளன.

இதில், சவுக்காரம் பெற, சவுட்டு உப்பு, தில்லாலவணம், கெந்தியுடலவணம் பொன்னம்பர் பெற, மீனம்பர், கடல் நுரை, காரசாரச்சுன்னம், அப்பிரகம், காந்தம், கற்பூர சிலை, கல்நார்பெற, கல்மதம், அஞ்சனக்கல், வக்கிரதந்த பாஷாணம், தயிலான பட்டணம் முதலியன உள்ளன.

★ ★ ★

வரிசை எண் : 2319 சுவடி எண் : 1259

# மாட்டு வாகடம்

ஏடுகள் : 6+134=140 கி. எண்ணிக்கை : 3000 அளவு : 29×4 செ.மீ
பக்கத்திற்கு : 6—8 வரிகள் ஆசிரியர் : அரியக்கூடவில்லை பொருள் : மருத்துவம்
நிலைமை : பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

**தொடக்கம் :**

**மாடுகளின் இலக்ஷணம்** (5-ஆம் ஏட்டின் பின்புறம்)
சவாரி வண்டிகளுக்கு உபயோகமாய்
வருகிற காளைமாடுகள் இதன்கீழ் கண்ட
லட்சனங்களைப் பொருந்தி யிருந்தால் உத்தமம்
நிறம்—மயிலை, கருமயிலை, சங்கு வெள்ளை
சந்தனப் புல்லை, இருண்ட செவலை
இந்த ஆறு நிறங்களும் உத்தமம்.

**முடிவு :**

(127-ஆம் ஏடு)
இப்படிப்பட்ட சூட்டுக்கோலால் அந்தந்த
வியாதிக்குக் குறிப்பிட்டிருக்கிற நம்பர் படிக்குள்ள சூடு
இத்துடன் சேர்த்திருக்கிறது.
ஜாபிதாவிற் கண்டிருப்பதுகளைப் பார்த்துப்
போடவேண்டும்
(128-ஆம் ஏடுமுதல் 134-ஆம் ஏடு வரை
சூட்டுப் படலம் எழுதப்பட்டிருக்கிறது.)

**காலம் :**

இல்லை

**குறிப்பு :**

இதில், பக்க அகராதி, பெயர் அகராதி, ஆகியவை 1-6,1-5 பக்கங்களில் உள்ளன, 5-ஆம் ஏட்டின் பின் பக்கம், மாடுகளின் இலட்சணம் தொடங்குகிறது.

பின்னர், மருந்துகள், ஜீரணமசாலா, உடன் சாந்தி மசாலா லேப்பு, லேகியம், வியாதியும் பரிகாரமும் (27-ஆம் ஏடு), முட்டடைப்பான் நோய், நெளியடைப்பான் மூக்குத் தண்டடைப்பன், முதலியன கூறப்பட்டுள்ளன.

* * *

வரிசை எண் : 2320 சுவடி எண் : 1260-அ

## கற்ப விதி

ஏடுகள் : 16 கி. எண்ணிக்கை : 300 அளவு : 26×3 செ.மீ.
பக்கத்திற்கு : 6-8 வரிகள் ஆசிரியர் : திருமூலர் ? பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்

**தொடக்கம் :**

ஐந்து கரத்தனை ......... போற்றுகின்றேனே !

**நூல்**

உன்னிய சற்பக் குறியாம் வெளியிலே
பன்னிய நாகம் பகர்ந்த பிரிதிவியாம்
வன்னியும் வாயுவு மாயுறு சுக்கிலம்
மன்னிச் சமனாய் வழங்குங் குமுதகமே ! — 1

**முடிவு :**

தின்றிய நோயெலாந் திசைகெட்டு ஓடிடும்
பன்றிட வாயு பக்கத்தில் சேராது
தன்றிட லோகர்க்குத் தானாகச் செய்முறை
மன்றிய சித்தர்கள் மகாவியாதி போக்குமே. — 113

கற்பவிதி முற்றும்

**காலம் :**

இல்லை

**குறிப்பு :**

இது, மிக மிகப் பழுது பட்ட நிலையில் தொட்டால் ஒடியும் நிலையில் உள்ளது.

★ ★ ★

வரிசை எண் : 2321 சுவடி எண் : 1260-ஆ

## குருநாடி

ஏடுகள் : 14 கி. எண்ணிக்கை : 500 அளவு : 26×3 செ.மீ.
பக்கத்திற்கு : 8-10 வரிகள் ஆசிரியர் : அகத்தியர் ? பொருள் : நாடிசாத்திரம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றுமுள்ளது எழுத்து : தமிழ்

தொடக்கம் :

சீர்பெறு முனிவர் வேதந்
 தெரிந்துபின் னுலகத் தோர்கள்
பேர்பெறு கருவி லுற்ற
 பிணிபல வுணர்ந்து தேர்ந்து
ஊர்பல நாடிக் கெல்லாம்
 உயர்பெரு நாடி மூன்றில்
நீர்குரு நாடி நேர்மை
 செல்லுடன் கூற லுற்றார்.

முடிவு :

கயரேது பையேது கணந்தா னேது
 கருத்துடனே கமலமுகங் கால்தா னேது
வயரேது வாயேது வன்னி யேது
 வயித்தியரே இந்த உண்மை மகிழ்ந்து சொல்வீர்
கயரான தோர்குருவை வையி குன்றங்
 கருத்தீசன் கமலமுகம் மனோன்மணியே யாகும்
வயரான தேமாயன் வன்னி ருத்திரன்
 வயித்தியரே இந்தஉரை மகிழ்வித் தோமே ! 51

குருநாடி முற்றும்
ஹரி: ஓம்.

காலம்

இல்லை

குறிப்பு :

இதில், நாடிபார்க்கும் முறை, நாடி லட்சணங்கள் முதலியன உள்ளன.

இந்நூற் செய்யுட்களின் பட்டியல் எழுதிய ஓடொன்று முன்னர் சேர்க்கப்பட்டுளது.

❋ ❋ ❋

வரிசை எண் : 2322 சுவடி எண் : 1260-c

## நாடி சாத்திரம்

ஏடுகள் : 15 கி. எண்ணிக்கை 350 அளவு : 26 × 3 செ மீ
பக்கத்திற்கு : 6-7 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : நாடிசாத்திரம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

**தொடக்கம் :**

ஆதியாங் கடவு ளானை
அடியினைத் தொழுது போற்றி
தீதொரு வியாதி தன்னை
தெளிந்துநீ யறிய வேண்டி
கோதிலா நல்லோர் பேசுங்
குணமிகு பாடல் தன்னை
நீதிசேர் படியின் மீதே
நெறியுடன் உரைத்தார் மேலோர். — 1

**முடிவு :**

வாதங் குட்டம் நீரடைப்பு
மாறா உதிரங் குன்மனோய்
தாது கெடுக்கும் மேகநோய்
சயரோ சுத்தோ டருசிவி ன
தீது பயிற்றுங் கிராணிமுதல்
திறமா யெய்தும் பவித்திரமும்
யீது பத்து வியாதிகளும்
யினையா ரோக மென்பீரே ! 81

ஸ்ரீ ராமசெயம்

**காலம் :**

இல்லை

**குறிப்பு :**

இதில், தலைப்பு இல்லை. நாடி பார்த்து வியாதியினை அறியும் வகைகள் கூறப் பட்டுள்ளன.

இதில், பித்தத்தின் குணம், சிலேட்டுமத்தின் குணம், தொந்த நாடியின் குண மரண நாடி வகை, அசாத்திய குணம், முதலியன கூறப்பட்டுள்ளன.

இதன் பின்னர் மூன்று ஏடுகள் நாடி முதலியன கூறுவன உள்ளன.



வரிசை எண் : 233 சுவடி எண் : 1261

## வைத்தியத் திரட்டு

ஏடுகள் : 22 கி. எண்ணிக்கை : 200 அளவு : 18 × 2½ செ.மீ
பக்கத்திற்கு : 2—6 வரிகள் ஆசிரியர் : பலர் பொருள் : மருத்துவம்
நிலைமை மிக மிகப் பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்

தொடக்கம் :

ஹரி : ஓம்
கருவங்சம் பலம் - 1 சட்டியிலிட்டு உருக்கி
துரிசு ஒருபலத்தைப் பொடிபண்ணி மேல்
போட்டுக் கிண்ட சாம்பலாகும், அதுவுடனே
சேங்கொட்டை பத்தும் சாம்பலா சுட்டு
கருக்காய் பத்து சாம்பலா சுட்டு மூன்று
சாம்பலையும்

முடிவு :

சித்தாமுட்டி நெல்லுப் பொரி
வில்வைவேர் நெல்லி முள்ளி
சீரகம் சுக்கு பித்தத்துக் (குக்)
குருத்தா தீரும்

காலம் :

இல்லை

குறிப்பு :

இதில். ரசமெழுகு, விற்சோபத்துக்கு மந்திரம், விபூதி போடுகிறதற்கு மந்திரம் வெள்ளிபண்ண விதம், வயறு கடுப்பு, மூல வாய்வுக்குக் கிஷாயம், அடை, சகல விசத்துக்கும் மை, அண்டமாருத செந்தூரம். வாதம் பிடிப்புக்குத் தயிலம் முதலியன உள்ளன.



வரிசை எண் : 2324 சுவடி எண் : 1262-a

## நாடி லட்சணம்

ஏடுகள் : 7 கி. எண்ணிக்கை : 200 அளவு : 28 × 3 செ.மீ.
பக்கத்திற்கு : 5-6 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : நாடி சாத்திரம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்

தொடக்கம் ;

கரிமுக னடியை வாழ்த்திக்
கைதனில் நாடி பார்க்கில்
............ ........... .........
பிடித்து(ட) னடுவே தொட்டால்

முடிவு :

நானென புருஷர்க் கொல்லாம்
நாடிதான் வலக்கை பாரு
தேனெறு மடவார்க் கெல்லாம்
நதிப்பிற யிடக்கை பாரே ! — 30

நாடி முற்றும்

பரம சற்குரு பாதார விந்தமே
கெதியாக காத்து ரெட்சிக்கவும்

காலம் :

இல்லை

குறிப்பு:

இது, எமது சுவடி எண் 294-a/, 322-a போன்றது ஆனால் 294-a-ல் 75 பாடல்களும். 322-a-ல் 64 பாடல்களும் உள்ளன. இதில் கடைசி ஏடு இரண்டு பாதியாக உள்ளது.



வரிசை எண் : 2325 சுவடி எண்: 1262-b

## வைத்திய வெண்பா

ஏடுகள் : 25 (8-32) கி. எண்ணிக்கை : 500 அளவு : 28×3 செ.மீ
பக்கத்திற்கு : 5—7 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து: தமிழ்

தொடக்கம் :

ஆரியநூல் வாகடத்தி நுட்பொருளை யாராய்ந்து
சீரியதோர் வெண்பாவாய்ச் செப்பவே—கூரியதாய்
உள்ள நிதானமதை ஓதி யருள் பெருகும்
வள்ளலே என்மனதில் வா.

**முடிவு :**

பேசும் பிரண்டையுடன் பின்கண்டங் கத்திரிவேர்
விசாத்தை (?) செறுகாஞ்சொறி வெப்பூலா - மாசில்லா
பொன்முள்ளி சுக்கு யிட்டாயி கியாழமிடில் சென்மம்
சேஷ்ட்டும சுரம்போம் செப்பு.

ஆனந்த மனோன்மணி

அங்கயற்கண்ணி அம்மாள்

கிருபைதரவேணும்

**காலம் :**

இல்லை

**குறிப்பு :**

இதில், வெண்பாக்கள் சரியில்லை. பிழைகள் மலிவு

இதில், வாதசுரம், அண்டவாதம், பித்தம், வாயு, கரப்பான், வீக்கம் முதலானவை கட்டு மருந்துகள் கூறப்பட்டுள்ளன.

★ ★ ★

வரிசை எண்: 2326 சுவடி எண் : 1262-c

## அகத்தியர் வைத்திய அவையடக்கம் — 100

ஏடுகள் : 60(33-119) இடையிடையே ஏடுகள்இல்லை கி. எண்ணிக்கை : 100-110
அளவு : 28×3 செ.மீ. பக்கத்திற்கு : 5 – 6 வரிகள் ஆசிரியர் : அகத்தியர்
பொருள் : மருத்துவம் நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றுமுளது(?)
எழுத்து : தமிழ்

**தொடக்கம் :**

ஆதியந்த மில்லாத பொருளைப் போற்றி
அறையிறேன் ...... ... ............
வேதையுடன் வைத்திய முறையும் நீக்கி
விள்ளாத கருவையெல்லாம் விளக்க மாக

நாதமொன்றா பெருவெளியில் விந்துண் டாக்கி
நாலாறு ஆதார மதிலுண் டாக்கி
சாதியென்ற சாதியெல்லா மதிலுண் டாக்கி
தத்துவங்க ளாகிநின்ற தனைத்தும் பாரே ! — 1

முடிவு :

நன்னாரி பெருங்குமிழ் நெருஞ்சி பற்படாகம்
சிறுகாஞ் சோரிமுத்தக்காசு, பெருவாகையும் சீந்தித் தண்டு
பாதிரி முன்னை சுக்கு செறுதேக்கு கண்டங்கத்திரி
வகைக்கு பலம் 5 ங் கூட்டி............ வடிகட்டி
அந்திசந்தி கியாழம் இட்டுக் குடுக்கவும்
கைப்பு புளிப்பு புகையிலை .........மோர் தள்ளுபடி

சிவமயம்

காலம் :

இல்லை

குறிப்பு :

இதில், 66-ஆம் பாட்டுக்குப்பின் பாட்டெண் இல்லை. எட்டுக்கு ஒரு பாடலாக எழுதப்பட்டுள்ளது. சிவமயம் முதலானது கூறப்பட்டுளது.

இதில், எலுமிச்சம் பழஎண்ணெய், பொன்னாங்காணித்தயிலம், நெல்லித் தயிலம், நிலப்பனைக் கிறுதம், மூலச் சூட்டுக்குத் தயிலம், புளியாரைக் கிறுதம், ரசபற்பம், கூழ் பாண்ட கிறுதம், செம்முள்ளித் தயிலம் முதலியன உள்ளன.

★ ★ ★

வரிசை எண் : 2327 சுவடி எண் : 1262-d

## ஞான வெட்டி வைத்திய முறை

ஏடுகள் : 22 கி. எண்ணிக்கை ; 300 அளவு : 28×3 செ.மீ.
பக்கத்திற்கு : 5 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து: தமிழ்

தொடக்கம் :

வெற்றிதரும் ஞானவெட்டி ஆயிரத்தின் மேலாக
வயித்தியத்தை விளம்புவேன் நான்
சித்தமுள்ள காயசித்தி மாய சித்தி
திறமான வாதசித்தி வசிய சித்தி
இத்தலத்தி லுள்ளோர்கள் மறைத்த தெல்லாம்
இயம்பினேன் நூலினிலே எளியோர்க் காக
சத்தமுண்டா கர்ப்பவலைக கொண்ட பேர்கள்
சண்டனையுஞ் செயிக்க லாண்டே கேளீர் ! — 1

முடிவு :

தத்தையரா

ஓடமதில் வருகின்ற சுவாசத்தைப் பையய
ஒன்பது வாசலுங் கட்டி யிருக்கும்
திடமுடன் கம்பத்து நுனியிலே கட்டித்
தீண்டாத மணிவிளக்கைத் தாண்டாம லேத்து
புடம்வைத்துக் கருவிகளைச் சுட்டே அறுத்து
பூறகப் பஞ்சர சரத்தையும் மூட்டி
நடமாடும் சுக்கானை மெய்யத்தில் பூட்டி
நாடியே மதுஒன்று காயசித்தி யானேனே ! — 63

காலம் :

இல்லை

குறிப்பு :

இதில், தரு, வைத்தியம், நொண்டிச்சிந்து, விருத்தம், காயம், பூரணம், வெண்பா, கொச்சகம், வாதவிதி, வெற்றி முதலான தலைப்புகளில் மருத்துவம் கூறப்பட்டுள்ளது.



வரிசை எண் : 2328 சுவடி எண் : 1262-e

## தூது லெட்சணம்

ஏடுகள் : 8(17—24) கி. எண்ணிக்கை : 120 அளவு : 28 × 3 செ மீ·
பக்கத்திற்கு : 5—ം வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : இலக்கியம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்

**தொடக்கம் :**

தூதன் வந்து திறக்கும் வடிவு மாகும்
சொல்லுங்குறி தெ.........ங்குறி பல்லின் குறியும்
நீதியுடன் சொல்லுகிறேன் ராகுவின்
நிலையிற் பதறிவந்து நின்று சொல்லினும்
செய்யபூச் சூடி வரினும் கருந்துகில் செய்யதுகில்
புனைந்து பய்ய வரினும்

**முடிவு :**

சடந்தழ னெவோதும் பின்மெய் சிவக்கின்றண்ணிரிற்
பொட்டிடிற் காழ்ந்தமிழ்ந்தின்ன
பிடித்தகை விரலின் நெட்டி பறந்திடன்
பலந்தி முத்தி மயிர் வலுத்திருக்கின்
ஊன்றிடுங் குடோரி யிடின.........ரெத்தம் மொருகின
வாதாதி னொண்டு நடக்கிதில்
தோன்றிடு மாவியுள்ளே அடக்கமாய்ச்
சூச்சமதாய் யிருக்கும் மாறாச்சி யறிவேன்.

இந்தக் குனத்துக்குப் பெரியநாயகியம்மன்

துணை.

**காலம் :**

இல்லை

**குறிப்பு ;**

இது, தூதுவனை வருணிக்கு முகத்தான் அவன் இலக்கணங்களை அறியச் சொல்லுவது.



வரிசை எண் : 2 29 சுவடி எண் : 1262.f

## மருந்து வகை

ஏடுகள் ; 4 (25—28) கி. எண்ணிக்கை : 60 அளவு : 28×3 செ.மீ.
பக்கத்திற்கு : 5—6 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்

**தொடக்கம் :**

**விருத்தம்**

அடக்கமென் றறிந்த போதே
அவர்தலை உச்சி கீறி
குடத்துவாய் ஏட முத்தி
கொடம்புரை யடைத்த மன்னர்
வெடித்திடும் வேளை சாத்தை
விட்டுமேல் லோட்டை வைத்து
கடுக்கென வெடிக்க மீண்டு
கடுவிழங் கடிவார் நாளும் — 1

**முடிவு :**

அரைத்தே வழித்தெடுத்து வெள்ளை
யாடையில் பூசித் திரியாக
திரித்தே அனற்கொளுத்தி
தண்டிற் செய்திடும் நாளறத்
தின்ற பூகவே புகைத்தா
லடக்க மேமும் என்றும்
பொதித்தார் ஆருடஞ் சாதித் தாரே !
குருபாதமே கெதி

பெரியநாயகி அம்மாள் துணை.

**காலம் :**

இல்லை

**குறிப்பு :**

**இதில், மருந்து வகைகளெல்லாம் தத்துவ ரூபமாகக் கூறப்பட்டுள்ளன.**



வரிசை எண் : 2330 சுவடி எண் : 1262-g

# கெருடத் தியானம்

ஏடுகள் : 4 கி. எண்ணிக்கை : 50 அளவு : 28×3 செ.மீ.
பக்கத்திற்கு : 3-5 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : மாந்திரீகம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்

**தொடக்கம் ;**

**விருத்தம்**

நச்சர வாதி யாக
 நயந்தசிற் றெருப்பீ றாக
கொச்சைமா னிடரைத் தீண்டி
 கொடுவிஷம் தலைமேல் கொண்டால்
வைச்சமந் திரத்தி ரத்தால்
 மருந்தினால் தீரா விட்டால்
உச்சித மாகத் தீர்க்கும்
 கருடனை உரைக்க லுற்றாம் — 1

**நூல்**

வேதியர் குலத்திலகன் காசிபர்க்கு
 விந்தை பயின்றெடுத்த கனயோகன்

**முடிவு :**

மேலான விண்ணில் பயந்து திசை யெட்டும் விளங்கவே
இருளெனும் களங்கமற வருவராக நினைந்து கருடன்
மனதினில் தியானிக்க வல்ல விஷங்கள் பருதியைக் கண்ட
பனிபோல் தட்டு கெட்டுப் பறந்திடுமே மெய்யுற சிறந்திடுமே.

கெடுத்தியானம்

முற்றும்

அரிநாராயணன் கிருபா கடாட்சம்

**காலம் :**

இல்லை

குறிப்பு :

இதில், பாம்பு கடித்தவுடன் தியானிக்கப்பட வேண்டிய மந்திரத்தைக்கூறும் முறைமை கூறப்பட்டிருக்கிறது.



வரிசை எண் : 2331 சுவடி எண் : 1262-h

## சித்திர ஆருடம்

ஏடுகள் : 35(33-67) கி. எண்ணிக்கை : 600 அளவு : 28×3 செ.மீ. பக்கத்திற்கு : 3-6 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : மாந்திரீகம் நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

விருத்தம்

துதித்திடும் பனிக னான்குன
றொத்த மொடுக்கந் தானும்
விதித்திடும் வெவ்வே றான
சாதியின் விதங்கள் தானும்
பதித்திடும் மெயித்தா னுத்த
குணங்களும் பகர்ந்தே னிப்பால்
கதித்திடு விமத்துக் கெல்லாம்
மருந்துதனைக் கழல னுத்தேன். — 1

முடிவு :

மந்திர தந்திரத்தால் மணியின் மருந்தினால்
சூத்திரத்தா லேந்த வித்மும்
முந்திடும் விடங்க லெல்லாம் மதித்திடும்
முதியவர் சிறியவர் ரேவ ரென்னினும்
தரைமீது ஒருநூறு பருவமும் சரியாக வேயிருந்து
தாழா வாழ்ந்து
திருமகள் விளங்கப் பெற்று பதினாறு
சிறுவரைப் பெற்று முத்தி சேர்ந்து வாழி !

ஶ்ரீமந் நாராயண சுவாமியார் கிருபா கடாட்சம்
சிவசுப்ரமணியக் கடவுள் பாதமே கெதி
மனோன்மணியாகிய பெரியநாயகி அம்மாள்
சதாகாலமும் துணைசெய்ய வேணும்

**காலம் :**

விகுருதி வருஷம் ஆவணிமாதம், 2-ம் தேதி மந்தவார நாள்
**சித்தர் ஆருடம்** எழுதி முகிந்தது.

முற்றும்.

நந்தி ஈசுபரர் துணை.

பரமசோதி அம்மாள் துணை.

ஶ்ரீ ராமசெயம்.

**குறிப்பு :**

இதில், தலைப்பு இல்லை இறுதியில் உள்ளது கொண்டு தலைப்பு கொடுக்கப் பட்டது.

இது, எமது சுவடி எண் 21-a/D29 முதலானவற்றின் வேறானது, '**சித்தர் ஆருடம்**' என காலம் பகுதியில் உள்ளது.

இதில், விஷம் அறிய, சோதனை, நசியம், ஒத்தடம், தூவாளை, உள்ளுக்கு சூரணம், நசியப், தயிலம், விரியனுக்கு மனோன்மணி தியானம், வீரியத்துக்கு, வண்டு கடிக்கு, பச்சோந்தி விஷத்துக்கு முதலானவை உள்ளன.

★ ★ ★

வரிசை எண் : **2332** சுவடி எண் : **1262-i**

## வைத்திய வாகடம்

ஏடுகள் : 81 கி. எண்ணிக்கை : 1600 அளவு : 28×3 செ.மீ.
பக்கத்திற்கு 5—6 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்

தொடக்கம் :

## தினம் வயிறு வலிக்கிறதுக்கு அவுழ்தம்

பேயன் வாழைப்பழம் சீப்பு — 1 கொம்புத் தேன் படி கால்
பசுவின் பால் படி கால் சீனிச் சக்கரை பலம் — 1
எலுமிச்சம்பழம் — 1

இந்த அஞ்சுங் கூட்டிக் கையினாலே பிசைந்து சாப்பிடவும் தீரும்.

முடிவு :

சுக்கு பலம் — 1 சீரகம் பலம் — 1 நெல்லிமுள்ளி பலம் கால்
சாதிக்காய் — 1 இந்த நாலும் இளவறல் கொண்டு இடிச்சு
சூரணம் சர்க்கரை பலம் நாலரை கலந்து வெருகடி தின்று
வெந்நீர் குடிக்கவும்.

புளி, புகையிலை, நல்லெண்ணெய் ஆகாது. வயித்துக் கடுப்பு, கடுப்புக் கழிச்சல், மூலக் கடுப்பு சகலமும் தீரும்.

பெரிய நாயகி அம்பாள் துணை

சற்குரு கிடாட்சத்து னாலே

காலம் :

விகுருதி வருஷம், ஆவணி மாதம் 3-ஆம் தேதி வரையில் இந்த வாகடம் 340 ஏடும் திருவேங்கடம் எழுதி முகிந்தது.

முற்றும்

வேதாந்த சற்குரு பாதமே கெதி

சற்குரு சுவாமி ஆதிமூலந் துணை

திருச்சிற்றம்பலம்

குறிப்பு :

இதில், வயிரவன் மாத்திரை, விப்புருதிக்கு, நில ஆவாரைச் சூரணம், ஈரல்குலை எரிவுக்கு, அடிவண்டல் சுண்ணாம்பு நிறமாயிருக்கிற நீரிழிவுக்கு, காமாலை, பாண்டு, சோகை, விழ்பாண்டு, பித்த வெட்டை, கைகால் எரிவுக்கு, சுரத்தில் வலி இசிவுக்கு வலி குன்மத்துக்கு முதலான பலவகை நோய்கட்கு மருந்துகள் கூறப்பட்டுள்ளன.



வரிசை எண் : 2333 சுவடி எண் : 1263

## வைத்தியத் திரட்டு

ஏடுகள் : 15 கி. எண்ணிக்கை : 600 அளவு : 36 × 3½ செ.மீ.
பக்கத்திற்கு : 8—9 வரிகள் ஆசிரியர் : பலர் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிகப் பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

வயித்தியம் 1500-க்குச் சுருக்கம்
குருநூல் அன்பது. வயித்தியம்
எட்டிவிரைச் சூரணம்

போகுமப்பா மருந்துவகை யோனிக்குள் பூச
பூட்டுரே னிடைபாகம் பிரித்துக் கேளு
ஆகுமப்பா வகையொன்று பணவிடைதா னொன்று
ஆண்பிள்ளைக் கவ்வண்ண மரைத்துப் பூசி

முடிவு :

தேங்கியதோர் தேகமெல்லாம் புகைத்து நன்றாய்
தினமொன்று மூன்றுதினம் புகைக்கும் போது
ஏங்கியதோர் தேவதையும் பூதப் பிரேதம்
ஏவலொடு பசாசுவகை எல்லாம் போமே! — 1109

காலம் :

இல்லை

குறிப்பு :

இதில், உதிரி ஏடுகள் உள்ளன. அவை, 2,2,2,4,5,6,7,8,12,14,15,22,24,27,30 ஆகியவை.

இதில், குஷ்டத்துக்கு எட்டிவிதைச் சூரணம், சாத்திரபலின் அறியும்படி பிமேக வெட்டை, அரையாப்புக்கு எண்ணெய், வாத செந்தூரம், ஆறுசரக்கு, வயிரவர் பூசை, எட்டு சரக்கு லேகியம், அயச் செம்பு முதலியன உள்ளன.

★ ★ ★

வரிசை எண் : 2333-a சுவடி எண் : 1254

# வைத்தியத் திரட்டு

ஏடுகள் : 12 கி. எண்ணிக்கை : 300 அளவு : 36 × 3½ செ.மீ.
பக்கத்திற்கு : 6—8 வரிகள் ஆசிரியர் : இராமதேவர் முதலானோர் பொருள் :
மருத்துவம் நிலைமை : மிகப் பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்

**தொடக்கம் :**

**ராமதேவர் சோசியம் -120**
**சற சாஸ்திரம் முழுவதும்**

அண்டமெனும் கேசரியின் பாதங் காப்பு
அருள்பெருகும் பூரணத்தின் அறிவே காப்பு
குண்டமெனுங் குண்டலியாள் குறியே காப்பு
குருவான பராபரத்தின் குணமே காப்பு
மண்டலங்கள் மூன்றுமொன்றாய் நிறைந்து நின்ற
மகத்தான ரவிமதியின் சுடரே காப்பு
பிண்டமெனும் பொருளான அண்ட பிண்டம்
பேரண்டம் நிறைந்திருந்த கணபதியே காப்பு — 1

**முடிவு :**

**மகாதம்பனம்**

.......... நீர்முள்ளி ...........த்தில்
அரைத்து மிளகளவு உண்டை பண்ணி
நிழலுலத்தி சாயுங்காலம் 4 நாழிகை யிருக்கையில்
ஒரு குளிகை தின்னவும், அரைப்படி பசுவின்
பால் சாப்பிடவும், புளி தள்ளி சாப்பிடவும்
கை கண்டது

**காலம் :**

தாரண வருஷம் ஆவணி மாதம் 5-ஆம் தேதி திங்கட்கிழமை எழுதி முடிந்தது. நாச்சிமுத்துப்பிள்ளை படிக்கிறது.

இருப்பிடம் மாயாதவான்.

குறிப்பு :

இதில், முதல் ஏட்டில் சித்திரவட்டங்கள் வரையப்பட்டுள்ளன. தேளுக்கு மருந்து, மேருவுக்கு மேற்கே, தெற்கே, சகல ரெண களும்பு, அறுவகை செயநீர், விரசுத்தி, லிங்கசுத்தி, கற்பூர சிலாசத்து, சுத்தி, தாளகஞ் சுத்தி முதலியன உள்ளன.

★ ★ ★

வரிசை எண் : 2334 சுவடி எண் : 1265

## வைத்தியத் திரட்டு

ஏடுகள் : 13 கி. எண்ணிக்கை : 500 அளவு : 36 × 3½ செ மீ.
பக்கத்திற்கு : 7-9 வரிகள் ஆசிரியர் : இராமதேவர்முதலியோர் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிகப் பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்

தொடக்கம் :

### இராமதேவர் சூத்திரம்-ஐந்நூறு

ஆதியந்த மேநிறைந்த சோதி பாதம்
அகண்ட பரிபூரணத்தின் அறிவில்க் குட்டில்
பாதியாய் முப்பொருளு மூன்று மொன்றாய்
பரவெறியாய் நின்றபரா பரையின் பாதம்
நீதியாய் வராணத்தின் முகவன் பாதம்
நிறைந்தமலர் வாணிகுரு கந்தன் பாதம்
சோதியாய் நாதாக்கள் பாதம் போற்றி
சொல்லுகிறேன் சூத்திரத்தைச் சொல்லு வேனே — 1

முடிவு :

கெசப்புடம் போட்டால் வங்கம் சோளப் பொறிபோல
மலர்ந்துபோம் எடுத்துத் துணிக்கி வைத்துக் கொண்டு
தேன் நெய்யில் பணவிடை கொடுக்க, வாதம், சூலை
மேகம் போம்.

### வேறு

கல்நார் நறுக்கி அதில் யெருக்கம் பால்விட்டு
வெய்யிலிலே வைக்க எல்லாம் உண்டையாய்ப் போம்.

காலம் :

இல்லை

குறிப்பு :

இதில், ரோமரிஷி சுருக்கம்-100, சூலை 18-க்குக் குறை நோவு, கிரந்தி அரை யாப்பு, வெட்டை, கைமுடக்கு, கால் முடக்கு, தாமிர பற்பம், மால்தேவி பற்பம், பதினாலு சரக்கு செந்தூரம், வீரக்கட்டு சுன்னம், வாடை, வாதமுறை, ரோமரிஷி நாயனார் சுருக்கம்-100, நவ மூலத்துக்கு லேகியம் முதலியன உள்ளன. ஷெ நூல்களில் சில பாடல்களே உள்ளன.



வரிசை எண் : 2335 சுவடி எண் : 1.66

## வைத்தியத் திரட்டு

ஏடுகள் : 118 கி. எண்ணிக்கை 4000 அளவு : 36×3½ செ மீ. பக்கத்திற்கு : 6-10 வரிகள் ஆசிரியர் : அகத்தியர் முதலானோர் பொருள் : மருத்துவம் நிலைமை : மிகப் பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்

தொடக்கம் :

குன்மவலிக்கு மருந்து

வெடியுப்பு, கல்லுப்பு, பூநீர் இந்த மூணு
மருந்தையும் கொடிவேலி வேரும்
எருக்கம்பால் விட்டு அரைத்து ஷ இலைச்
சாறும் விட்டு அரைத்து வில்லை தட்டி

முடிவு :

மெழுகில் கடுகள வெடுத்து வையடா
கடிவாயில் வெதுப்பித் தானே ! — 984

தானென்ற கடிவாயில் வைத்துச் சேர்த்து
தலைமேலே யேறிநின்ற விஷங்க ளெல்லாம்
கோனென்று குருவருளால் விஷங்கள் சேர்த்துக் ........,

காலம் :

இல்லை

குறிப்பு :

இதில், காப்பேட்டில் பாதி இல்லை, பின்பக்கம் எழுதப்பட்டுள்ளது, இருமலுக்குச் சூரணம், உஷ்ணவாயுவுக்கு லேகியம், வண்டுகடிக்கு மருந்து முதலியன 21-ஆம் ஏடு வரை உள்ளன. 22-ஆம் ஏட்டில், அகத்தியர் பூரண சூத்திரம் 216' என்றுளது. தொடர்ச்சி இல்லை, பாட்டெண் இல்லை. வீரம் செந்தூரம், மதன சிந்தாமணிக் குளிகை, நாசியடைப்பு, நீர்ப்பாச்சலுக்கு நசியம் முதலியன உள்ளன.

—O—

வரிசை எண் : 2336

சுவடி எண் : 12t.7

## வைத்தியத் திரட்டு

ஏடுகள் : 26 கி. எண்ணிக்கை : 500 அளவு : 26 × 3½ செ.மீ.
பக்கத்திற்கு : 7—8 வரிகள் ஆசிரியர் : பலர் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிகப் பழுது முழுமை : முற்றற்றது எழுத்து: தமிழ்

தொடக்கம் :

### கடுகெண்ணெய்

பாடினேன் கடுகெண்ணெய் படிதான் ஒன்று
பண்பான பெருங்காயம், வசம்பு சுக்கு,
நாடியே கருநாவி, சாம்பி ராணி,
நாயகனே வெள்ளுள்ளி யோமம் குப்பை
ஆடினேன் மாவிலிங்கப் பட்டை கூட
அடவாக வகை வகைக்கி விராகன் மூன்று
கூடினேன் மேனிச்சார் விட்ட ரைத்து
குணமாகக் கடுகுபதம் தனில்வ டித்தே ? — 1

முடிவு :

62 — கற்மகாண்டம் முன்னூறு வியாதி வகைக்கி
66 — பூரணம் — 205
ஷை — லோக கற்பம் - ப...டுகுற நோய், குஷ்டம், சூலை
67 — காந்தம் த................ பற்பம்

காலம் :

இல்லை

குறிப்பு :

இதில், சூதக செந்தூரம் சாதிலிங்கக் கட்டு, வலிப்புகளுக்கு, அக்கினி மந்தம், சின்னபறணி, குளிகை, கன மின்னல், சிமிட்டு வெட்டுதல், இதுக்குத் தயிலம், சூதக வலிக்கு, வெடியுப்புத் திராவகம், அயகெந்தி, செந்தூரம் முதலியன உள்ளன.



வரிசை எண் : 2337 சுவடி எண் : 1268

## வைத்தியத் திரட்டு

ஏடுகள் : 20 (5—36 இடையிடையே ஏடுகள் இல்லை) கி. எண்ணிக்கை : 200
அளவு : 30×3 செ.மீ. பக்கத்திற்கு : 7—8 வரிகள் ஆசிரியர் : பலர்
பொருள் : மருத்துவம் நிலைமை : மிகப் பழுது முழுமை : முற்றற்றது
எழுத்து : தமிழ்.

வெ யெட்டி லொன்றைய்க் கசுர வாங்கி
இருநீரும் கிடாரத்திலே விட்டுப் பின்பு
பால்வகையாம் நால் மரத்தின் பட்டை
வகைக்குப் பலமூன்று நலமான
ஆவரையின் பட்டை பலமூன்றே ! — 15

முடிவு :

வீறான எழனியது பத்து நூறு
வெள்ளியென்ற கிழமைக்குப் பழந்தா னூறு
சாறான யிளனியிதில் பழம்பி சைந்து
சண்முகனார் தமையனுக்கு அபிஷேகஞ் செய்ய — 163

செய்தபின்பு தேங்காயை எடுத்தெ றிந்து
சிதற ............ ............ ...............

காலம் :

இல்லை

குறிப்பு :

இதில், மேகத் தயிலம், சயரோகலிதி, நாளகற்று, தயிலம் வாதராசாங்கம், பதினெட்டு குட்டத்துக்குத் தயிலம், வாதம், காரம் நிவர்த்தி, அயச் சவ்விரம், செந்தூரம் பித்தக் கிரிகை பதினெட்டுக்கும் ஆகியவை உள்ளன.



வரிசை எண் 2338 சுவடி எண் : 1269

# வைத்தியத் திரட்டு

ஏடுகள் : 65 கி. எண்ணிக்கை : 1400 அளவு : 22 × 3 செ மீ
பக்கத்திற்கு : 8—10 வரிகள் ஆசிரியர் ; பலர் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்

தொடக்கம் :

முரிப்பற்றும் மலையும் சடுதி ........ரைது
வலைவைக் குறைத்து ..........
குணவாதம் கொடிய கரப்பான் னிதுவாமே ! — 107

முடிவு :

வெள்ளைக் குன்றி நிலவாகை
வேண்டு துகிள்க்காய் கெல்லியுடன்
கள்ளச் செம்போலை நெருஞ்சியுடன்
காட்டில் மலைக்குமிழ் சங்கம்வேர்,
மெள்ளச் சிவனார் வேம்புடனே
வேணு மமுக்கிப் பிரம்பின் வேர்
விள்ளச் சத்திரக் கள்ளியின் வேர்
வியறா முத்தத் தாளிச

(இவ்வளவே உள்ளன)

சுகலம் :

இல்லை

குறிப்பு:

இதில் 15-ஆம் ஏடு முதல் தொடங்குகிறது. இடையிடையே ஏடுகள் இல்லை இருக்கும் ஏடுகளும் பழுதுபட்டுக் காணப்படுகின்றன.

இதில், வாத குன்மம், சிலேற்பன குன்மம், அக்கினி மந்தம், ஆதாரவாய்வு, ரெத்தப்பிரமியத்துக்கு நெய் முதலியன உள்ளன.

❋ ❋ ❋

வரிசை எண் : 2339 சுவடி எண் : 1270

## வைத்தியத் திரட்டு

ஏடுகள் 69 கி. எண்ணிக்கை 2000 அளவு : 42×3 செ.மீ.
பக்கத்திற்கு : 5 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

**குறிப்பு :**

பெயர்த்து எழுதுகின்ற அளவுக்குத் தெளிவில்லை. செல்லரிப்பு அதிகம்,

—OO—

வரிசை எண் : 2340 சுவடி எண் : 1271

## வைத்தியத் திரட்டு

ஏடுகள் : 102 கி. எண்ணிக்கை : 1500 அளவு : 19×3 செ.மீ.
பக்கத்திற்கு : 5—7 வரிகள் ஆசிரியர் : பலர் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

**தொடக்கம் :**

வெங்காரம் திப்பிலி புழுங்கரிசி
மிளகு கிராம்பு வகைக்கு பலம் — ½
புழுங்கரிசி மாத்திரம் நெய்யில் வருத்துக் கொண்டு
மற்றச் சரக்குகளை இடித்து வடிகட்டி

**முடிவு :**

திருமுலை சக்கரத்தாலே கட்டினேன்
திருவடிவு சக்கரத்தாலே கட்டினேன்

அம்மை ஆணை ஈசன் ஆணை
ரிஷிகள் ஆணை என்மேல் வரப்பட்ட
பேய் பிசாசு பில்லி சூனியம்
அணுகாமல் அப்புறம் போக சுவாகா உரு 1008

**காலம் :**

இல்லை

குறிப்பு :

இதில் ஏடுகள் முன்பின்னாக உள்ளன. இதில், பிள்ளைகட்கு, சகல வியாதிக்கு எண்ணெய், புண்ணுக்கு களும்பு, தாமிர பற்பம், சகல சரக்கும் முறிவுகள், வயத்துளவுக்கு, கிளிஞ்சி சுன்னம், நாவறட்சிக்கு, மருந்தீட்டுக்குச் சிகிட்சை முதலானவை கூறப்பட்டுள்ளன.

★ ★ ★

வரிசை எண் : 2341 சுவடி எண் : 1272

## வைத்தியத் திரட்டு

ஏடுகள் : 28 கி. எண்ணிக்கை : 50 அளவு : 24 × 3 செ.மீ.
பக்கத்திற்கு : 3—6 வரிகள் ஆசிரியர் : பலர் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிகப் பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்

தொடக்கம் ;

க்கு - உப்பு புளி, கைப்பு தள்ளி ஸ்நானமில்லாப் பத்தியம்

தாளகச் சுன்னம்

சுத்திசெய்த தாளகம் பலம்—1 பவளம் பலம்—1
பழச் சாற்றில் ஊறப்போட்டு, யௌந்த யெலை
அரைத்துப் பவளத்தைப் பிசைத்து, புடம் போட்டு
எடுத்துக்கொள்ளவும்

முடிவு :

| | | |
|---|---|---|
| லிங்கம் | விராகனெடை | — 4 |
| ரசகற்பூரம் | ,, | — 4 |
| வெங்காரம் | ,, | — 4 |
| வாளம் | ,, | — 16 |
| ஆமணக்குப்பருப்பு | ,, | — 8 |

காலம் :

இல்லை

குறிப்பு :

இதில், சக்கரை, லிங்க வெண்ணெய், வங்க செந்தூரம், பாசாணபற்பம், வெட்டை, மெழுகு, உருக்கு செந்தூரம், தாம்பூர செந்தூரம், வங்க பற்பம், ரசசுண்ணம், முதலியன உள்ளன.



வரிசை எண் : 2342 சுவடி எண் : 1273

## வைத்தியத் திரட்டு

ஏடுகள் : 5 கி எண்ணிக்கை : 50 அளவு : 24×3 செ.மீ. பக்கத்திற்கு 5—8 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : மருத்துவம் நிலைமை : மிக மிகப் பழுது முழுமை: முற்றற்றது எழுத்து : தமிழ்

**தொடக்கம் :**

துருசு வைப்பு முறை; பல ஒன்று வைப்பு

புங்கம் வேர் இசை ......... ச்சுப் பால் பிழிந்து துருசு
நாள் ஒன்று ஊர வைத்து கல்வத்திலிட்டு அரைத்து,
வில்லை தட்டி ... .. ...................

**முடிவு :**

நவச்சாரம் பலம் ½ .................. ஆறையும் கூட்டி
ஆட்டுப்பால் பழச்சார் விட்டு ஊற வைத்து
ஏழு மட்டை புடம் போடவும். வயறு யௌவு
எல்லாம் போகும்

**காலம் :**

இல்லை

**குறிப்பு :**

இதில், தாமிர சுத்தி, செந்துரம், குளிகை, தாளகம் முதலியன பேசப்பட்டுள்ளன.



வரிசை எண் : 2343 சுவடி எண் : 1274

## வைத்தியத் திரட்டு

ஏடுகள் : 86 கி. எண்ணிக்கை : 4000 அளவு : 32 × 3 செ மீ.
பக்கத்திற்கு : 9—10 வரிகள் ஆசிரியர் : பலர் பொருள் : மருத்துவம்
நிலைமை . மிக மிகப் பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்

**தொடக்கம் :**

............போது யெழும்புஞ்......... கொண்டு
யிருதி தருபட......... யென்று ரெண்டு லட்சம்
உருச்செவித்து ............ நருதியுடனதை
யழைக்க அலைதானிற்கும் நாவெ.........
............ ............ ...... நாட்டி னோமே! — 18

**முடிவு :**

உளுவையுஞ் சிராத்திரட்டி நெத்திலி யுறுதியாகும்
............ ............ கரியினைக் கூட்டிக் கொள்ளே ! — 143

கொள்வது லோக பற்பம்
கூறிய வகைவ கைக்கு
அளிவது இடைக்குக் கெந்தி
அதிலிடு களஞ்சி வீதம்
தளவது குமரிச் சாற்றில்
............ ............ ...............

**காலம் :**

இல்லை

**குறிப்பு :**

இதில், முதல் 4 ஏடுகள் இல்லை, 5 வது ஏட்டில் மேல் பாதி இல்லை, இடையில் 50–வது ஏட்டில் 94-வது செய்யுள் முடிகிறது. அடுத்த ஏடு 101-வது ஏடு இதில் 118-வது செய்யுள் தொடங்குகிறது.

இதில், இரண்டு நூல்கள் இருத்தல் வேண்டும். அப்பிரக செந்தூரம்; சயரோகம் வந்த வரலாறு முதலியன உள்ளன. 31, 32-வது ஏடுகள் பாதியாக உள்ளன,



வரிசை எண் : 2314 சுவடி எண் : 1275

# வைத்தியத் திரட்டு

ஏடுகள் : 8 கி எண்ணிக்கை : 350 அளவு : 36 × 3 செ.மீ.
பக்கத்திற்கு 8—9 வரிகள் ஆசிரியர் : பலர் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றற்றது. எழுத்து : தமிழ்

**தொடக்கம் :**

கலைஞான சூத்திரம் — 120
மேனிச் சூரணம் — குன்மம் குஷ்டம்
சில்விஷங்கள் — தீரும் சுருக்கம்

காணலா மிந்திர சாலம் மயேந்திர சாலம்
கருவான மோடியிலே யனந்தம் வித்தை
பேணவே சாலவித்தை கருமான மெல்லாம்
பிசகாமல் தோத்துமடா யிந்த நூலில்

**முடிவு :**

சொல்லடா அஞ்சாநாள் கொல்லும் கொல்லும்
துஞ்சாறில்... .. திங்களொரு யேழு யேழு
சொல்லடா புனர்பூச நாள்வந்த ரூட்சை
தீர்ந்துபோம் பதினோரு நாளில தானும்
புல்லடா பூசநாள் வந்த ..............

**காலம்**

இல்லை

**குறிப்பு**

இதில், கரிப்பான் சூரணம், சோகை, பாண்டு, சுரத்துக்குச் செந்தக மாத்திரை இஞ்சிலேகியம், வீரமெழுகு, நாகக்கட்டு, சாதிலிங்க சுத்தி, கெந்தக சுத்தி, மனோசிலை சுத்தி, தாளக சுத்தி முதலியன உள்ளன.

பின்னர், பழனிமலை பிரம்மாவுக்கு சாபந்தீர்த்து, மேருவுக்கு வடகிழக்கு மனிதர், மேருவுக்குத் தெற்கும் மனிதர் விபரம் 160 பாடல் என்ற தலைப்பு உளது பாடலும் உளது.

* * *

வரிசை எண் : 2345 சுவடி எண் : 1276

## வைத்தியத் திரட்டு

ஏடுகள் : 30 கி. எண்ணிக்கை : 400 அளவு : 28 × 3 செ மீ.
பக்கத்திற்கு : 3—7 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : மருத்துவம்
நிலைமை : பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

**தொடக்கம் :**

**லிங்கக் குழம்பு; சகல வியாதிக்கும் ஆகும்**

| | | |
|---|---|---|
| லிங்கம் | விராகனெடை | — 4 |
| ரசகற்பூரம் | " | — 2 |
| வெண்காரம் | " | — 2 |
| சத்தி வாளம் | " | — 8 |
| சின்னமுத்துப்பருப்பு | " | — 4 |

**முடிவு :**

| | | | | |
|---|---|---|---|---|
| செவ்வாய் | 3 | மணி முதல் | 4½ | மணிவரை |
| புதன் | 12 | " | 1½ | " |
| வியாழன் | 1½ | " | 3 | " |

**காலம் :**

இல்லை

**குறிப்பு :**

இதில், காலில் வாதம் பிடித்த பேர்களுக்கு மருந்து, வெடியுப்புக் கட்டு, பிள்ளை முண்டாக கட்ட, தாளகச் சுன்னம், வீரபஸ்பம், கிராணிக்கு லேகியம், அஞ்சாங்காச்சல், வயத்து கிராணிக்கு மருந்து, லிங்கக்கட்டு, தாளகக் கட்டு, வீர செந்தூரம், பெரும் பாட்டுக்கு, மருந்து முதலியன உள்ளன. உதிரி ஏடுகளாக உள்ளன.



வரிசை எண் : 2346 சுவடி எண் : 1277

## வைத்தியத் திரட்டு

ஏடுகள் : 7 கி. எண்ணிக்கை : 200 அளவு : 36×3 செ மீ
பக்கத்திற்கு ; 6—7 வரிகள் ஆசிரியர் ; பலர் பொருள் : மருத்துவம
நிலைமை : மிகப் பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

அயச் செந்தூரம்

அரைப்பொடி பழச்சாற்றில் சுத்திசெய்து
சித்துக் கலையத்தில் கோவைச்சார் நிறைய வாரு
மூன்றுநாள் ஆனபின் சாறுமட்டும் மூடிவைத்து
சாருசுண்ட குளம்போ டொக்க.

முடிவு :

பானையில் கொள்ளும் செலம் விட்டு வாய்க்கு
சீலை வேடுகட்டி கருங்குருவைப் பச்சரிசி மாவும்
யிது ..... ...... நாளியாவது புட்டுச்சுட்டு எடுத்து
வெய்யலில் காயவைத்து எடுத்துக் கொண்டு
மூணுநாள் சாப்பிடவும். இது ......... இச்சாபத்தியம்.

தேவிதுணையுண்டு

காலம்

இல்லை

குறிப்பு :

இது, மை பூசப்படாத சுவடி. 28, 29, 31, 32, 37, 40, 41 ஆகிய ஏடுகள் உள்ளன.

இதில், அஞ்சு நீர்க்குறிப்பு, வெடியுப்பு, நவச்சாரம், குடன், பூரணாதி லேகியம், நாராயணசாமி முறை, வெள்ளி வித்தை, பூத வகை சரக்கு, வண்டுகடிக்குப் புட்டு உள்ளுக்கு முதலியன உள்ளன.



வரிசை எண் : 2347 சுவடி எண் : 1278-a

# தெட்சிணாமூர்த்தி பரிபாஷை முதற்காண்டம்

ஏடுகள் : 15 கி. எண்ணிக்கை : 500 அளவு : 26 × 3½ செ.மீ.
பக்கத்திற்கு : 10—11 வரிகள் ஆசிரியர் : தெட்சிணாமூர்த்தி பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்

தொடக்கம் :

பரமனூ னோரதை யத்தின்
 பரஞ்சுட ருலகுக் கெல்லாம்
சிரமென வுதித்த ஞான
 தெய்வநா யகன்றாள் போற்றி
வரமென வகார யோக
 மனுப்பினால் பாஷை யெல்லாம்
குருமுனி தமிழால் செய்ய
 குமரன்ஐங் கரன்தாள் காப்பே ! — 1

முடிவு :

தாக்கிப்பா ரிந்தநூ லஞ்சு காண்டந்
 தான்பார்க்கில் சமுசியங்கள் தட்டுண்டேபோம்
நோக்கிப்பா ரிந்தநூல் தனக்குச் சாட்சி
 ரோமரிஷி அந்நூறும் நந்தி நூலும்
தேக்கிப்பா ரினாலே தெளியா துண்டோ
 சிவசிவா குருத்தேடி திரிய வேண்டாம்
பாக்கியமாம் நூலினிலே ரெண்டாங் காண்டம்
 பாடுகிறேன் முதற்காண்டம் பாவு முற்றே — 101

காலம் :

இல்லை

குறிப்பு :

ஏடுகள் சல்லடைக் கண்ணாக உள்ளன.

இதில் அஞ்சு சுன்ன விபரம், நிலம் நாலுக்கு மிடங்கள், மாதம் அறிய இடம் மாறுபாஷை பேரு அறியும்படி, பாஷையாய்ச் சொன்ன அட்சரம், பேருகளறிய முதலியன உள்ளன.

★ ★ ★

வரிசை எண் : 2348 சுவடி எண் : 1278-b

## தெட்சிணாமூர்த்தி பரிபாஷை 2-ஆங் காண்டம்

ஏடுகள் : 14(16-29) கி. எண்ணிக்கை : 500 அளவு : 26 × 3½ செ மீ.
பக்கத்திற்கு : 10—11 வரிகள் ஆசிரியர் : தெட்சிணாமூர்த்தி பொருள் : மருத்துவம்
நிலைமை ; மிக மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்

தொடக்கம்:

வழலைக் குருமுறை

முத்தணி நகையாள் வேத
முதல்வியைப் பாகம் வைத்த
சுத்தமெய்ஞ் ஞான தீபச்
சுடரெனுஞ் சோதி பாதம்
நித்தமுந் தொழுது போற்றி
நீதிசொற் பாஷை நூலின்
புத்தமு திரண்டாம் காண்டம்
பொருளினைப் புகலு வோமே ! — 1

முடிவு :

கூரான யிக்காண்ட மிருநூறுக் குள்ளே
வழலைகுரு செய்கின்ற மார்க்கஞ் சொன்னேன்
கூரான மூன்றினிலே கற்ப மூலம்
குணயான யிடைபஞ்சி கரணஞ் சொல்லுந்
தூரான காலிலே யோகஞ் சொல்வேன்
சுத்தவுப்பை யெடுக்கும் வகை யஞ்சில் சொல்லும்
சீரான உப்பெடுக்கும் வகையைப் பாரு
தெளிவான ரெண்டாங்காண்டஞ் சிவநூல் முற்றே — 100

காண்டம் ரெண்டுக்குத் திருவிருத்தம் – 200

குருகடாட்சம் துணையுண்டாகவும்

தெட்சணாமூர்த்தி பாதமே கெதியுண்டாகவும்

காலம் ;

இல்லை

குறிப்பு :

இதில், வழலை நாலுக்கும். பேர் அறிய, வழலை மார்க்கம், கும்பிடுகல் சுண்ணம், அண்ட சுன்னம், வழலை முறை, வெடியுப்புத் திராவகம், சிவசுண்ண வழலை முதலியன கூறப்பட்டுள்ளன.

★ ★ ★

வரிசை எண் : 2349 சுவடி எண் : 1278-c

## தெட்சிணாமூர்த்தி பாரிபாஷை 3-ஆங் காண்டம்

ஏடுகள் : 14(30-43) கி, எண்ணிக்கை : 500 அளவு 26 × 3½ செ.மீ.
பக்கத்திற்கு : 10 — 11 வரிகள் ஆசிரியர் : தெட்சிணாமூர்த்தி பொருள் : மருந்துவம்
நிலைமை மிக மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்

தொடக்கம் :

நடுக்காண்டம் பாடுதற்கு ஐங்கரனே காப்பு
ஐங்கரனே யென்னாளும் பாதம் போற்றி
முடுக்காண்ட மெனையாண்ட சோதி பாதம்
முனையாக நின்றதொரு வையர் பாதம்
திடுக்காண்ட ......ருடவுத் தாரத் தாலே
தெரிந்துரைத்தேன் ரோமரிஷி யந்நூ றாக
படுக்கான்ற யிந்தநூல் மூன்றாங் காண்டம்
பாயிரமா யய்ங்கரனே காப்புத் தானே ! — 1

முடிவு :

நோக்குவது பூரணசந் திரனை நோக்கி
நுண்மையுடன் பூரணமாய் நின்றா யானால்
நாக்குநுனி யந்தமதில் வாசி நின்று
நலுங்காமல் தீபமதில் நாடும் பாரு
வாக்குமன தொன்றாகி மூணாங் காண்டம்
வங்கணமே கனபவுசு வாழ்வுண் டாகும்
தாக்கமென்ற கொடுமைதனை யகத்தி மைந்தா
சுகமான யிடமறிந்து சுகத்தில் முற்றே — 100

காண்டம் 3-க்குத் திருவிருத்தம் 300

தெட்சணாமூர்த்தி
கிருபையுண்டாகவும்
வாலாம்பிகை கிடாட்ச முண்டாகவும்

காலம் :

இல்லை

குறிப்பு :

இதில், பிராணாயாமம், ஞான யிந்திரியம், கற்ம இந்திரியம், ஐம்புலன், கரணம் நாலு, வித்தியா தத்துவம், வாக்காதி முக்குணம், அண்ட மெழுத முதலியன உள்ளன.



வரிசை எண் : 2350

சுவடி எண் : 1278-d

## தெட்சிணாமூர்த்தி பரிபாஷை 4 — ஆங் காண்டம்

ஏடுகள் : 13 கி. எண்ணிக்கை : 500 அளவு : 26 × ½ செ.மீ.
பக்கத்திற்கு : 10—11 வரிகள் ஆசிரியர் : தெட்சிணாமூர்த்தி பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்

தொடக்கம் :

சதிரமா காண்டத்தைச் செப்பு தற்கு
சதாசிவனார் பாதமது சிரசில் வைத்து
நிரையமாஞ் சிவனுடைய வுத்தாரத் தாலே
நித்தியார மென்குருவின் பாதம் போற்றி
முறையமாம் ஞானத்தின் சமாதி காப்பு
முச்சுடரா மணிமுடிக்கும் பரமே காப்பு
கறையமா மணித்தாயார் காப்பு காப்பு
கடந்துநின்ற கணேசன்றாள் பாதங் காப்பே ! — 1

முடிவு :

மில்லையே பராபரத்தின் செய்கை தானு
மிவ்வாறே யிருப்பாரென் றால கேளு
தில்லையே பூரணத்தி னுள்ளே சொக்கி
துரியத்தின் சுடர்போலே தேக மாகி
மல்லையே மனத்தையந்த பூரணத்தில் மருவி
மற்றதெல்லாம் விந்தையென்று தெளிந்தா ரானால்
வில்லையே யருக்கெல்லா மனந்தான் காணு மிகுந்த
கோபத்தைப் போக்கினவன் ஞானி முற்றே ! — 100

ஆக காண்டம் 4-க்குத் திருவிருத்தம் — 400
வாலாம்பிகை துணையுண்டாக வேணும்
தெட்சிணாமூர்த்தி கிருபா கடாட்ச முண்டாக வேணும்
சிவகிருபை யுண்டாகவும்.

காலம் :

இல்லை

குறிப்பு :

இதில் வெடியுப்புச் செயநீர், அண்டக் குரு, அண்ட நீறு, அண்ட மெழுகு, சவுக்கார நீறு சமாதி, பாஷாணக்கட்டு, கழங்கு, நவலோகக்கழங்கு, முதலியன உள்ளன.



வரிசை எண் : 2351 சுவடி எண் : 2178-உ

## தெட்சிணாமூர்த்தி பரிபாஷை 5-ஆங் காண்டம்

ஏடுகள் : 14 (57-70) கி. எண்ணிக்கை : 500 அளவு : 26 × 3½ செ.மீ
பக்கத்திற்கு : 10-11 வரிகள் ஆசிரியர் : தெட்சிணாமூர்த்தி பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்

தொடக்கம் :

பராபரமா யம்பரமா யஞ்சாங் காண்டம்
பகருகிறேன் என்குருவின் பாதம் போற்றி
தராதரமா யெனையாண்ட சோதி பாதந்
தற்புதமே யற்புதமே மனமே யாகி
யராதரமாய்ப் பூரணமாய் யேக மாகி
யரகரா யேகாந்த சுரூப வெளியு மாகி
மராமரமாய் மண்ணும்விண்ணு மொன்று மாகி
மவுனமென்ற விநாயகனார் காப்புத் தானே ! — 1

முடிவு

சித்தியாஞ் செய்வதார் வஞ்சு காண்டஞ்
சியலுடனே பார்த்தவர்க்கங் கெய்துங் கெய்தும்
பத்தியா செய்வதா லாதிமுத லந்தம் வரை
பார்த்தோர்க்கங் கெய்து...........

முத்தியாச் செய்வதார் முதற்காண்டம் பிற்காண்டம்
முனையான கடசியஞ்சாங் காண்டந் தானு
மத்தியா செய்வதார் மூன்று காண்டம்
மக்களே பாத்தவர்க்கு பத்தி முற்றே ! — 100

ஆக காண்டம் 5-க்குத் திருவிருத்தம் 500

சிவகிருபா

**காலம் :**

அகத்திய ரருளிச்செய்த பரிபாஷை காண்ட மஞ்சு விசுவாவசு வருஷம் மார்கழி மாதம் 11-ந் தேதி, அந்தனப் பேட்டை கனகசபை எழுதி நிறைவேறினது.

முற்றும்

வாலாம்பிகை கிருபா கிடாட்ச முண்டாக வேணும்

**குறிப்பு :**

இதில், சூடன் கட்டு, பஞ்சபட்சி பரமானக்குரு, நாலாமடி...முதலியன உள்ளன ஏடுகள் சல்லடைக்கண்ணாக உள்ளன. பிழைகள் மலிந்து கிடக்கின்றன.



வரிசை எண் : 2352 சுவடி எண் : 1279-a

## அகத்தியர் பரிபாஷை முதற்காண்டம் —100

ஏடுகள் : 19 கி. எண்ணிக்கை : 450 அளவு : 20×4 செ.மீ.

பக்கத்திற்கு : 10—11 வரிகள் ஆசிரியர் : அகத்தியர் பொருள் : மருத்துவம்

நிலைமை : மிகப் பழுது முழுமை : முற்றற்றது எழுத்து ; தமிழ்

**தொடக்கம் :**

நசித்துப்பா ரென்றுரைத்த தாயே ......
\+ + + + + +
நீவாவா வென்றழைக்க வருவேன் பாரே ! — 1

**காலம் :**

இல்லை

குறிப்பு :

இது, எமது சுவடி எண் 1278-a போன்றது. காப்புச் செய்யுளின் மேல் மேற்கண்ட செய்யுள் மிகுதியாயுள்ளது. இடையிடையே ஏடுகள் இல்லை.

இதில், தலைப்பு 'அகத்தியர் பரிபாஷை' என்றுளது. அதில் தெட்சிணாமூர்த்தி பரிபாஷை என்றுளது. அகத்தியரும் தெட்சிணாமூர்த்தியும் ஒருவரா என்பது ஆய்வுக்குரியது.



வரிசை எண் : 2353 சுவடி எண் 1279-b

## தெட்சிணாமூர்த்தி பரிபாஷை 2—ஆங் காண்டம் — 100

ஏடுகள் : 16 கி. எண்ணிக்கை 400 அளவு : 20×4 செ.மீ. பக்கத்திற்கு 10—11 வரிகள் ஆசிரியர் : தெட்சிணாமூர்த்தி பொருள் : மருத்துவம் நிலைமை : மிகப் பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

காலம் :

இல்லை

குறிப்பு

இது, எமது சுவடி எண் 1278 b போன்றது.



வரிசை எண் : 2354 சுவடி எண் : 1279-c

## அகத்தியர் பரிபாஷை 3-ஆங் காண்டம் — 100

ஏடுகள் : 18 கி. எண்ணிக்கை 450 அளவு : 20×4 செ.மீ பக்கத்திற்கு: 10—11 வரிகள் ஆசிரியர் : அகத்தியர் பொருள் : மருத்துவம் நிலைமை : மிகப் பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்

தொடக்கம் :

சிவமான பூரணமே நாத விந்து
சின்மயமாய் நின்றதொரு பரமே யாதி

முவமான மில்லாத பரந்த னக்கு
முனையாகி நின்றதொரு நாதம் நாதம்

முடிவு :

சாடுவாய் சகலசித்தர் நூல்கள்க் கெல்லாம்
சற்குருவா மின்னூல்தான் அஞ்ஞா னாகும்
யேடுவாய் யெந்தெந்த நூல்கட் கெல்லாம்
இன்பமுள்ள முக்காண்டம் பூரணந்தான் முற்றே ! 101

சிவகுரு

காலம் :

இல்லை

குறிப்பு :

இதில் இடையிடையே ஏடுகள் முறிந்தும் சிதைந்தும் காணப்படுகின்றன.

இது எமது சுவடி எண் 1278-ன் வேறுபட்டது போலும்

✶ ✶ ★

வரிசை எண் : 2355 சுவடி எண் : 1279-d

## அகத்தியர் பரிபாஷை 4-ஆங் காண்டம்—100

ஏடுகள் : 11 கி. எண்ணிக்கை : 200 அளவு : 20×4 செ.மீ
பக்கத்திற்கு ; 10—11 வரிகள் ஆசிரியர் : அகத்தியர் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிகப் பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்

தொடக்கம் :

………… வைத்தா லூசி நீர்தான்
யூரான வூசிநீர் மூண்டாஞ் சுத்தி
யுடன்செய்த காசிநீர் கருவைக் கேளு
காரான கருவதுதான் காசி நீர்தான்
காசியென்ற சிலாநதியா யமுனை தீர்த்தந்
தூரான துங்கபத்திரி கோதா வேரி
துருவமென சரசுவதியின் தீர்த்த மாமே ! —18

முடிவு :

நாயரா மஞ் ஞாத்தில் பிலித சித்தி
நாதாக்கள் மறைநூல் குரு பீடம்
ஆயராம் ஐயாயிரத்து சொச்சங் கண்டு
ஆகதுகை யஞ்ஞாத்தில் அடங்கிப், போக
நாயரா மகத்தியனுட அமுர்த வாக்கியம்
நவரெத்தினம் நால்வேதம் முழுதுஞ் சொன்னேன்
யாயரா முக்கருவாஞ் சூட்சா சூட்சம்
ஆகிமுகிந்தது நாலாங் காண்ட முத்தே ! — 101.

ஆக காண்டம் 4-க்குத் திருவிருத்தம் --400.
அகத்தியாதி நாம ஓம் சிங் மங் ரங் யங் வங்
ஒகோகோ அகத்தீசர் நமாவென் றோதே.

தேவிசகாயம்

காலம் :

இல்லை

குறிப்பு :

இதில், தொடக்கம் 17 செய்யுட்கள் இல்லை. இடையிடையே ஏடுகளும், தலைப்பும் இல்லை. பிழைகள் மலிந்துள்ளன.

கடைசிப் பாடல் மிகைப் பாடல் போலும்.

வரிசை எண் : 2356 சுவடி எண் : 1279-ஆ

## அகத்தியர் பரிபாஷை 5- ஆங் காண்டம்

ஏடுகள் : 9 கி எண்ணிக்கை 250 அளவு : 20 × 4 செ.மீ.
பக்கத்திற்கு ; 10—11 வரிகள் ஆசிரியர் : அகத்தியர் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிகப் பழுது முழுமை : முற்றற்றது. எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஆதியா முதலவன்றா னனந்தம் போற்றி
அம்பிகை சத்தியுட கமலம் போற்றி
சோதியாய் நிரஞ்சனமாய் குண்டலியே போற்றி
சுழிமுனையில் கருவறிந்த பிரமனைப் போற்றி

முடிவு :

நூல்பார்த்து முகலாட மேறிப் பார்த்தே
ஹூஊஹூஊமையா தெரிசினத்தா லுடனே கண்டேன்
யான்பாத்தே னதுக்கப்பால் வாசி கொண்டு
ஆராய்ந்து பார்த்துநிரா தாரங் கண்டேன்
நேர்பார்த்து நிராதார தெரிசினத்தைக் கண்டு
நேராகப் பூசித்தே னப்பால் சேளு
மார்பார்த்து வாசிசிவ போகங் கொ………… — 74

காலம் :

இல்லை

குறிப்பு :

இதில், இடையிடையே ஏடுகள் இல்லை, முடிவு 26 பாடல்கள் இல்லை. பராபரத்தின் தீட்சை, நிராதார தீட்சை முதலியன இதில் பேசப்படுகின்றன.



வரிசை எண் : 2357 சுவடி எண் : 1279-f

## வைத்தியத் திரட்டு

ஏடுகள் : 16 கி. எண்ணிக்கை : 500 அளவு : 20×4 செ.மீ.
பக்கத்திற்கு : 11—13 வரிகள். ஆசிரியர் : கனகசபாபதி - அகத்தியர்
பொருள் : மருத்துவம் நிலைமை : மிகப் பழுது முழுமை : முற்றற்றது
எழுத்து : தமிழ்,

தொடக்கம் :

ஹரி:ஓம் நன்றாக.
பொதிகைசாமி துணை
கனகசபாபதி சாமிகள் சொல்படி

றாவணன் வீசை மூலிகை கொண்டுவந்து பலத்துக்கு
ரெண்டுபடி வீதம் சுட்டுக் காயவைத்து டி சாம்பலை
உப்புத் தண்ணியில் தெளிவான தண்ணியில்
கரைத்து ரவியில் வைத்து தெளிவை யிறுத்து

முடிவு :

போச்சப்பா பதினெண்பேர் நூல்க ளெல்லாம்
பொ...... போகாமற் றதது.
............ ............ ............ — 108

காலம் :

இல்லை

குறிப்பு :

இதில், இடையிடையே ஏடுகள் இல்லை. இதில், எலி ஓடிப்போக, வெடியுப்புக்கட்டு, வெங்காரக்கட்டு, கற்பூரக்கட்டு, வாசமுனி மறைப்பு, பிரமமுனி, குருத்தயிலம், நாகக் கட்டு, நவலோகக் கட்டு, ரோமரிஷி நூல் பிரமமுனி மறைப்பு, செப்பு சுத்தி, அகத்தீசர் மறைப்பு, முப்பு, சவுக்காரக் குருவுண்டை முதலியன காணப்படுகின்றன.

★ ★ ★

வரிசை எண் : 2358

சுவடி எண் : 1280-a

## அகத்தியர் சுரநூல்

ஏடுகள் : 4
கி. எண்ணிக்கை : 100
அளவு : 26 × 3 செ.மீ
பக்கத்திற்கு : 6—7 வரிகள்
ஆசிரியர் : அகத்தியர்
பொருள்: மருந்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது
முழுமை : முற்றுமுளது.
எழுத்து : தமிழ்

தொடக்கம் :

ஆமப்பா சுரதோஷத் தாண்மை யெல்லாம்
அறைந்திட்டேன் முன்பேதான் அடக்க மெல்லாம்
ஓமப்பா நட்சத்திர மவத்தை தொந்த
முற்றுக்கேள் புலத்தியனே மச்சமுனி நீங்கள்
வேமப்பா அசுபதிநாள் வந்தசுரந் தானும்
விட்டுப்போ மெட்டாநாள் பரணி நாளிற்
போமப்பா வந்தசுரங் கொல்லா தாகிற்
பொறுக்குமடா வொன்பதிற்கார்த் திகைநாள்க் கேளே ! — 1

முடிவு :

> கூரப்பா வினைக ளெல்லாம்
>     வகைவகை யாகச் சொன்னேன்
> நூரப்பா நோய்க ளெல்லா
>     முரைத்திட்டே முருதி யாகப்
> பாரப்பா யிந்த நூலைப்
>     பண்டிதம் பெண்டித் தானாற்
> சேரப்பா விரித்து நன்றாய்ச்
>     சேர்த்திடில் சித்த னாமே ! — 15

சுரனூல் முற்றும்

காலம் :

இல்லை

குறிப்பு :

இது, எமது சுவடி எண் 745-f/D 1471 போன்றது.

இதில், சுரம் வருவதற்குரிய அறிகுறியும், சுரத்தின் தன்மையும், நீக்கும் மருந்தும் கூறப்பட்டுள்ளன.



வரிசை எண் : 2359 சுவடி எண் : 1280-b

## கெர்ப்பக் கோள்

ஏடுகள் : 4 கி. எண்ணிக்கை : 100 அளவு : 26×3 செ மீ.
பக்கத்திற்கு : 6—7 வரிகள் ஆசிரியர் : அகத்தியர் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

> பாரப்பா பெண்மலடாங் கெற்பக் கோளின்
>     பக்குவத்தைச் சொல்லுகிறோம் பண்பாய்த் தானே
> யாரப்பா வாண்மலடே யாகு மல்லால்
>     அப்பனே பெண்மலடு யாது மில்லை

முடிவு :

கள்ளமுள்ள கைமசக்குக் காவெண்ணை தன்னிற்
கனமிளகோ டருந்தினாற் கனிவுண்டாகும்
தெள்ளியநற் சாயமொடுப் பிச்சாற்றில் அருந்தத்
தெருவையற மாநவிடாய் திறங்குந் தானே ! — 32

முன் சுர நூல் விருத்தம் 15, கெற்பக்கோள் விருத்தம் — 17
ஆக இனம் 2-க்குத் திருவிருத்தம் — 32

புண்ணியமூர்த்தி

காலம் :

இல்லை

குறிப்பு :

இது, எமது சுவடி எண் 317m-/D 591 போன்றது.

இதில், பெண்மலடு இல்லையென்றும், ஆண் மலடே மலடென்றும் அதற்குரிய காரணங்களும், போக்கும் வழியும், மருந்துகளும் கூறப்பட்டுள்ளன. இது, 'கெர்ப்பக் கோள்—16' என்றும் பேசப்படும். 243-a யும் இது போன்றதே.

★★ ★

வரிசை எண் : 2360

சுவடி எண் : 1280-c

## சில சந்தனாதித் தைல வகை

ஏடுகள் : 5 (9—13) கி. எண்ணிக்கை : 100 அளவு : 26×3 செ.மீ.
பக்கத்திற்கு : 6—7 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

செய்யடா புலத்தியனே சிறுசந்த னாதி
சிவனுக்குச் சஞ்சீவி நோய்க்குமார் பாணி
செய்யடா வேதமுறை நானகன்று சொன்னேன்
தீருகிற நோய்தன்னைச் செப்பக் கேளு
செய்யடா சிரசுமுதற் கண்டம்வரை நோய்கள்
சிறந்ததுகை முன்னூற்று வஞ்சுட னானான்கு
செய்யடா வுந்திமுதற் கண்டம்வரை நோய்கள்
சிறந்ததுவும் நானூற்று நான்கு மீராறே ! — 1

முடிவு :

ஆமப்பா வக்கிரியாம் நதந்தா னெட்டு
வரையாப்பு வதிசாரம் பன்னி ரெண்டு
மாமப்பா நயனவிதி தொண்ணூத் தாறு
வதந்தவாய்வுந் திரட்சி முப்பத்திரண்டு
வாமப்பா காமாலை பீனிசம் பனிரெண்டு
வப்பனே கல்லடைப்பன் றசையடைப்பன் எண்ணான்கு — 18

காலம் :

இல்லை

குறிப்பு :

இதில், சந்தனாதித் தயில வகைகளும், நோய்களின் குணம் குறிகளும் வகைகளும் கூறப்பட்டுள்ளன.

★ ★ ★

வரிசை எண் : 2361 சுவடி எண் : 1280-d

## அகத்தியர் வைத்திய சூத்திர நாடி முறை

ஏடுகள் : 17 (16-33) கி. எண்ணிக்கை : 350 அளவு : 26×3 செ.மீ
பக்கத்திற்கு : 6—7 வரிகள் ஆசிரியர் : அகத்தியர் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்

குறிப்பு :

பிழைகள் மலிந்து கிடக்கும் இந்நூல் எமது சுவடி எண் 323-h/D 629, போன்றது அது, 'அகத்தியர் வாகட சூத்திரம்—100' என்றது. தலைப்புகள் வெவ்வேறாக இருந்த போதிலும், தொடக்கப்பாடல் சுவடி எண் 1/D-1; சுவடி எண் 3-a/D-3; எண் 301-h/D 539, எண் 323-h/D.629 முதலானவைகளில் ஒன்றாகவே காணப்படுகின்றன.

※ ※ ※

வரிசை எண் : 2362 சுவடி எண் : 1280-e

## அகத்தியர் வைத்தியம் — 36

ஏடுகள் : 9 (34—42) கி. எண்ணிக்கை : 200 அளவு : 26×3 செ.மீ.
பக்கத்திற்கு : 6—7 வரிகள் ஆசிரியர் : அகத்தியர் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்

குறிப்பு :

இது எமது சுவடி எண் 321-c/D. 638 போன்றது.

★ ★ ★

வரிசை எண் : 2363 சுவடி எண் : 1280-f

## அகத்தியர் வைத்தியம் — 50

ஏடுகள் : 13 (43-55) கி. எண்ணிக்கை : 250 அளவு : 26×3 செ.மீ.
பக்கத்திற்கு : 6—7 வரிகள் ஆசிரியர் : அகத்தியர் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

குறிப்பு :

இது எமது சுவடி எண் 311-h D 569 போன்றது



வரிசை எண் : 2364 சுவடி எண் : 1280-g

## அகத்தியர் நூல் — நாற்பத்தெட்டு

ஏடுகள் : 10(56-65) கி. எண்ணிக்கை : 200 அளவு : 26×3 செ.மீ.
பக்கத்திற்கு : 6—7 வரிகள் ஆசிரியர் : அகத்தியர் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

குறிப்பு :

இது, எமது சுவடி எண் 311-g/D 568, எண் 189-b போன்றது

இது, 'அகத்தியர் திருநடன சூத்திரம்' எனவும், 'அகத்தியர் பூரண சூத்திரத்துக்குச் சுருக்கம் நாற்பத்தெட்டு' எனவும் பெயர் பெறும்.

இதில் தேங்காய் நெய், குஷ்டத்துக்கு முதலியன உள்ளன. 62—72 வரை ஏடுகள் இல்லை.

❋ ❋ ❋

வரிசை எண் : 2365 சுவடி எண் : 1280-h

## யோகச்சித்தர் வெண்பா

ஏடுகள் : 6(73—78) கி. எண்ணிக்கை 120 அளவு : 26×3 செ மீ.
பக்கத்திற்கு : 6—7 வரிகள் ஆசிரியர் : யோகச்சித்தர் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்

**தொடக்கம் :**

இரதச முத்திர ராசியுமூன் றாகி
முரவோர்க் கெளிதாக்கும் யோகந் - திரமா
மணிமந் திரவாய்வு வாய்க்குயுக மூன்றி
லணிகலில் மூ· றுசர மாப்.

முடிவு :

ஆனதோர் சுருதி ...........னி லப்பிரக செந்தூரந்
தானருந்து சூத......... வான்புகழ்
மாமத னாகிருங் குளிகையாம் மானுமத
தாமதுவுங் காந்தமதில் தானே !

காலம் :

இல்லை

குறிப்பு :

பிழைகள் மலிந்துள்ளன. அயச்செந்தூரம் முதலான மருந்துகள் பேசப்படுகின்றன, ஏடுகள் ஒடிந்தும், சல்லடைக் கண்களாகவும் உள்ளன.

★ ★ ★

வரிசை எண் : 2366 சுவடி எண் : 1280-i

## அகத்தியர் வைத்தியம் — 205

ஏடுகள் : 39(79-117) கி. எண்ணிக்கை : 1000 அளவு : 26×3 செ.மீ.
பக்கத்திற்கு : 6—7 வரிகள் ஆசிரியர் : அகத்தியர் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்

குறிப்பு :

இது, எமது சுவடி எண் 17-a/D.19, எண் 124-d/D.204, எண் 311-c/D.566 எண் 323-a/D.622, எண் 530-j/D.1193 முதலானவை போன்றது.

※ ※ ※

வரிசை எண் : 2367 சுவடி எண் : 1280-h

## அகத்தியர் — 150

ஏடுகள் : 24(118-141) கி. எண்ணிக்கை : 400 அளவு : 26×3 செ.மீ
பக்கத்திற்கு : 6—7 வரிகள் ஆசிரியர் அகத்தியர் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்

குறிப்பு :

இது, எமது சுவடி எண்கள் 269-b/D.483, 324-b/D.637, 330-c/D.653 ஆகியவை போன்றது.

இதன் பின்னர் வைத்தியம் எழுதிய ஏடு ஒன்று உளது.

※ ※ ※

வரிசை எண் : 2368 சுவடி எண் : 1281

## அகத்தியர் வைத்தியத் திரட்டு

ஏடுகள் : 188 கி. எண்ணிக்கை : 4000 அளவு : 27×3 செ.மீ.
பக்கத்திற்கு : 5—6 வரிகள் ஆசிரியர் : அகத்தியர் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்

தொடக்கம் :

அகத்தியர் வாகடம்
சன்னியின் குணம் அறியும்படி

ஒளிவளர்ந்த நாடி ஓங்காரத் தஞ்செழுத் துமைபத்தி
மொழிமற வாதநாடி முந்தியிடமாகத் தோன்றும்
விரைவான சன்னிபதி னெட்டும் உள்ளபடி பாடுதற்கு
கரியானை முகத்தோனே கந்தனே காப்பாமே.

முடிவு :

மூலக்கிராணிக்கு

கோலப் புளியதின் கொட்டை யரைத்தொரு நிறையாய்
சாலத் தயிர்தனில் கொளமூன்று நாளந்தி சந்தியுமாய்
மூலக் கிராணிக் கடுப்புனை வயவுமிவ் வூர்விட்டுப்போம்
தாலத் திச்சா பத்திய மாகொள்ளத் தீர்தகுந் தகுமே !

காலம் :

இல்லை

குறிப்பு :

இதில், ஏடுகள் எல்லாம் முறிந்தும் ஒடிந்தும் உள்ளன. தலைதடுமாறியும் உள்ளன. இதில் இரண்டு மூன்று நூல்கள் குறையாக உள்ளன. அகத்தியர் வைத்தியச் சுருக்கம் 150, தைலவகை சூரணம் முதலியன இருக்கின்றன. நூல்களைத் தனித்தனியாகப் பிரிப்பது கடினமாக உளது.

★ ★ ★

வரிசை எண் : 2369 சுவடி எண் : 1282-ஆ

## அகத்தியர் கருக்கிடை — 300

ஏடுகள் : 25 கி. எண்ணிக்கை : 1500 அளவு : 29 × 4 செ.மீ.
பக்கத்திற்கு : 13—15 வரிகள் ஆசிரியர் : அகத்தியர் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது (செல்லரித்த நிலை) முழுமை : முற்றுமுளது
எழுத்து : தமிழ்

**தொடக்கம் :**

(ஓமென்)'ற கணபதியின் பாதம் போற்றி
முத்திபெற்ற ........... ............
............கு ........... குன் குகைதான் .......

**முடிவு :**

சத்திநின்ற யிடங்காணப் பேறும் பெற்றேன்
சகலவுயிர் தானாம... முன்னூறு முற்றே ! — 196

நந்தீசுபர ரருளிச் செய்த முன்னூறு முற்றும்
நாகை புத்தூர் அருணாசலம் பிள்ளை

எழுதி முகிந்தது

**காலம் :**

இல்லை

**குறிப்பு :**

இந்நூல், மிகவும் பூச்சியரிக்கப்பட்டு சல்லடைக் கண்ணாக உள்ளது ஒப்புமைக்கு ஆகும்.

★ ★ ★

வரிசை எண் 2370 சுவடி எண் : 12 2-b

## புசுண்டர் யோகநிலை சூத்திரம் — 32

ஏடுகள் : 4 கி. எண்ணிக்கை : 250 அளவு : 29×4 செ.மீ.
பக்கத்திற்கு : 13—15 வரிகள் ஆசிரியர் : (காக)புசுண்டர் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றுமுள்து எழுத்து : தமிழ்

**தொடக்கம் :**

ஆதியெனை யீன்டகுரு பாதங் காப்பு
அத்தொய்த பிரணவத்தின் அருளே காப்பு
.......... ........ ... யானம் பெற்ற
தி......லம் ......சித்தருட பாதங் காப்பு

முடிவு :

உபநிடதப் பொருளே நிலவாத த...யோக
நிஷ்டை நிறைந்ததுவே முற்றே முற்றும். — 32

நாகை புத்தூர் வயித்தியன் அருணாசல பிள்ளை
எழுதி முகிந்தது

முற்றும்

காலம் :

இல்லை

குறிப்பு :

இது மிகவும் செல்லரித்த நிலை எழுத்துக்கள் தெளிவாக உள்ளன,

★ ★ ★

வரிசை எண் : 2371

சுவடி எண் : 1282-c

## வால்மீகர் ஞான சுகாதீதம் — 16

ஏடுகள் : 2 கி, எண்ணிக்கை : 100 அளவு 29×4 செ.மீ.
பக்கத்திற்கு : 13—15 வரிகள் ஆசிரியர் : வால்மீகர் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்

தொடக்கம் :

(இ)குள் வெளியாய் நின்ற...
.............. ...... ...............
+ + + + + +
வருமுருவே சிவசத்தி (வடிவ) தாகும்
வந்த......... .............. ................

முடிவு :

............ வட்டத்துள் நடுவே நின்றால்
குமரியவள் வாலைசிறு பெண்தான் தேவி
கொ............ ......... ... ............ சொன்னேன்
குவலயத்தில் பதினாறுங் குருத்தான் முற்றே. — 16

காலம் :

இல்லை

குறிப்பு :

இதில் இரண்டாம் ஏட்டின் முதற் பகுதி முறிந்துளது. மிகவும் சிதிலமாகவுளது. இதன்பின் ஒருநூல் 2 ஏடுகளில் உருவிழந்து நிற்கிறது.

★ ★ ★

வரிசை எண் : 2372 சுவடி எண் : 1282-ம்

## நள வெண்பா

ஏடுகள் : 30 கி. எண்ணிக்கை : 2000 அளவு : 29 × 4 செ.மீ.
பக்கத்திற்கு : 9—14 வரிகள் ஆசிரியர் : புகழேந்திப்புலவர்
பொருள் : இலக்கியம் நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றற்றது
எழுத்து : தமிழ்

தொடக்கம் :

(நேசரிதங் கூற நிலவலயந் தாங்குநளன்
மாசரிதங் கூற வருந்துணையா — ஈசன்
கரியா னனத்தான் கருதுபுகழ் பூண்ட
கரியா னனத்தான்) கழல்,
\+ + + + + +
தேன்பாடுந் தார்நளன்றன் றெய்வத் திருக்கதையை
யான்பாட லுற்ற விது.

முடிவு :

மன்றிலிளங் .. யொடு மக்களுந் தானுமொடு
வென்றி மணிநெடுந்தேர் மேலேறிச் ... (சென்றடைந்தான்)
மாவிந்த மென்னும் வளநகரஞ் சூழ்ந்தவொரு
பூவிந்தை வாழும் பொழில் — 84

காலம் :

இல்லை

குறிப்பு :

இதன் பாதிப் பகுதிக்குமேல் மிகமிகப் பழுது பட்டநிலை. கலிநீங்கு காண்டம் முதல் சற்று சுமாராக உளது. இந்நூல் அச்சாகியுளது.



வரிசை எண் : 2373 சுவடி எண் : 1282-c

## அகத்தியர் பள்ளு — 200

ஏடுகள் : 29 கி. எண்ணிக்கை : 2000 அளவு : 29×4 செ.மீ.

பக்கத்திற்கு : 12—14 வரிகள் ஆசிரியர் : அகத்தியர் பொருள் : மருத்துவம்

நிலைமை : மிகமிகப் பழுதுபட்ட நிலை முழுமை : முற்றுமுளது

எழுத்து : தமிழ்

தொடக்கம் :

ஆதிபரை சிவனுடைய பாதம் போற்றி
அருள்ஞான ..........தி ய......... பாதம் போற்றி
..................யிந்து பள்ளு யிரநூறும்
உகந்து வைத்தியத் ..................

முடிவு :

கான் ஞானமும் நீதி வாழி
காண வாதமான தங்கமும் வாழி
கான நலமான கெந்தி வாழி
(கான) பிலமா வாதி வாழி
காண வாணப் பொதிகைதனி லுகந்தவா
ஞானமான அகத்தியர் வடிவுதான் வாழி
காண பள்ளு திடமாய்ப் படிப்போர் திதம் வாழி ! — 211

பள்ளு முற்றும்

சுப்பிரமணியர் துணை

காலம் :

இல்லை

குறிப்பு :

இதில், புண்ணுக்குத்திரி, புகை, பேதிக்கி மாத்திரை, புகை, கண்வியாதிக்குப் புகை புழிப்புண்ணுக்கு மெழுகு, காந்த பற்பம், அயக்காந்த செந்தூரம், துரிசுச் செம்புவேதை, மேகம், நீரழிவு, ரசசெந்தூரம், குன்மத்துக்கு, பாண்டுகாமாலை சோகை மாந்தைக்கு மருந்து முதலியன உள்ளன.

மருத்துவம் பள்ளு சந்தத்தில் பாடப்பட்டதாகுமிது.

★ ★ ★

வரிசை எண்: 2374 சுவடி எண் : 1282-f

## புலத்தியர் பள்ளு — 300

ஏடுகள் : 14 கி. எண்ணிக்கை : 1500 அளவு : 29 × 4 செ.மீ.
பக்கத்திற்கு : 13—15 வரிகள் ஆசிரியர் : புலத்தியர் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஆனையுரித் திடத்தரித்த யீசன் பாதம்
ஆதிபார பரையினுட பாதம் போற்றி
ஞானமுள்ள மயிலூர்ந்த கந்தன் பாதம்
நாடியே யனுதினமும் போற்றி செய்து
கோனனையின் வல்லபையைக் குடத்தில் வைத்த
குணமான கணபதியின் பாதம் போற்றி
மானமுள்ள வயித்தியர் தான் பிழைக்க வேண்டி
மாய்கையறப் பண்டிதத்தை யெழுத்தி னேனே ! — 1

முடிவு :

ஆதிமா முனிவரந்தப் புலத்தியரும்
நீதியா மூத்தபள்ளி நேரா யிளைய பள்ளி
சோதியான பள்ளன் சுகமாக வாழியென்
பாதியாம் பள்ளு முன்னூ பண்பாக வாழியதே ! - 234

கால்ப்

இல்லை

குறிப்பு :

இதில், முன்னூறு செய்யுட்கள் இல்லை யாயினும், வாழ்த்துப் பாடல், இறுதியில் உள்ளது. இதில், ரசகற்பூரத்தில் விமரசம், தாதுபுஷ்டிக்கு அயச்செந் தூரம், சண்ட ரச பற்பம், காந்த செந்தூரம், சேங்கொட்டை வல்லாதி, சீன கற்பூரம், சுரத்துக்கு ஆக்கி ராணம், ரசம் கட்ட முதலியன உள்ளன.

வைத்தியத்தினை பள்ளு சந்தத்தில் பாடியுள்ளார்.



வரிசை எண்: 2375 சுவடி எண் : 1282-ஐ

## அகத்தியர் — 100

ஏடுகள் : 13 கி. எண்ணிக்கை : 900 அளவு : 29×4 செ.மீ.
பக்கத்திற்கு ; 12—15 வரிகள் ஆசிரியர் ; அகத்தியர் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

பூரணமா சுழினை (நடுக் கமல) மீதே
புகழ்பெரிய கரிமுகவன் கணபதியே காப்பு
(காரணமா) யெனையாண்ட பராபரனைப் போற்றி
கட்டாக வாதத்தி லெக்ஷசங் காப்பு

முடிவு :

மனம்வேறு சாதகமாய் சாத்திரத்தைப் பார்த்து
மனம்பிலக்குங் குருபாதம் வணங்கி நின்றால்
மனம்வேறு மாறது சித்தி முத்தி
வாய்க்குமே சித்திரந்தான் நூறும் முற்றே ! - 100

குருபாதமே துணை

காலம் :

இல்லை

குறிப்பு :

இது. எமது சுவடி எண் 466-d/D. 1036 'அகத்தியர் 1200-ல் சூத்திரம்-100 போன்றது. பிழைகள் மலிந்து கிடப்பினும் சில நல்ல பாடங்களும் உள்ளன.

வரிசை எண் : 2376 சுவடி எண் : 1283-a

## அகத்தியர் — 200 (205)

ஏடுகள் : 32 கி. எண்ணிக்கை : 1000 அளவு : 21 × 3 செ.மீ.
பக்கத்திற்கு : 8—10 வரிகள் ஆசிரியர் : அகத்தியர் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்

குறிப்பு :

இது, எமது சுவடி எண் 3 1-e D 566, எண் 323-a/D 622, எண் 453/D 1006 போன்றது.

இதன்பின் இதன் அட்டவணை எழுதிய ஏடுகள் உள்ளன.



வரிசை எண் : 2377 சுவடி எண் : 1283-b

## வைத்தியத் திரட்டு

ஏடுகள் : 16 கி. எண்ணிக்கை : 400 அளவு : 21 × 3 செ.மீ.
பக்கத்திற்கு : 8—10 வரிகள் ஆசிரியர் : பலர் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

சேர்டா தூரி உண்ணடக்கு

கெந்தகம் அரிதாரம், பச்சைநாவி, இருவி
அன்னபேதி. துத்தம், துருசு, கடுகுரோகிணி
நெறிவிஷம், வெள்ளைப பாஷாணம்
கெவுரி பாஷாணம், சாதிலிங்கம்

முடிவு :

இந்த மருந்து, வாயுவுக்கும், விப்புருதிக்கும்,
குன்மத்துக்கும், வகுத்து வலிக்கும், பல்வலிக்கும்
சிறுக எடுத்துக் குடுக்கவும்
வாய்வு குன்மத்துக்கு கும்மட்டிக் காய்ச் சாறு

**காலம் :**

இல்லை

**குறிப்பு :**

இதில் பலவகையான மருந்துகள், பல விதமான வியாதிகட்கும் கூறப்பட்டுள்ளன.



வரிசை எண் : 2378 சுவடி எண் : 1284-a

## அகத்தியர் கர்ம காண்டம் — 300

ஏடுகள் : 62 கி. எண்ணிக்கை : 2000 அளவு : 22×3 செ மீ.
பக்கத்திற்கு ; 10—12 வரிகள் ஆசிரியர் : அகத்தியர் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்

**தொடக்கம் :**

வேகமா நெறிசேரு ......களுந் தாகபோக
விடாதத ........லி னால்வரு துன்பமும்
போக யானை முகத்தோனைப் போற்றுவாம்

**முடிவு :**

தெரிசினமாங் ..... குல் வருவ தேது
தீர்க்கமடா சிரகருக்கு ெ......வா யமுர்தம்
கரிசினமா முன்னூரின் கர்ம கர்மம்
காடான மருந்துவகை கணக்கு முற்றே ! - 302

அகத்திய ரருளிச் செய்த கர்ம காண்டம்
முன்னூறும் முற்றும்

**காலம் :**

சௌமிய வருஷம் மாசிமாதம் 22-ந் தேதி, ஆதித்த வாரஞ் சுவாதி நடசத்திரங் கூடிய தினத்தில் அந்தனப் பேட்டையிலிருக்கும் கனகசபை எழுதி நிறவேறினது;

முற்றும்

வாலாம்பிகை கிருபையுண்டாகவும்

குறிப்பு :

இது, எமது சுவடி எண் 323-b/D 623-ன் வேறாயது போலும். பிழைகள் மலிவு சல்லடைக் கண்ணாக உள்ளதால் சரியான பாடம் காண இயலவில்லை.

இதில், வியாதி வரலாறு, கர்ப்ப நிவர்த்தி, மேகராசாங்கத் தயிலம், முதலியன உள்ளன.

—OO—

வரிசை எண் : 2379 சுவடி எண் ; 1284-b

## தேரையர் வைத்தியம் — 100

ஏடுகள் : 10 கி. எண்ணிக்கை : 500 அளவு : 22×3 செ மீ.
பக்கத்திற்கு : 12—15 வரிகள் ஆசிரியர் : தேரையர் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்

தொடக்கம் ;

திருவி னாயகன் தென்ளகை வாழ்தனில்
அருமையா யெ....... கன்னுரைத்த ......டி
வருமை யில்லா வயித்திய நூல் ............
குருமுனி பாதங் கொண்டுதுதி செய்வாம்.

முடிவு :

வசமதாறு யிந்த நூறு
வாகுடன் பார்த்த பேர்கள்
திசமுள்ள வயித்திய ராவர்
நெடும்புவி யுள்ளோ ரெல்லாம்
திசைமுக னருளால் சொன்ன
தேரையன் மருந்து கொண்டே
......... மிகவுண் டாகி
புவிதனில் வாழ்வார் தாமே ! — 101

தேரையர் வைத்தியம் நூறும்

முற்றும்

நாகை புத்தூர் அருணாசலம் பிள்ளை

**காலம் :**

இல்லை

**குறிப்பு :**

இதில், சுரத்துக்கு பூபதி குளிகை, சுக விரோசனம், வாயுவுக்கு, மூக்கில் ரத்தம், அடைப்புக்கு, கிரிப்பூச்சிக்கு, கல்லடைப்புக்கு, மாந்தம், சவலைக்கு, மேகம் 20-க்கும்... செந்தூரம் முதலியன உள்ளன.

★★ ★

வரிசை எண் : 2380 சுவடி எண் : 1:85

## அகத்தியர் — 36

ஏடுகள் : 38 கி. எண்ணிக்கை : 400 அளவு : 20×3 செ.மீ.
பக்கத்திற்கு : 4—6 வரிகள் ஆசிரியர் : அகத்தியர் பொருள் : மருத்துவம்
நிலைமை . மிக மிகப் பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்

**தொடக்கம் :**

பாரப்பா செம்பினுட வெள்ளை கேளு
பரிவான தாம்பிரத்தைக் குகையி லிட்டுச்
சேரப்பா பதினாறு பலமே போடு
சேந்துருகும் போதினிலே மருந்து கேளு

**முடிவு :**

கொங்கணர் போகநாயன்
மச்சமுனி புண்ணாக்கீசர்
திருமூலர் காலாங்கி
ராமதேவர்

**காலம் :**

இல்லை

**குறிப்பு :**

இதில், இந்நூலுடன் மச்சமுனி 800-ன் உதிரி ஏடுகளும் இவ்வேடுகளும் கலந்துள்ளன. இடையிடையே ஏடுகள் இல்லை (உதிரி ஏடுகள்)

—o—

வரிசை எண் : 2381 சுவடி எண் : 1286-a

## அகத்தியர் சுரநூல்

ஏடுகள் : 20½ கி. எண்ணிக்கை : 1000 அளவு : 25½ × 3½ செ.மீ.
பக்கத்திற்கு : 10—12 வரிகள் ஆசிரியர் : அகத்தியர் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்

**தொடக்கம் :**

அல்லல்போம்— ...... கைதொழுதக்கால்

விருத்தம்

அணுவிலொரு ......... ஆதி
அகண்டபரி பூரணமாய் நிறைந்த நாதி
மனமருள் கமலம் ............ .........
மனுவுக்குள் நரவடிவா யுதித்த நீதி

**முடிவு :**

தூய நன்றாய்க் கியாழமிட்டு
துலங்க காச்சிக் குடிப்பீராகில்
மாய மாக வருந்தோஷம்
வளமாய்த் தீர வகைதானே. — 169

சுரம் முற்றும்

**காலம் :**

இல்லை

**குறிப்பு :**

இதில், ஆண் பெண் நாடி, வாதநாடி, வாதத்தின் குணம், பித்தத்தின் குணம், சிலேற்பனக் குணம், மரணக் குறி, நீர்க்குறி, விழிக்குறி, திரேகக்குறி, வாததாதுக்குறி, கெற்பதாது, வாத நடை முதலியன உள்ளன.

இதன் முன்னர் அட்டவனை எழுதிய ஏடுகள் 2 உள்ளன. பக்கத் தலைப்புகள் கூறப்பட்டுள்ளன.

வரிசைஎண் : 2382 சுவடி எண் : 1286-b

## சன்னி வரலாறு—அகவல்

ஏடுகள் : 2½ கி. எண்ணிக்கை 150 அளவு : 25½ × 3½ செ.மீ
பக்கத்திற்கு ; 10—12 வரிகள் ஆசிரியர் : அகத்தியர் ? பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை என்று இல்லை எழுத்து : தமிழ்.

**தொடக்கம் :**

**இது சன்னி பதிமூனுக்கும் - சாத்தியம்**
**அசாத்திய மறிய - அகவல்**

மானிடர்க்குச் சன்னி வருவதுமங் கேதுவினி
லீனமற முன்னோ ரியம்பினார் ............
கண்மருவு பூங்குழலாய் மந்தம் பொசிப்பினால்
கொண்டலினால் ஓங்கு மழையால் பனியால்

முடிவு :

நன்றியுடன் பத்தானாள் போன...... மில்லை
யாயுமறை வித்தகனார் சொன்னார் விரைந்து.

**காலம் :**

இல்லை

குறிப்பு :

இதில், சன்னிவரக் காரணங்கள், அது போக்க வழி முதலியன கூறப்பட்டுள்ளன.



வரிசை எண் : 2383 சுவடி எண் : 1286-c

## சன்னிக்கு — வன்னச் சிந்து

ஏடுகள் : 4 கி. எண்ணிக்கை : 100 அளவு : 25½ × ½ செ.மீ.
பக்கத்திற்கு : 10-12 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்

தொடக்கம் :

ந........ வு நீ......த்து ..... கியே
உடலாகி ........... சனஞ்செலா நெறியும
உத்தறிவி லாத குணம்

முடிவு :

நெந்த அசுமேக கண்டக சன்னி அலர்சன்னி
நிகழ்சத்தி சன்னி யுடனே
நிந்தமாய் பதின்மூன்று சன்னியும் பேர்சொன்னோம்
நினைவாய் அறிந்து கொள்ளேன்.

முற்றும்

காலம் :

இல்லை

குறிப்பு :

இதில், தாந்திரீக சன்னியின் குணம், கியாழம், சீதாங்கசன்னி, இரதநாடி (?) சன்னி, அந்தக சன்னி, பிரலாபசன்னி, கடைவாயுச்சன்னி, கண்குழிச்சன்னி, முதலியன பேசப்படுகின்றன.

இதனைத் தொடர்ந்து, மாந்தத்துக்கு மருந்து செய்யுள் ஒன்று எழுதப்பட்டுளது.

★ ★ ★

வரிசை எண் : 2384 சுவடி எண் : 1286-d

## அறுபத்துநாலு சுரத்துக்கும் கியாழம்

ஏடுகள் : 10 கி. எண்ணிக்கை : 300 அளவு : $25\frac{1}{2} \times 3\frac{1}{2}$ செ.மீ.
பக்கத்திற்கு : 10—12 வரிகள் ஆசிரியர் : அகத்தியர் ? பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்,

தொடக்கம் :

சித்தமல்ல பெரம்........... ............ ........ —
......தரித் தோலோடு தக்க நிலக்குமிழ்
நிலவேம் போடு தருவாகைத் திப்பிலி

முடிவு :

சுக்குடன் கடுக்காயுடன் நெல்லி
ஒக்கட ா வாலுளுவையுங் கூட்டியே
நக்கடா தேனில் மண்டல முண்டிட்
டக்கடா ......... ......... டுமே. — 84

காலம் :

இல்லை

குறிப்பு :

இதில், வாதசுரத்துக்குக் கியாழம், செலப்பன சுரக்கியாழம், பித்தப் பிரமை அதிசாரசுரத்துக்கு, பித்தசுரத்துக்கு, வாழைப்பழநீர், நீருக்குக் கியாழம், திசமூல பல் வலிக்கு. எரிகுன்மத்துக்கு ஆகிய தலைப்புகள் உள்ளன.



வரிசை எண் : 2385 சுவடி எண் : 1286 e

## ஆரிய வாகடம் அந்தாதி வெண்பா

ஏடுகள் : 13(38-50) கி. எண்ணிக்கை : 300 அளவு : $25\frac{1}{2} \times 3\frac{1}{2}$ செ.மீ, பக்கத்திற்கு : 10—12 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : மருத்துவம் நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்

தொடக்கம் :

ஆரியமாம் வாகடத்தின் பொருளையா ராய்ந்து
சீரிய ............ ......... ....... செப்புகின்றேன்
கூரியதோர் உள்ள நிதானம் சிகிச்சை ......

முடிவு :

அந்திர வானத்தில் மீன்குறை யென்பா ரறிவுடையோர்
முந்தி யிவர்செய்த தீவினையென்று மொழிபவரே !

சித்திர மூல நோய்

வேலியொடு ............... ............... நாளிலே.

காலம் :

இல்லை

குறிப்பு :

இதில், பலசுரங்களுக்கும், கியாழம், மறுவகைச் சுரத்துக்கு, சீதவாத சுரத்துக்கு, ஆறாத சுரத்துக்கு, பழஞ்சுரத்துக்கு முதலியன உள்ளன. செய்யுட்கள் தொகுப்பு போலும். 1485 வரை எண்கள் உள்ளன.



வரிசை எண் : 2386

சுவடி எண் 1286-f

## கழுத்துக்கு மேல்பட்ட வியாதி (சிரோரோகம்)

ஏடுகள் : $1\frac{1}{2}$ கி. எண்ணிக்கை 30 அளவு : $25\frac{1}{2} \times 3\frac{1}{2}$ செ.மீ.
பக்கத்திற்கு : 8—10 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

கழுத்துக்கு மேல்வருங் கடிய வியாதியை
ஒழித்துக் கொண்டே யானுரைக்க லுற்றேன்.

அகவல்

............ ......... ............ ... .....
மெச்சிய பேர்க்கு முளைத்தெழு புத்து
சூரிய வாதஞ் சுழல்ப்புழு வெட்டு

முடிவு :

செப்பரிய வாகடத்தில் சேர்ந்த பொருள்தனையும்
(விரு)ப்புடன் யானும் உரைக்கலுற் றேனே !

முற்றும்

காலம் :

இல்லை

குறிப்பு

மூக்கு, காது, முதலானவற்றில், ரோகங்கள் ஏற்படின் அதற்கான மருத்துவம். கூறப்பட்டுளது.

★ ★ ★

வரிசை எண் : 2387 சுவடி எண் : 1286-g

## நாலாயிரத்து நானூற்று நாற்பத்து நாலு வியாதித்துகை

ஏடுகள் : 2 (52-54) கி. எண்ணிக்கை 70 அளவு : $25\frac{1}{2} \times 3\frac{1}{2}$ செ மீ
பக்கத்திற்கு : 9—10 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்

தொடக்கம் ;

தன்ளிய பின்மறு நாளில்
கூட்டுறதைத் கூட்டு சாதகமாம்
சொல்லுஞ் துகையைச் சாத்து ரேன்கே
ளென்னிய ............ ............ ...... — 713

முடிவு :

கட்டான புழுவெட்டு கரப்பன்யீ ராறு
கண்டதுகை ரோகங்கள் துகைபார்க்கும் போது
மட்டான நாற்பத்து நாலு நூறு
மறுபடியு மாறெட்டு வந்த வாறே ! — 772

காலம் :

இல்லை

குறிப்பு :

இதில், 713-ஆம் பாடல் முதல் 722–ஆம் பாடல்வரை உள்ளன. தலைப்பு 4444 என்றுளது. இறுதிப்பாடலில் 4448 (ரோகங்கள்) வந்தவாறே என்று முடிகிறது.



வரிசை எண் : 2388 சுவடி எண் : 1286-h

## வாதம் எண்பத்துநாலுக்கும் உற்பத்தி — அகவல்

ஏடுகள் : 1 (55) கி. எண்ணிக்கை : 25 அளவு : 25½ × 3½ செ மீ.
பக்கத்திற்கு : 10—11 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

வாதம் எண்பதுக்கும் (?)
அகவல்

உள்ளடிக் கனத்தல் பிறவடி தடித்தல்
விரல்தலை நிமிர்தல் குதிநிக மிருத்தல்
பாடு திருக்கல் பாதம் பொறுக்கல்
போலக் கொன்றை ஏறுதல் திளர்க்குடல்

முடிவு :

செந்நீர் தெளிந்து சிரந்தனை ஊறுதல்
யிருத்தல்தாங்கி கிடத்தல் குவையணைந் துரைத்தல்
எண்பத்து நானாலும் ஒன்றிய தாக்கல்
உற்பத்தி ............ ............ .........

......... — பாடல்

காலம் :

இல்லை

குறிப்பு:

வாதத்தின் உற்பத்தியும் குணமும் இதில் கூறப்பட்டுள்ளன



வரிசை எண் : 2389 சுவடி எண் : 1286

## பித்தம் நாற்பதும் உற்பத்தி அகவல்

ஏடுகள் : ½ (முறிந்த ஏடு) கி. எண்ணிக்கை : 20 அளவு : 25½ × 3½ செ.மீ.
பக்கத்திற்கு : 8 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் ;

தூங்கல் பேத்தல் தொன்னென .........த்தல்
தருக்குதல் ஒடுதல் அண்ணாத் துடங்கல்

முடிவு ;

தலைமயி ருதிர்தல் தாதுக்கள் வத்தல்
இவைதன் பித்தம் நாற்பது துகையும்
ஒங்கிய அளவில் உற்பத்தி என்றார்.

காலம்

இல்லை

குறிப்பு :

இதில், பித்தத்தின் உற்பத்தியும் குணமும் பேசப்படுகிறது.



வரிசை எண் : 2390 சுவடி எண் : 1286-j

## சிலேட்டுமம் இருபத்துநாலும் உற்பத்தி அகவல்

ஏடுகள் : ½ (55) முறிந்தநிலை கி. எண்ணிக்கை : 20 அளவு : 25½ × 3½ செ மீ.
பக்கத்திற்கு : 8 வரிகள் ஆசிரியர் : அறியுமாறு இல்லை பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றுமானது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

உதிரம் வெளுத்தல் உள்ளிளைப் பெழுதல்
அதரம் வெளுத்து ......... தடித்தல்

முடிவு :

தாகத் துடனே பிளவை சிலந்திகள்
ஆகுமே இருபத்து நாலும் அப்புவின்கூறாம்
சிலேஷ்ட்டும அகவல் முற்றும்

காலம் :

இல்லை

குறிப்பு :

இதில், சிலேட்டும உற்பத்தியும், அதன் குணங்களும் கூறப்பட்டுள்ளன.



வரிசை எண் : 2391 சுவடி எண் : 1286-k

## அகத்தியர் பலதிரட்டு — 100

ஏடுகள் : 24 (56-79) கி. எண்ணிக்கை : 1000 அளவு : 25½ × 3½ செ மீ
பக்கத்திற்கு : 8 – 10 வரிகள் ஆசிரியர் அகத்தியர் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்

**தொடக்கம் :**

**வாதம் எண்பதுக்கும் சூரணம், தயிலம்**

வாதம் எண்பத்து நான்கு ...... ...... .........
............... ............ ............ .........
சூத-ம் அசந்தவாதம் தோண்டிய .........

**முடிவு :**

குறைந்திடக் குரங்கும் நாயும்
கூட்டமும் பயமும் காட்டும்
மறதியு மயக்கஞ் செய்யும்
வால்மீக ருரைத்தார் முற்றே ! —17

**காலம் :**

இல்லை

**குறிப்பு :**

இதில், அகத்தியர் பலதிரட்டில் 50 செய்யுட்களும், மூலத்துக்குச் சூரணம், கிராணிக் குணம், காமாலை, சோகை, பாண்டுவுக்கு, அக்கினி முகச் சூரணம், முலைப்பாலின் குணம், செய்வினைக் குணம், கருவினால் செய்தது முதலியன உள்ளன

★ ★ ★

வரிசை எண் : 2392 சுவடி எண் : 1286-I

## வால்மீகர் தீப சூத்திரம்

ஏடுகள் : 1 (79-80) கி. எண்ணிக்கை : 40 அளவு : $25\frac{1}{2} \times 3\frac{1}{2}$ செ மீ.
பக்கத்திற்கு : 8—10 வரிகள் ஆசிரியர் : வால்மீகர் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்

**தொடக்கம் :**

சுற்றிய தீபந் தன்னை
யேந்தியே முகத்திற் காணச்
சூத்திரந் தன்னைக் கேளீர்
தூயநா சிகையில் வைத்து

நாற்றிசை யறிய வேண்டி
நன்மையாய்ப் பிழைக்கும் வாறும்
மாற்றிய முனிவான் மீகர்
வகுத்தனர் செகத்திற் றானே ! — 1

முடிவு :

முந்தின தீபந் தன்னை
முகத்திடை நேரே தூக்கி
இந்திரன் கொலுவைப் போல
வேந்தியே பார்க்கும் போது
சந்திர வளையம் போலச்
சத்துவ குணத்தே நின்றால்
மந்திர மருந்து சொல்லும்
வரிசையாய்ப் பிழைப்பர் தாமே ! —10

தீப சூத்திரம்

முற்றும்

காலம் :

இல்லை

குறிப்பு :

இதில் தீபத்தை வைத்துக்கொண்டு முகம் முதலானவற்றைக் கண்டு நோய்களை யுற்றறிதல கூறப்பட்டுள்ளது. இது ஒரு அரிய நூலாகும்.

★ ★ ★

வரிசை எண் : 2393 சுவடி எண் : 1286-m

## பல விரல் சூத்திரம்

ஏடுகள் : ½ (80) கி. எண்ணிக்கை : 20 அளவு : 25½ × 3½ செ.மீ.
பக்கத்திற்கு : 10 வரிகள் ஆசிரியர் : வால்மீகர் பொருள் : சோதிடம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

**தொடக்கம் :**

பரிந்திடும் பாக மாறிப்
    பற்றிய விரலும் பத்து
திரிந்திடு மிகுதி தோன்றுஞ்
    செய்தனில் விரலோர் பத்து
புரிந்திடும் தலையிற் சூழப்
    போக்கிய கயிற்றை நோக்கி
விரிந்திட வகுத்துச் சொன்னார்
    விரும்பிவான் மீகர் தாமே ! — 1

**முடிவு :**

பத்திய பாகந் தள்ளிப்
    படுமுழ மொன்றுந் தள்ளிச்
சுத்தியாம் விரலும் பத்து
    சூட்சமாய்த் தாழ்ந்து கண்டால்
வித்தகர் தம்மே லாணை
    மேதினி யறியச் சொன்னோஞ்
சித்தியா மருந்து சொல்லுஞ்
    சித்திரம் பிழைப்பான் றானே ! — 5

முற்றிற்று

**காலம் :**

இல்லை

**குறிப்பு :**

இதில், விரல்களை அளந்து கண்டு அதன் அளவு கொண்டு நன்மை தீமை அறிவது கூறப்பட்டுளது.



வரிசை எண் : 2394 சுவடி எண் : 1286-ந

# யூகிமுனி நாடி சூத்திரம்

ஏடுகள் : 4 (81-84) கி. எண்ணிக்கை : 100 அளவு : 25½ × 3½ செ. மீ.
பக்கத்திற்கு : 10—12 வரிகள் ஆசிரியர் : யூகிமுனி பொருள் : நாடி சோதிடம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்

**தொடக்கம் :**

நயந்துநீ நாடிதான் பார்க்கும் வாறு
நலமான புருவமுச்சி கண்டம் நெஞ்சு
கயந்துகையில் காலடியில் முழங்கை தன்னில்
கணுக்காலில் முழங்காலில் கைக்குறி லருந்

**முடிவு :**

கரணிகத்தில் வாதமொன்றால் ............ .........
வாதபித்த ........ ................ ......
பாடுகெற்ப பாடானால் சொ
(இதற்கு மேல் இல்லை)

**காலம் :**

இல்லை

**குறிப்பு :**

இதில், வாதநாடி, பித்தநாடி நடையறிய, சிலேட்டுமநடை, வாதபித்தநடை, நாடி பார்க்கும் விபரம், விகாரத்தின் நாடி, மரணக்குறி முதலியனவும் குருநாடி விதியும் உள்ளன.

யூகிமுனி நாடியில் 28 செய்யுட்களும், குருநாடி 66—ஆம் செய்யுள் முதல் 73-ஆம் செய்யுளில் பாதிவரையிலும் உள்ளன.

வரிசை எண் :2395 சுவடி எண் : 1286-ο

## அகத்தியர் இரண சூத்திரம் — 16

ஏடுகள் : 3 (85-87) கி. எண்ணிக்கை : 75 அளவு : 25½ × 3½ செ.மீ.
பக்கத்திற்கு : 8—10 வரிகள் ஆசிரியர் : அகத்தியர் பொருள் : மருத்துவம்
நிலைமை ; மிக மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்

தொடக்கம்:

ஆதியென்ற கணபதியின் குருவைப் பேற்றி
அமர்ந்தரெண சூத்திரத்தின் விபரந் தன்னை
நீதியென்ற பலரிணங்கள் பிறந்த வாறும்
நேரான சாத்தியம் சாத்தியக் கூறும்

முடிவு :

பாரப்பா உள்மருந்து வகையைக் கேளு
பாங்கான பரிபூரணனா னூற்றில் பாரு
நேரப்பா ரசமடியும் பதங்கஞ் சொன்னே
னிக்கான யின்னம்வெகு பாகஞ் சொன்னேன்
காரப்பா பெரியோர்க்குத் தொண்டு செய்தால்
காட்டுவார் பூரணத்தைக் கண்டு பாரு
சீரப்பா யின்னூலின் வழியைச் சொன்னேன்
திரமான பதினாறு முகிந்த முற்றே

காலம் ;

நாகப்பட்டினத்தைச் சார்ந்த் புத்தூர் வைத்தியர்
அருணாசலபிள்ளை றெண சாத்திரச் சுருக்கம்

பதினாறு முகிந்தது

முற்றும்

குருநாதன் துணை

குறிப்பு :

இதில், இரணங்களின் வகை, அது ஆற்றும் வழி முதலியன கூறப்பட்டுள்ளன.

இதன் பின்னர் 88. 89-ஆம் ஏடுகளில் தோஷம் எடுக்கும், அசாத்தியம், சாத்தியம் வரும்வாறும் முதலியன கூறப்பட்டுள்ளன.

★ ★ ★ ★

வரிசை எண் : 2396 சுவடி எண் : 1286-p

## அகத்தியர் மூலிகை வண்ணம்

ஏடுகள் : 3 (60-62) கி. எண்ணிக்கை : 75 அளவு : 25½ × 3½ செ மீ.
பக்கத்திற்கு : 10—12 வரிகள் ஆசிரியர் : அகத்தியர் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

**தொடக்கம் :**

தன தான தானனென - தனதான தானனென
தன தான தானனென - தனதான தானனென
சம்புடனே வேர்விரையை உண்பவர்க்கு
கிராணிமூலத் தென்புடனே தீரு மென்று
கும்பமுனி யானுரைக் கின்றேன்

**முடிவு :**

பொங்கு அண்டவாத சன்னி
 விங்கிதமாம் நாடு
புரைமாக் கொழுந்து நால்வசியம் மூக்கு
 தனிலே விடவே
தாக்குடனே கூட்டுவலி போக்கிவிடு மேதலையில்
 ஆரறிவார் மூலிகைப் பிரயோகமே

(இதன் பின்னர் மருந்து செய்முறைப் பாடல் ஒன்றுளது)

**காலம் :**

இல்லை

**குறிப்பு :**

இதில், மூலிகை பற்றிய செய்திகள் கூறப்பட்டுள்ளன. சந்தப் பாடலாகிய வண்ணத்தில் எழுதப்பட்டுள்ளது. இதன் பின்னர் மருந்து செய்முறை, தயிலம், எண்ணெய், சூரணம், செந்தூரம் முதலியனவும் எழுதப்பட்டுள்ளன.

★ ★ ★

வரிசை எண் : 2397 சுவடி எண் : 1286 q

# அஷ்டகருமம் - பத்து

ஏடுகள் : 2 (93-94) கி. எண்ணிக்கை : 100 அளவு : 25½×3½ செ.மீ.
பக்கத்திற்கு ; 10—12 வரிகள் ஆசிரியர் : அகத்தியர் (?) பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஆதியாம் பராபரத்தைப் போற்றி செய்து
அம்மைய ............... உலகத்தே ............
+ + + + + +
வாதியாம் பெரியோர்க்கும் புத்தி யுள்ள
மன்னவர்க்கு மிதுவாகும் வகையைக் கேளே ! — 1

முடிவு ;

வாழவே யின்னமொன்று சொல்லக் கேளு
மங்கையரே சயித்தான்பேய் தொட்டிட் டாடும்
கோளாக ஒருவருக்குரை செய்திட் டாலும்
குறித்தவனோ திஷ்ட்டிப்பேய் தொட்டிட் டாலும்
பாழாக அனுபோக பிசாசு கூடி
பகலிரவு மாய்க்கூடி .......... ..........
வாழாமல் திரிந்தாலும் இந்தத் தூளே
மண்டைக்கி நசியம்போ லேத்திப் பாரே ! — 10

முற்றும்

காலம் ;

இல்லை

குறிப்பு :

இதில், எட்டு கர்ம வித்தைகளைப் பற்றிக் கூறப்பட்டுள்ளது

இதன்பின்னர், மருத்துவச் செய்யுட்கள் 269 முதல் 272 வரை எழுதப்பட்டுள்ளன.

★★ ★

எண் : 2398 சுவடி எண் : 1286-r

## அகத்தியர் களிப்பு — 10

ஏடுகள் : 2 (95-96) கி. எண்ணிக்கை : 100 அளவு : $25\frac{1}{2} \times 3\frac{1}{2}$ செ மீ.
பக்கத்திற்கு ; 10—12 வரிகள் ஆசிரியர் ; அகத்தியர் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

**தொடக்கம் :**

ஆதியந்த நூல்பார்த்து அரனுஞ் சொல்ல
அம்மையவள் தானுரைத்தாள் ஆன தாலே
சாதியென்ற குலத்தோர்க்குக் களிப்பே செய்ய
சார்வாக யிந்தமுறை யாருஞ் சொல்லார்

**முடிவு :**

காட்டினேன் பத்திலே களிப்போ சொன்னேன்
கண்டெடுத்துத் தேசமுதற் களிப்பே செய்ய
நாட்டியே யதிலேதான் சாந்தி சொன்னேன்
நலமான பன்னிரண்டி லூணிப் பார்ப்பாய்
வாட்டியே முறபாவை பத்தி லாச்சு
வப்படியே யஷ்டகர்ம மிருநூ றப்பா
கூட்டியே வாடைபதி னாறில் சொன்னேன்
கொடியதோர் முறப்பாவைக் களிப்பு முற்றே ! — 11

**காலம் :**

இல்லை

**குறிப்பு :**

இதில், மருந்து முறைகள் கூறப்பட்டுள்ளன. இதன் பின்னர் மருந்துக்கு சரக்குகள் கூறப்பட்டுள்ளன.

★ ★ ★

வரிசை எண் : 2399 சுவடி எண் : 1286-s

## அகத்தியர் ( வைத்தியம்)

ஏடுகள் : 18 (97-114) கி. எண்ணிக்கை : 1000 அளவு : $25\frac{1}{2} \times 3\frac{1}{2}$ செ.மீ.
பக்கத்திற்கு : 10—12 வரிகள் ஆசிரியர் : அகத்தியர் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஆதியுடன் பார்ப்பதியைப் போற்றி செய்து
…………குருமுனிதான் பாருள் ளோர்க்கு
சத்தியமாய் முறைபாடு யேவல் பில்லி
சயித்தானொடு தெய்வகுத்தம் சரீர துன்பம்

முடிவு :

செத்தபிண மெழுந்திருந்து திரும்பிப்பேசும் பார்த்து
செயமான லோகமொடு பூபதியுந் திறந்தான்
மத்துமினித் திருகின்ற வியாதியென்ன கோடி
மகத்தான தயிலமடா மெழலைகூட்டிக் கொள்ளே !

பத்தியம்

காலம்

இல்லை

குறிப்பு :

இதன் தலைப்பு சரியாகத் தெரியவில்லை. அஞ்சனம், கெருடதோஷம், நாகதோஷம்' கர்மந்தீர்க்க யாகசாலை, சிவயோக மந்திரச் சக்கரம் முதலியன உள்ளன.



வரிசை எண் : 2400 சுவடி எண் : 1286-t

## நந்தீசர் — 500 (வைத்தியத் திரட்டு)

ஏடுகள் : 24(115-138) கி. எண்ணிக்கை : 1300 அளவு : $25\frac{1}{2} \times 3\frac{1}{2}$ செ.மீ
பக்கத்திற்கு : 10—12 வரிகள் ஆசிரியர் : நந்தீசர் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்

தொடக்கம் :

ஆதியந்த மொன்றாகிப் பூரணமாய் நின்ற
அம்மனொடு சிவன்பதத்தை அடியேன் போற்றி
நீதியந்த மாகிநின்ற மூலந் தன்னில்
நின்றுமனம் புத்தியுடன் தொழுது போற்றி
சாதியந்த மாகிநின்ற பெரியோர் பாதம்
சற்குருவின் பாதத்தைச் சார்ந்து போற்றி
சோதியந்த மாகிநின்ற குண்ட லிக்குள்
குஞ்சரமாய் நின்றகண பதிதாள் காப்பாம் — 1

முடிவு :

வாயுவுகள் குஷ்ட வகைகள் வெட்டை
ரெத்தப்பிரமியம் இதுாள் தீரும். பத்தியம் கடுமை
ஆள் கண்டு இச்சா பத்தியம் வைக்கவும்
இந்த எண்ணை கைகண்ட எண்ணெய்
முன்சொ ன பூரம், தாளகம், லிங்கம்,
தள்ளியும் எரிக்கலாம்.
பூண்டு, வசம்பு, சேர்க்கலாம். விராகனெடை — 1

காலம் :

இல்லை

குறிப்பு :

இதில், நந்தீசர் 500-ல் 5 செய்யுட்களே உள்ளன.

மகா ஏலாதிச் சூரணம், விஷத்துக்குச் சிந்தாமணிக்குழம்பு, பொஸ்தகஞ் சேர்க்க, கணக்கு சேர்க்க, ஆகாத ஓலை, ஓலை எழுத விதி, பொஸ்தகம் எழுத மை போட, அட்டை விட நாள், கண்டமாலைக்கு, நாய் கடிக்கு மருந்து முதலியன உள்ளன.

*** 

வரிசை எண் : 2401 சுவடி எண் : 1286-u

## திருமூலர் நாடி சூத்திரம்

ஏடுகள் : 10(139-148) கி. எண்ணிக்கை : 500 அளவு : $25\frac{1}{2} \times 3\frac{1}{2}$ செ.மீ.
பக்கத்திற்கு : 10—12 வரிகள் ஆசிரியர் : திருமூலர் பொருள் : நாடிசாத்திரம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

காப்பு

ஐந்து கரத்தனை ..................போற்றுகின்றேனே
ஆயக்கலைகள் ......................வாராதிடர்

காப்பு முற்றும்

நூல்

உன்னிய கெற்பக் குறியாம் வெளியிலே
பன்னிய நாதம் பகர்ந்த பிருதிவியாம்
வன்னியும் வாயுவும் மாயுருஞ் சுக்கிலம்
மன்னிச் சமனாய் வளர்க்கு முதகமே ! — 1

முடிவு :

வியாதியன் போக வெகுநாள் (சடைமுறப்)
பயாதித் திரைநரை பாங்காய்த் தவர்ந்திடக்
கயாதிக் கெவனங் கலந்தெங்குஞ் சுற்றிட
வியாதிய ஞானமஞ் சாகுஞ் சிற்றியே ! — 112

காலம் :

இல்லை

குறிப்பு ;

இது, எமது சுவடி எண் 745-g/D 1475 போன்றது. படவேறுபாடுகள், பிழைகள் அதிகம்.

இதன் பின்புறம் மருத்துவம் எழுதப்பட்டுள்ளது. 149-ஆம் ஏடு வெற்றெடாயுள்ளது. 150-ஆம் ஏட்டில் 'உந்தியின்...............அய்யனே சிதம்பரேஸ்பரனே' என்ற பாடல் உள்ளது.

★ ★ ★

வரிசை எண் : 2402 சுவடி எண் : 1286-v

## அட்டை விதி

ஏடுகள் : 1½(151-152) கி. எண்ணிக்கை : 75 அளவு : 25½×3¾ செ.மீ.
பக்கத்திற்கு : 10—12 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடல்லை பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்

**தொடக்கம் ;**

மண்ணினிற் பிறந்தட் டைக்கு
வகுக்கும் நாலுகுணம் கேளீர்
அண்ணிதான் வேதியர்க்கு அடைந்த
அட்டை அனல்நிற மாகும்
திண்ணிதான மன்னவர்க்குச் செய்யக்
கழனீர் மலர்நிற மாகும்
எண்ணிச் சொன்னோம் வைசியர்க்கு
இசைந்த வட்டை ......ரியாகும்.

**முடிவு :**

நேசமா மிரஷ யுதைய மாவது
முன்னீர் மலங்களும் விபரமுன்னே
நியமா மமுத முண்டிடிற் பெரிய
நினைவிலா ரமுத பாகுமே ! — 11

முற்றும்

**காலம் :**

இல்லை

**குறிப்பு :**

இது, எமது சுவடி எண் 25-d/D.40 போன்றது. இதில் காப்புச் செய்யுள் காணப் படவில்லை. இச் செய்யுட்கள் தன்வந்திரி வாகடம் 1000-ல் காணப்படுகின்றன.

அட்டை பேதங்களும், அவற்றுள் ஆண் பெண் வேறுபாடுகளும், இன்ன நேரத்தில், இன்ன இடத்தில் இன்ன அட்டையைக் கட்டவேண்டும் என்றும், அதனால் தீரும் விரணம் முதலான நோய்களும் கூறப்பட்டுள்ளன.



வரிசை எண் : 2403 சுவடி எண் : 1286-w

## சத்திர விதி

ஏடுகள் : $1\frac{1}{2}$ (152-153) கி, எண்ணிக்கை : 75 அளவு $2?\frac{1}{2} \times 3\frac{1}{2}$ செ.மீ.
பக்கத்திற்கு : 10 — 12 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்

தொடக்கம் :

கத்திர சத்திர மொடுகுறும்பி தனை வாங்கியும்
கருமூக்கு வாய்தனுடன் கடுமுள்ளு வாங்கியும்
கொடுமாழிக் கோலுங் கதித்திடு வடுத்த பிறையுங்

முடிவு :

நட்டமா யீத்திலே தெந்தந் தன்னிலே
குட்டமாய் வரும்பிணி விளங்கிடுங் கூறவே — 10

காலம் :

இல்லை

குறிப்பு :

இது எமது சுவடி எண் 24-e/D.41 போன்றது. இதில் 10 செய்யுட்களே இருக்கின்றன. காப்புச் செய்யுள் இல்லை.

இதில், அறுவை சிகிச்சை செய்வதற்கு வேண்டிய 26 வகைக் கருவிளும் அவற்றின் இலக்கணங்களும், அறுவை செய்யும் முறையும் உள்ளன. இது அச்சிடப்பட்டுள்ளது.

இதன் பின்னர் 50 செய்யுட்களுடன் கூடிய தின்பண்டம், மந்தங்கண்டால் என்ற தலைப்புடைய மருத்துவம் உள்ளது.



வரிசை எண் : 2404 சுவடி எண் : 1286-x

## வால்மீகர் சிவயோகம் — 16

ஏடுகள் : 3(154—156) கி. எண்ணிக்கை : 125 அளவு : $25\frac{1}{2} \times 3\frac{1}{2}$ செ.மீ
பக்கத்திற்கு : 10—12 வரிகள் ஆசிரியர் : வால்மீகர் பொருள் : யோகம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து: தமிழ்

**தொடக்கம் :**

திருமூர்த்தி தேவர்முதல் மனித ரோடுஞ்
சிவயோகம் பெற்றறிந்த மார்க்கந் தன்னைப்
பிரியமுடன் யெனைத்தொழுது கேட்ட பிள்ளாய்
பின்கலையு மிடகலையு மாறும் போது

**முடிவு :**

தேனவனாஞ் சித்தருக்குத் தெவிட்ட மூலம்
சிரசப்பா முடலுக்குப் பதியே யாகும்
கோனவனா யிருக்கவென்று குறுக்கிச் சொன்னேன்
குவலயத்தில் பதினாறுங் குருத்தான் முற்றே. — 16

**காலம்:**

இல்லை

**குறிப்பு :**

இதில், சிவயோகம் பற்றிய செய்திகள் சுருக்கமாகக் கூறப்பட்டுள்ளன.

★ ★ ★

வரிசை எண் : 2405 சுவடி எண் : 1286-y

## வைத்தியத்திரட்டு

ஏடுகள் : 18 கி. எண்ணிக்கை : 800 அளவு : $25\frac{1}{2} \times 3\frac{1}{2}$ செ.மீ
பக்கத்திற்கு : 10—12 வரிகள் ஆசிரியர் : பலர் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்ற்றது எழுத்து : தமிழ்

தொடக்கம் :

மதன விந்தாதி லேகியம்

சீராரும் ............... ............ பரஞ்சோதி பாதம்
ஆராயும் நெஞ்சே அறியக்கேள் - பார்தனிலே
மேகம் பதினாலும் மீறும் பிணியாலும்

முடிவு :

இயலான ஆறு மாத்தா யிரும்பே யேற்கலே
நாலுவொடு ............ ......... ............
சுவரன்ன கிரிவா சரங்கள்

காலம் :

இல்லை

குறிப்பு :

இதில், கிராணி இருபத்தஞ்சுக் குணம், அசாத்தியம் சாத்தியம், பித்தக்கிராணி, கெற்பக்கிராணி பித்த அதிசாரம், வாதவிசூளி, கெந்தகத் தயிலம், சிந்து சிந்தாதி நெய், சங்குத் திராவகம் முதலியன உள்ளன.

இதன் பின்னர், மேற்கண்ட நூல்களுக் கெல்லாம் தலைப்பு அட்டவணை எழுதப் பட்டுளது.



வரிசை எண் : 2406 சுவடி எண் : 12:6-z

## தேவமுனி ஆணிக் கோர்வை

ஏடுகள் : 5 கி. எண்ணிக்கை : 200 அளவு : 25½ × 3½ செ.மீ.
பக்கத்திற்கு : 8—10 வரிகள் ஆசிரியர் : தேவமுனி பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

சித்தான ............ ............ தல்லாணித்...
மாயக்காண ......... முனிபொற் பாதம்
காரணமா யெண்ணு னூல்......... காப்பு

முடிவு :

பாருநீ புலத்தியனே அய்யா கேளு
பரிவாக மேலிருந்து பிசங்கு மப்பா
ஊரிலே சனங்களுட சிரசில் பட்டால்
....... .... .........மெல்லா .....ரிஞ்சு
நீரா... .. ... .. ருனீ கக்களுடன் பேதி காணும்
கண்மூடித் திறக்குமுன்னே ......... .........
......... .. ............ ......... .........
தேகமெல்லாம் வேர்வையது வரட்சி காணும்

காலம் :

இல்லை

குறிப்பு :

இதன் தொடக்கத்தில் 'கௌபாலருக்கு(?)ச் சொன்னது' என்ற தலைப்பும் இருக்கிறது.

இதில், மாத்தாணி அறியும் வகை, ஊழி பேதிக்கு முதலியன உள்ளன. கடைசியில் 9500 என்ற எண்ணுக்குப் பிறகு 2 என்ற எண் உள்ளது. எழுத்துக்கள் செல்லரித்துள்ளதால் விளங்கவில்லை. ஒரு ஏடு வெற்றேடு.

※ ※ ※

வரிசை எண் : 407 சுவடி எண் : 1287-அ

## அகத்தியர் பூரணம் 400 ல் சில கவிகள் (?)

ஏடுகள் : 14(92 105) கி. எண்ணிக்கை : 250 அளவு : 18×3 செ.மீ.
பக்கத்திற்கு : 7—8 வரிகள் ஆசிரியர் : அகத்தியர் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்

தொடக்கம் :

நெருப்பாறு மயிர்ப்பாலங் கடந்தப் பாலே
நிலையாத கெங்கையடா நீஞ்சப் போகா
இருப்பார்க ளரதுமையு மாடி யாடி
இன்பநிலம் பத்தாகி யோடி யேர்டி

குறிப்பாகக் கண்டவர்க்கே தெரியும் நாட்டம்
  கோடிரவி சுடர்காந்தி கொண்ட ஆட்டம்
வெறுப்பாகப் பூரணத்தை அறிவால் பார்க்க
  வெட்டவெளி யாகுமடா குருவைத் தேடே — 13

முடிவு :

விதியான விதியறிந்தோன் வாதங் காண்பான்
  விதியறியான் பதியறியான் வீணன் வீணன்
சதியான முன்சொன்ன முப்பூ வாலே
  சகலதொழில் கைமுறையாய்ச் செய்ய லாகும்
பதியான பதியறிந்து அமுர்த முண்டு
  பாலகனே லாடமதில் பத்திக் கொண்டு
கெதியான மோட்சமென நின்றா யானால்
  கேசரத்தில் கேசரியாள் கிருபை யாமே ! — 18

காலம் :

பிலவங்க வருஷம் புரட்டாசி மாதம் 19-ந் தேதி ஆதித்த வாரம் பூச நட்சத்திரத்தில் யெழுதி நிறைவேறத் தக்கது.

குறிப்பு :

இதில், வாலை ரச வைப்பு, காம கேசரிக் குளிகை, பாசாண முடிவு, ரவிவளையம் முதாலன அரிய செய்யுட்கள் எழுதப்பட்டுள்ளன. தத்துவரூபமாகவும், பரிபாஷை யாகவும் (நெருப்பாறு, மயிர்ப்பாலம்) கூறப்பட்டுள்ளன.

அடுத்த ஏட்டில் இதற்கான பட்டியலும், அதன் அடுத்த ஏட்டில் குட்டத்துக்கு சாந்தி முதலியன உள்ளன. அட்டவணைப்படி 1—12 பாடல்கள் இல்லை.



வரிசை எண் : 2403 சுவடி எண் : 1287-b

## எழுவகைத் தோற்றம்

ஏடுகள் : 3(108-110) கி. எண்ணிக்கை : 50 அளவு : 18×3 செ.மீ
பக்கத்திற்கு : 7—8 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : தத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்

தொடக்கம் :

ஓம் கணபதியே நம :

திருச்சிற்றம்பலம்

நலந்திகழுந் தேவர்களும் மனித ராவர்
நாடரிய மானிடமு மனித ராவர்
விலங்கினொடு பறவைகளு மனித ராவர்
மிக்கமுள்ள தாவரமும் மனித ராவர்
நிலநதனிலே ஊர்வனவும் மனித ராவர்
நீர்வாழும் சாதிகளும் மனித ராவர்
குலங்கள்தனை யின்னதென்று கூறும் போது
குணங்களினால் அவர்குலத்தைக் கூற லாமே ! — 1

முடிவு :

நீர்வாழும் சாதிகள் வந்து மனிதராய் பிறந்தால் செய்யும் குணம்

தந்திரத்தால் வழக்குரைப்பான் பொய்சாட்சி சொல்வான்
தண்மையாய் யிருந்தெ (ட)த்தே சதிகள் செய்வான்
சிந்தையுள்ளே யெவர்தமக்குங் கபடஞ் செய்வான்
செய்தநன்றி குன்றிடுவான் தீதே செய்வான்
வந்திருந்த நல்லோரை வயிறெறியப் பேசி
வண்மையுள்ள பெரியோரை வலத எிப்பான்
நிந்தையுடன் மந்திரங்கள் கற்றுப் பேசும்
நீர்வாழுஞ் சாதிகளு நிலமை பாரே ! — 8

சிவகிருபையினா லெழுதி நிறைவேறலாயிற்று.

காலம் :

பிங்கல வருஷம் புரட்டாசி மாதம் 20-ஆம் தேதி திங்கட்கிழமை, ஆயிலிய நட்சத்திரத்தில் அண்ணாசாமி நாயக்கரிடமாயி வாங்கி யெழுதி நிறைவேறிற்று.

சிவமயம்

ஷெயாரிடம் ஒத்துக் கொள்ளப்பட்டது

திருச்சிற்றம்பலம்

சிவமயம்

குறிப்பு :

இதில், தேவர், மானிடர், பறவை, தாவரம் முதலானவர்கள் மனிதராய்ப் பிறந்தால் அவரவர்தம் குணாதிசயங்கள் எவ்வாறிருக்கும் என்று கணிக்கப்பட்டுள்ளது.



வரிசை எண் : 2409 சுவடி எண் : 1288

## அகத்தியர் நிகண்டு — 1200

ஏடுகள் ; 111 கி. எண்ணிக்கை : 3000 அளவு : 34 × 3 செ.மீ
பக்கத்திற்கு : 7—8 வரிகள் ஆசிரியர் : அகத்தியர் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்

தொடக்கம் :

ஆதியந்த மில்லாத பூரணத்தைப் நோக்கி
அடுத்துநின்ற (உன்)மனைத்தாய் பாதம் போற்றி
ஆதியந்த மாகிநி ற (உமை)யாள் சொல்ல
பாங்கான சின்மயத்தின் கருணை யாலே

முடிவு ;

நாட்டினேன் செலசரியும் வராக வித்தை
நலமான ஷப்போடு வுதகஞ் சொன்னேன்
பூட்டினேன் வாதத்தின் ........ சொன்னேன்
புகழான விருபத்து அஞ்சு அங்குலம்
ஆட்டினேன் பலநூ லில்லை யில்லை
ஆச்சரிய நிகண்டினுட துகையைக் கேளு
நீட்டினேன் ஆயிரத்து யிருநூ றுந்தான்
நோக்கி நிகண்டினுட கடைதான் முற்றே ! — 1232

ஆக விருத்தம் 1229 (?)

எழுதி நிறையலாயிற்று

முற்றிற்று

காலம் :

விக்குருதி வருஷம் அற்பிசை மாதம் 25-ஆம் தேதி ஞாயிற்றுக்கிழமை, திதி துவாதசி, அஸ்த்த நட்சேத்திரம், அமுர்தயோகம் இந்த சுபதினத்தில் அகஸ்தியர் மகாமுனி

நிகண்டு எழுதி நிறையலாயிற்று. கோ.மா.ச. யாகோ நாச்டிமுந்து (?) கையால் யெழுதி முடிந்தது. கந்தப்ப ராச்சிமுத்து (?)

1890-ஆம் வருஷம் நவம்பர் மாதம் 9-தேதி எழுதி முடிந்தது.

குறிப்பு:

இதன் பின் பக்கத்திலும் அடுத்த ஏட்டிலும் மருந்துகளும், வெள்ளை அப்பிரக செந்தூரமும், அஷ்ட காசத்துக்கு மருந்தும எழுதப்பட்டுள்ளன. இடையில் 63-ஆம் ஏடு முதல் 78-ஆம் ஏடு வரை இல்லை.

இதில் சவுக்காரவைப்பு, வெங்காரம், பச்சைக்கற்பூரம், சிந்துலவணம், நிமிளை, அப்பிரகம், காந்தம், முத்து, பவளம், கோமேதகம், புஷ்பராகம், வயிரம், பச்சை நீலம், மாணிக்கம் வைடூரியம், சாதிலிங்கம், கேந்திரபாசாணம், அஞ்சுநீர் மாதவிடை, சுக்கிலம், பெண்காமப் பெயர், பஞ்ச பூதம் முதலியன கூறப்பட்டுள்ளன.



வரிசை எண் : 2410 சுவடி எண் : 1089

## அகத்தியர் கலைக்கியானம் 1200-க்குச் சூத்திரம் — 120

ஏடுகள் : 20 கி. எண்ணிக்கை 600 அளவு : $28\frac{1}{2}\times3$ செ மீ
பக்கத்திற்கு : 8—10 வரிகள் ஆசிரியர் : அகத்தியர் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்

**தொடக்கம்**

ஆதிசத்தி சிவமான சோதி காப்பு
அகண்டமெனும் பூரணத்தின் அறிவே காப்பு
சோதியெனும் வாலைமனோன் மணியே காப்பு
சொல்லடங்கா விண்ணொளியின் சுடரே காப்பு

**முடிவு :**

(சுறந்த)தொரு பால்போலே அமுர்த மூறும்
கனிவான அமுர்தமதைத் தினமுங் கொள்ளு
சிறந்ததொரு பூரணத்தைத் தினமுங் கொ(ன்று)ண்டு
சிவமான மவுனத்தில் சேர முற்றே ! — 120

அகஸ்தியர் மாமுனி அருளிச் செய்த

கலைக்கியான சூத்திரம் நூற்றிருபது

முகிந்தது முற்றும்

காலம் :

ஸ்ரீ முக வருஷம், சித்திரை மாதம் 16 ஆம் தேதி திங்கட்கிழமை சந்திரகலை பொருந்தினது சிதம்பரம் ஏடு, நெட்டெழுத்து சிதம்பரம்.

குருவே நமா

குறிப்பு :

இது. எமது சுவடி எண் 367-d/D736 'அகத்தியர் கலைக்கியான சுருக்கம்—120' போன்றது பாடவேறுபாடுகளும், பிழைகளும் உள்ளன. இடையில் 3 ஏடுகள் இல்லை.

★ ★ ★

வரிசை எண் : 2411 சுவடி எண் : 1290

## அகத்தியர் குருநூல் — 50 முதலியன

ஏடுகள் : 10 கி. எண்ணிக்கை : 400 அளவு : 36×3½ செ.மீ.
பக்கத்திற்கு : 7—9 வரிகள் ஆசிரியர் : அகத்தியர் பொருள்: மருந்துவம்
நிலைமை : மிகப் பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்

தொடக்கம் :

ஆனைமுகத் தைங்கரனைப் பாதம் போற்ற
ஆதியிலே வைத்திய நூல் ரெண்டு லெட்சம்
மானிலத்தில் பாதத்தில் லெட்சங் காப்பு
வகுத்துரைத்தேன் வயித்தியநூல் மார்க்க மெல்லாம்

முடிவு :

ஆய்ந்தபரை யீஸ்பரிக்கும் பூசை பண்ணு
வங்கரனார் வடுகனுக்கும் பூசை பண்ணு
வாய்ந்த பொருள் செந்தூரம் தன்னைக் கண்டு
மகிழாதே நிரவாணி சோதிப் பாளே !
தேர்ந்து நன்றாய்ப் பூரணியை .........

காலம்

இல்லை.

குறிப்பு :

இதில், ஷி நூல், ரோமரிஷி சர சுருக்கம்—24, அகத்தியர்—1500க்குச் சுருக்கப், குருநூல் அன்பது, வயித்தியம் முதலியன உள்ளன.

இவற்றில், தாமிரபற்பம், ஆலாத்திரி கற்பூரம், மூலம் பவுத்திரம், புண்புரைகள், கெந்திக்கட்டு, பாஷாணக்கட்டு, அரையாப்புத் தீரும் மருந்து, கெற்பநோய் தீர்வதற்கு மருந்து, மேகத்துக்கு வெள்ளிப் பற்ப மருந்து, சகல வாயுவுக்கு மருந்து முதலியன உள்ளன.



வரிசை எண் : 2412 சுவடி எண் : 1291

## போகர் - ஏழாயிரக் காண்டம்

ஏடுகள் : 18 கி. எண்ணிக்கை : 1000 அளவு : 22 × 5 செ.மீ
பக்கத்திற்கு : 17—18 வரிகள் ஆசிரியர் : போகர் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றற்றது. எழுத்து : தமிழ்

தொடக்கம் :

காப்பு

ஐந்துகரத்தனை ... ...... போற்றுகின்றேனே
குருகிடாட்சமுண்டாக வேணும்

நூல்

கரிமுகன்றன் ப............ பதம் போற்றி
காடாட்சி .. யெனையீன்ற மாயிபதம் போற்றி
மரிஅ...... பதம்போற்றி வாணிபதம் போற்றி
அருள்தந்த லட்சுமிதன் பாதம் போற்றி
துரிதமாம் பாட்டரென்ற .........பதம் போற்றி
துணையான காலாங்கி அய்யர்பதம் பேற்றி
நிருவிகற்ப சமாதியுற்ற ரிஷிகள் பாதம் போற்றி
நிறைந்துநின்ற பூரணமே காப்புத் தானே ! — 1

முடிவு :

ஓட்டியே மூலத்தால் முத்தி பெற்றார்
    உத்தமனே பாட்டரென்ற மூல நாயர்
நாட்டியே நந்தியல்லோ உபதே சித்தா॥
    நலமான மூலத்தில் நந்தி நந்தி
ஏட்டியே மூலத்தால் முத்தி பெற்றார்
    ஏத்தமாம் பாட்டரென்ற எட்டுப் பேரும்
மூட்டியே விபுகடந்து மூலம் மூலமென்று
    மூச்சுவிட்டுப் பேச்சொண் ணாதே ! — 183

மேசொண்ணா மூல ..........

காலம் :

இல்லை

குறிப்பு :

இதில், எட்டு சக்தி, சுவாதிட்டானம், மணிபூரகம், அநாகதம். ஆக்கினை, ஆக்கினை குருபதம், துவாதெசாந்தம், யோக காரணை, அண்டப்பாச்சல், நூல்பெருகலை, ஞானம் சூடாலை. புசுண்ட மூர்த்தி ஆகிய தலைப்புகள் உள்ளன.

★ ★ ★

வரிசை எண் : 2413 சுவடி எண் : 1292-a

## போகர் — 700

ஏடுகள் : 150 கி. எண்ணிக்கை : 4000 அளவு : $29 \times 3\frac{1}{2}$ செ மீ.
பக்கத்திற்கு : 7-8 வரிகள் ஆசிரியர் : போகர் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பொடிந்த நிலை முழுமை : (முற்றற்றது)
எழுத்து : தமிழ்

தொடக்கம் :

ஆனந்தமாய் நின்றதொரு ஆயி பாதம்
    அகண்டபரி பூரணமாம் அய்யர் பாதம்
வானந்த மாய்நின்ற கிணேசன் பாதம்
    மருவியதோர் மூலத்தில் நந்தி பாதம்

முடிவு :

சொன்னதொரு காலாங்கி அய்யருட பதத்தைத்
தொழுதுகொண்டு எழுநூற்றுச் சில்வானஞ் சொன்னேன்
சொன்னதொரு சித்தருட பதங்கள் போற்றிச்
சூத்திரந்தான் பாடியது காட்சி முத்தே ! — 762

முத்தும்

உத்தமமா குருமுனி நாயன் பொற்.........துணை.

காலம் :

கீலக வருடம் ஆடி மாதம் 21-ந் தேதி கிருட்டின பிள்ளை எழுதி

முகிந்தது

குறிப்பு :

இது எமது சுவடி எண் 305/D. 548 'போக நாயனார் எழுநூற்றுத் திரட்டு' போன்றது.

★ ★ ★

வரிசை எண் : 2414 சுவடி எண் : 1292-b

## அகத்தியர் – 80

ஏடுகள் : 12 கி. எண்ணிக்கை : 600 அளவு : 29 × 2½செ.மீ.
பக்கத்திற்கு : 8—9 வரிகள் ஆசிரியர் : அகத்தியர் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பொடிந்த நிலை முழுமை : முற்றற்றது
எழுத்து : தமிழ்

தொடக்கம் :

அரன்கயிலை விட்டுநான் தெட்சணத்தில் வந்து
அளவறந்த கோடிசித்தர் முனிவர் ரிஷிகளுமாய்
பரந்ததொரு பொதிகைதனி லிருக்கும் போது
பாடினோம் வாதமொடு வைத்தி யந்தான்

முடிவு ;

ஆலென்ற மரத்திலே விழுதோடுமாப் போலே
அறிந்தறிந்து நூலெல்லா மாராய்ந்து பாரு
காலென்ற கண்ணோய்க்குப் பாரு சொன்னேன்
கற்றறிந்தோர்க் கெண்பதுதான் காட்டி முற்றே — 80

பொதிகை நயினார் பாதாரவிந்தமே கெதி
வேலூர் வாத்திமை சுப்பிரமணியன் கையெழுத்து

குரு முன்னிற்க

காலம் :

இல்லை

குறிப்பு :

இது. எமது சுவடி எண் 371-b/D 746 போன்றது. நல்ல பாடல்களும் உள்ளன பிழைகள் அதிகம்.



வரிசை எண் : 24 5 சுவடி எண் : 1293-a

## ரோமரிஷி அண்ட வித்தை

ஏடுகள் : 3½ கி. எண்ணிக்கை : 100 அளவு : 25×3 செ மீ.
பக்கத்திற்கு : 7—8 வரிகள் ஆசிரியர் : ரோமரிஷி பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்

தொடக்கம் ;

தெளிவோர்க்கு ஞானத்தைச் சொல்லக் கேளு
சிற்றின்பம் பேரின்பம் சிவனும் சத்தி
அறியாத சிவன்வெள்ளை சிகப்பு சக்தி
அண்டமது யீஸ்பரனார் அறிந்து பாரே !
வழியான பிண்டமப்பா சத்தி யாகும்
மறையுண்டோ அடக்கிவிடு வெளிவி டாதே
தெளியாத ஞானியோர்க்கு ............ ............
உரைக்கிறேன் அயன் வடிவை உரைக்கக் கேளு ! — 1

முடிவு :

உருவான உப்பு இதுதான் உ............யமிதுதான்
உத்தமனே சிவனிது ..............

முற்றிற்று

காலம் :

இல்லை

குறிப்பு

இதில், யாவற்றையும் சிவம், சக்தியாகப் பாவிக்கும் தன்மையும், துருசுச் சுன்னமும் கூறப்பட்டுளன.

—o—

வரிசை எண் : 2416 சுவடி எண் : 1293-b

## திருமூலர் மறைப்பு

ஏடுகள் : 1½(4-5) கி. எண்ணிக்கை : 50 அளவு : 25×3 செ.மீ.
பக்கத்திற்கு : 7—8 வரிகள் ஆசிரியர் : திருமூலர் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : என்று இ லை எழுத்து : தமிழ்

தொடக்கம் :

ஆதியென்ற உ.... ...யினாச் சு......ரங்கட்டி
அச்சாரம் வழலையினால் ........ நீராய்
(மீ)தியென்ற வங்கத்தை நீரிலப்பா
சாய்த்திடவே மூவ்வே ..............

முடிவு :

கார்க்கயிலே சரக்குக்கு யிட்டா யானால்
களும்பாகி சரக்கெல்லாம் கருத்துப் போகும்
யேற்கையிலே துரிசுமுறை கண்டார் மூலர்
எதிரில்லா லோகமெல்லாம் பொன்செய் தாரே !

காலம் :

இல்லை

குறிப்பு :

இதில், தங்கக் குரு முதலியன சொல்லப்பட்டுள்ளன.

★ ★★

வரிசை எண் : 2417 சுவடி எண் : 1293-С

## மச்சமுனி மறைப்பு முதலியன

ஏடுகள் : 5 (6-10) கி. எண்ணிக்கை : 100 அளவு : 25 × 3 செ.மீ. பக்கத்திற்கு ; 7—8 வரிகள் ஆசிரியர் : மச்சமுனி முதலானோர் பொருள்: மருத்துவம் நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்

தொடக்கம் :

ஆச்சப்பா மச்சமுனி மறைப்பைக் கேளு
அறுபத்து நாலுவகை சரக்கு வைப்பில்
ஓச்சப்பா அடுட்பெரிப்பு முறைக ளெல்லாம்
ஒளித்துவைத்தார் நந்தியெண் ணாயிரத்தில் பாரு
வாச்சப்பா சரக்குவைப்பு பகைக்கும் பாரு
பாஷாணக் குருமுறையில் வீரக் கட்டை
யேச்சப்பா சொல்லாமல் வீரம் சொன்னால்
எடுத்ததொரு செயநீரை விட்டால் பொய்யே !

முடிவு :

மூடப்பா சகலகுறைக் கெல்லா மாதி
மூச்சுவிட்டுப் பேசாதே முப்பத் தாறில்
சூடப்பா தத்துவநூ லறியச் சொன்னேன்
சூத்திரமாம் பலபலவாம் சோதி முற்றே !

காலம் :

இல்லை

குறிப்பு :

இதில், மச்சமுனி மறைப்பு ஒரு ஏடே உளது. அடுத்து (பாதி ஒடிந்த ஏட்டில்) வாசமுனி மறைப்பு, ஏமக்கிழங்கு, (8-வது ஏட்டில்) இடைக்காட்டுச் சித்தர் அப்பிரகச் சுன்னம், (9) ரோமரிஷி மறைப்பு, வெடியுப்புச் செயநீர் ஆகியவை உள்ளன.

❋ ❋ ❋

வரிசை எண் : 2418 சுவடி எண் 129 - ம

# அழுகணிச் சித்தர் வகாரப் புலம்பல்

ஏடுகள் : 25 கி. எண்ணிக்கை 500 அளவு : 25×3 செ.மீ.
பக்கத்திற்கு : 7—8 வரிகள் ஆசிரியர் : அழுகணிச்சித்தர் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

**தொடக்கம் :**

ஆத்தாள் சிவானந்தி

மேகத்தா ல ........ தாச்சு — ஆத்தாள் சிவானந்தி
விசரவியில் சுண்ணாம்பாம்
ஆகச்சிறு..............ம் — ஆத்தாள்
அஷ்ட சத்தி அவள்..........
இரவி முகத்தாளே — ஆத்தாள்

**முடிவு :**

மெய்த்திருபத்தாம் காச்சல்
வெடியுப்பு பலந்தான் நாலு
தைத்திடும்பா நப்புச் சட்டி
தன்னிலே உருக்கும்போது — 14

**காலம் :**

இல்லை

**குறிப்பு :**

இதில் சகல சரக்கு......முறை, பாஷாணக்கட்டும் செந்தூரமும், வழலை யெண்ணெய் வாங்க, தொந்த மித்திர சுன்னங்கள், பிரம கல்ப சுன்னத்தால் சகலமும் சுன்னம், பூரண செயநீர், சுவாசகாசம், கல்பமுறை, முப்பு முறை, குடத்து நீர், குடத்து நீருப்பு அண்ட செயநீர், காந்த உப்புச் சுன்னம் முதலியன உள்ளன. நடுப்பகுதி பயனற்ற நிலையில் உள்ளது.

வரிசை எண் : 2419 சுவடி எண் : 1294-a

## அகத்தியர் மதிவெண்பா — 100

ஏடுகள் : 11 கி. எண்ணிக்கை 400 அளவு : 3 × 3½ செ.மீ
பக்கத்திற்கு : 9—10 வரிகள் ஆசிரியர் : அகத்தியர் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்

**தொடக்கம் :**

ஆதிசிவன் பாதமதை அன்புடனே நெஞ்சில்வைத்து
சேதிமதி வெண்பாவைச் சொல்லுவேன் — நீதியுடன்
வாலை யிருபதத்தை வாக்கிலே வைத்தருள
காளையின்மே லேறுசிவன் காப்பு.

**முடிவு :**

அறிவா லறிந்துகொண்டு ஆசையெல்லாந் தான்போக
நெறியாக ஞானநிலையில் நில்லு — குறியாக
நான்சொன் வெண்பாவில் நத்துவது புத்திசொன்னேன்
மான்சொன்ன மதிவெண்பா மணி

முற்றும்

(வெண்பாக்கள் சரியில்லை)

அகஸ்தியர் மதிவெண்பா முற்றிற்று
உலகநாத சுவாமி துணையாக வேணும்
ஆள்க்கொண்டார் துணையாக வேணும்

**காலம் :**

இல்லை

**குறிப்பு :**

இது, எமது சுவடி எண் 432-a/D 911, எண் 445-a/D 968 போன்றது.

இதன் இறுதியில் ஆட்கொண்டாரைக் குறிப்பிடுவதால் இது திருவையாற்றுச் (தஞ்சாவூர்) சுவடியாக இருக்கலாம் எனக் கருதப்படுகிறது.

—oo—

வரிசை எண் : 2420 சுவடி எண் : 1294-b

## அகத்தியர் வகாரம் — முப்பது

ஏடுகள் : 5 கி. எண்ணிக்கை : 150 அளவு : 30 × 3½ செ.மீ.
பக்கத்திற்கு : 9—10 வரிகள் ஆசிரியர் : அகத்தியர் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்

**தொடக்கம் :**

ஆதிபரா பரத்தினுட கிருபை கூர்ந்து
அடிமுடியாய் *மனக்கோல நந்தி காப்பு
நீதியாம் வாரணத்தின் முகவன் காப்பு
நிர்மல சதாசிவத்தின் வடிவே காப்பு,

**முடிவு :**

நாமப்பா சொல்லுகிறேன் தாம்புரத்தில் கொடுக்க
நாட்டார்கள் பிழைப்பதற்கு வழியு முண்டாங்
காமப்பா லதையெடுத்து வெள்ளிக் கீய
கனகமாங் கருமூன்று பத்து முற்றே! — 30

அகத்தியர் சுவாயி சகாயம்
உலகநாத சுவாமி துணையாக வேணும்

**காலம் :**

இல்லை

**குறிப்பு :**

இது எமது சுவடி எண் 469-f D 1049 போன்றது.

* மணக்கோல எனல் பொருந்தும்



வரிசை எண் : 2421 சுவடி எண் : 1294-

## அகத்தியர் ஞானகாவியச் சுருக்கம் — 16

ஏடுகள் : 8 கி. எண்ணிக்கை : 150 அளவு : $30 \times 3\frac{1}{2}$ செ.மீ
பக்கத்திற்கு : 9 வரிகள் ஆசிரியர் : அகத்தியர் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்

தொடக்கம் :

ஆதிமறை சாத்திரங்கள் பிறந்த வாறும்
அடிமுடியும் நடுவாகிப் பொருள்மூன் றாகி
வேதியனும் மால்சிவனும் நின்ற வாறும்
வேதமுடன் ஆகமங்கள் வகுத்த வாறும்

முடிவு:

ஆணையப்பா முக்காலும் ஆணை ஆணை
அறிந்துணர்ந்த ஞானிகளை (அழுத்திச்) சேறு
பாணப்பா ஊணிறுதாய் பதத்தைப் போற்றி
பதினாறுஞ் சிவசூட்சம் பொருள்தான் முற்றே ! — 16

அகத்தியர் பதினாறு முற்றும்

உலகநாத சுவாமி துணை

ஆட்கொண்டார் துணை

காலம் :

இல்லை

குறிப்பு :

இது, எமது சுவடி எண் 700-f/D1390 போன்றது



வரிசை எண் : 2422 சுவடி எண் : 1294-d

## அகத்தியர் சிவயோகம் — 14

ஏடுகள் : 2 கி. எண்ணிக்கை : 100 அளவு : 30× 3½ செ.மீ.
பக்கத்திற்கு : 9 – 10 வரிகள் ஆசிரியர் : அகத்தியர் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

**தொடக்கம் :**

.................. ............... ................ ...............
.............. ............. ............ ...............
சோதிமய மாகிநின்ற கிணேசன் பாதம்
சொல்லி நிக்கு மெட்டாத (சூட்சா சூட்சம்)

**முடிவு :**

மேற்கவே ரசமணியின் மார்க்கந் தானு
மென்மக்காள் சொல்லிவிட்டேன் எழும்பு மார்க்கம்
சேர்க்கவே யிம்முறையை உனக்குச் சொன்னேன்
செழுங்கருணை பதினாலிற் சிவயோகம் முற்றே ! — 14

அகஸ்தியர் பதினாலு முற்றிற்று

உலகநாத சுவாமி துணை

**காலம் :**

இல்லை

**குறிப்பு :**

இது, எமது சுவடி எண் 469 i/D 1052. "அகத்தியர் ஞானம் — 14" போன்றது.



வரிசை எண் : 2423 சுவடி எண் : 1294-e

## அகத்தியர் பாடல் — 12

ஏடுகள் : 2 கி. எண்ணிக்கை : 100 அளவு : 30× 3½ செ.மீ.
பக்கத்திற்கு : 9—10 வரிகள் ஆசிரியர் : அகத்தியர் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

தாயான உன்மனையாள் பாதம் போற்றி
சாத்திடுமே ஆயிரத்தி யிறநா றுக்குள்
தோயாத கருவொன்று மில்லை யில்லை
சொல்லடக்க மாயுரைத்தேன் வழலை யொன்று

முடிவு :

நானென்ற ஆணுவத்தை யொழிக்க வேணு
நலமான சிவயோகம் நாட்ட வேணும்
தேனென்ற சற்குருவைக் காக்க வேணும்
சித்தியாம் பணிரெண்டுஞ் சிறக்க முற்றே ! — 12

அகத்திய சுவாமி துணையாக வேணும்

காலம் :

இல்லை

குறிப்பு :

இது எமது சுவடி எண் 321-c/D 605 'அகத்றியர் வகாரச் சுருக்கம் - 12' போன்றது. இது பிழையற்ற நல்ல பாடமாக இருக்கிறது.



வரிசை எண் : 2424 சுவடி எண் : 1294-f

## அகத்தியர் — 10

ஏடுகள் : 2 கி. எண்ணிக்கை : 100 அளவு : 30 × 3½ செ.மீ.
பக்கத்திற்கு : 9—10 வரிகள் ஆசிரியர் : அகத்தியர் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

பாரப்பா வாதியென் ............ ............
............ சிவமாவ ............ .........
நேரப்பா வாதியென்ற யோகம் வேணும்
நேராக நிஷ்டையது ............ வேணும்

**முடிவு :**

நாடாதே கள்ளரென்ற மானிடர்க்கு
...........  ......யெல்லா மறிந்து கொண்டு
த............ விள்ளாதே அடக்கமுற்றே ! — 10

அகஸ்தியர் சுவாமிகள் பத்து முற்றும்

உலகநாத சுவாமி துணை

ஆட்கொண்டார் சுவாமி துணை.

**காலம் :**

இல்லை

**குறிப்பு :**

இதில், வாலை பூசை முதலியன சொல்லப்பட்டுள்ளன.



**வரிசை எண் : 2425** **சுவடி எண் : 1294-இ**

## அகத்தியர் — 37 (காலாங்கி நாயனார் ஞானம்)

ஏடுகள் 6 கி. எண்ணிக்கை : 300 அளவு : 30 × 3½ செ மீ
**பக்கத்திற்கு :** 9 – 10 வரிகள் ஆசிரியர் : அகத்தியர் (காலாங்கியார்) பொருள் **மருத்துவம்** நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

**தொடக்கம் :**

ஆதியென்ற (சூளியொன்றை)த் தியானம் பண்ணி
அதன்பிறகு அரிநமோ நன்றாக வென்று
நீதியுடன் குருவாழ்க வென்று சொல்லி
நிரஞ்சனமாய்ச் சற்குருவைத் துணையென் றேதான்
சோதியென்ற கமல (ம)டா அண்டத் தாதி
துலங்கிநின்ற ........... தியானம் பண்ணி
ஓதியதோர் மந்திரத்துக் குயிராய் நின்ற
ஓம்நமோ கணபதிதன் பாதங் காப்பே !

முடிவு :

பண்ணப்பா பூசைவிதி நன்றாய்ப் பாரு
பந்திகொண்டு தீட்சைபிலே பதிவாய் நில்லு
நண்ணப்பா பட்சணியை நயந்து பாரு
நடுவான தனறக்கம் நாடிப் பாரு
விண்ணப்பா தானோக்கி ஞான(ம்) பாரு
வே.........ன யமுர்தமோ தகத்தைப் பாரு
முன்னப்பா கண்ணொளிபோ லொண்டே சூட்ச
முத்தீயோ........... .........பூரணந்தான்முற்றே ! — 37

காலாங்கி நாயனார் அருளிச்செய்த
ஞானம் முப்பத்தேழு முற்றிற்று
உலகநாத சுவாமி துணை

காலம் :

இல்லை

குறிப்பு :

இதில், பூசைவிதி, தீட்சை முதலியன கூறப்பட்டுள்ளன.



வரிசை எண் : 2426 சுவடி எண் ; 1294-h

## ரோமரிஷி ஞானம் — 5

ஏடு : 1 கி. எண்ணிக்கை : 50 அளவு : 30 × 3½ செ.மீ.
பக்கத்திற்கு : 10 வரிகள் ஆசிரியர் : ரோமரிஷி பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்

தொடக்கம் ;

கேளப்பா யோகசித்தி யாக வென்றால்
..................ண்பினைமே லேறிக் கொண்டு
.........ளப்பா ஒருசாமம் .........யாமல்தான்
............ ............ ஒன்றாய்ப் போகும்

முடிவு :

தன்னவரே தானேதானாய் சதானந்த
பூரணமாய் ......... .. னியாய் நின்றே

னன்னவனே யிதுவல்லோ மடீன மார்க்க
முடைப்பதற்கு யோகமய மார்க்க முற்றே ! — 5

ரோமரிஷி அருளிச் செய்த பஞ்சம ஞானம்

முற்றிற்று

உலகநாத சுவாமி துணை.

**காலம் :**

இல்லை

**குறிப்பு :**

இதில், யோகம் சித்தியாகும் முறை பேசப்படுகிறது.



வரிசை எண் 2427 சுவடி எண் : 1294-ி

## வால்மீகர் ஞானம் — 16

ஏடுகள் : 3 கி. எண்ணிக்கை : 150 அளவு : 30×3½ செ.மீ.
**பக்கத்திற்கு :** 9—10 வரிகள் **ஆசிரியர் :** வால்மீகர் பொருள் : மருத்துவம்
**நிலைமை :** மிக மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்

**தொடக்கம் :**

(அருள் வெளியாய் நின்ற) சிவன் பாதம் போற்றி
எழுத்தினுட விபரத்தை விரித்துச் சொல்வேன்
அருவுருவாய் நின்றதுவே யெழுத்த தாகும்
ஆதியந்தம் அண்டபிண்டம் அதுவே யாகும்.

**முடிவு :**

தேன்வனாம் சித்தர்கட்கு ............ ............
சிறப்பாக உடலுக்குப் பதியே யாகுங்
சோனவனா யிருக்கவென்று குறுக்கிச் சொன்னேன்
குவலயத்தில் பதினாறுங் குருத்தாய் முற்றே ! — 17

வால்மீகர் அருளிச்செய்த பதினாறு

முற்றும்

உலகநாத சுவாமி துணை

**காலம் :**

இல்லை

**குறிப்பு :**

இதில், எழுத்தின் தோற்றம் முதலியன கூறப்பட்டுள்ளன.



வரிசை எண் : 2428 சுவடி எண் : 1294-j

## வால்மீகர் ஞானம் — 10

ஏடுகள் : 2 கி. எண்ணிக்கை : 100 அளவு : 30×3½ செ.மீ.
பக்கத்திற்கு : 9—10 வரிகள் ஆசிரியர் : வால்மீகர் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

**தொடக்கம் :**

திருமூர்த்தி தேவர்முதல் மனித ரோடு
சிவயோகம் பெற்றிருந்த மார்க்கந் தன்னை
பிரியமுட னெ... ......... பிள்ளாய்
பின்கலையு மிடகலையு மாறும் போது

**முடிவு :**

கண்டுரைத்தார் சித்தர்பதி னெட்டுப் பேரு
காசினியில் பரிபாஷை யாகச் சொன்னார்
..... ... ......ம்பித்தை யறியச் சொன்னேன்
பரமரகசியஞ் சிவயோகம் பத்து முற்றே ! — 10

வால்மீகர் அருளிச் செய்த பத்து

முற்றும்

உலகநாத சுவாமி துணை

**காலம் :**

 இல்லை

குறிப்பு :

இதில், சிவயோகம் பற்றிய செய்திகள் குறிப்பிடப்பட்டுள்ளன.



வரிசை எண் : 2429 சுவடி எண் : 1294-k

## டமரானந்தர் வகாரம் — 16

ஏடுகள் ; 3 கி. எண்ணிக்கை :150 அளவு : $30 \times 3\frac{1}{2}$ செ.மீ.
பக்கத்திற்கு : 9—10 வரிகள் ஆசிரியர் : டமரானந்தர் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்

தொடக்கம் :

ஆனந்த நிற்குணத்தி னருளே காப்பு
அடியேனை ஆண்டநந்தி பாதங் காப்பு
தானந்த செனகாதி ரிஷிகள்க் கெல்லாம்
தாசனென்றும் பேர்படைத்தே டமரானந்தன்

முடிவு ;

சித்துவிளை யாடுதற்கு சிறந்த நானூற்
செப்பினேன் சிவநூலைத் தெளிந்து பார்த்து
அத்துவைத மானதினால் டமார னந்தன்
அருளிசொல் பதினாறு மடக்க முற்றே ! — 17

டமரானந்தர் அருளிச் செய்த பதினாறு

முற்றிற்று

காலம் :

இல்லை

குறிப்பு :

இதில், சித்துவிளையாடுதற்கு உபாயம் முதலியன கூறப்பட்டுள்ளன.



வரிசை எண் : 2430 சுவடி எண் : 1294-I

# நந்தீசர் ஞானம்—12

ஏடுகள் : 2 கி. எண்ணிக்கை : 100 அளவு : 30×3½ செ.மீ
பக்கத்திற்கு : 9—10 வரிகள் ஆசிரியர் : நந்தீசர் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்

தொடக்கம் :

சீர்பெருகும் வேதாந்தத் துள்மூ லத்தின்
செயலறிந்து மனமடங்குந் துரிய வீட்டில்
நீர்பெருகுங் ...மறிந் துன்ற வாசி
நேரறிந்து நிறைசெலுத்தி முனையி லேறி
பேர்பெருகு கேசரியை கண்டு போற்றி
பேசாம லொடுங்கிநின்ற பெரியோர் பாதம்
நேர்பெருகு நெஞ்சில்வைத்துத் தொழுது போற்றி
நிச்சயமாய்ச் சொல்லுகிறே னுப்பைத் தானே ! — 1

முடிவு :

மாவென்பார் துரியமணி பூரத் துள்ளே
வந்தமர்ந்த னாதசத்தி மவுன மூலம்
வூவென்பார் உகாரத்தின் ஒளியைப் பாரு
உத்தொடுங்கி பனிரெண்டும் மொன்றாய் முற்றே ! — 12

நந்தீசரருளிச் செய்த வகாரம் பனிரெண்டு

முற்றும்

உலகநாத சுவாமி துணை

காலம்

இல்லை

குறிப்பு :

இதில், முப்பு பேசப்படுகிறது



வரிசை எண் : 2431 சுவடி எண் : 1294-m

## நந்தீசர் ஞானம் — 33

ஏடுகள் : 2 கி. எண்ணிக்கை : 100 அளவு : 30×3½ செ.மீ
பக்கத்திற்கு : 9—10 வரிகள் ஆசிரியர் : நந்தீசர் பொருள் : மருந்துவம்
நிலைமை மிக மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்

தொடக்கம் :

சித்தர் நூல்கள் சொன்ன விவரம்

பூரணமா ............ ......ணடி மூலங்
காரண மானகண ... ..... ........
சாரண மேலாய்ச் சார்ந்திடு ...........
......... ......... அடிமுடி காப்பே ! — 1

முடிவு :

கோலமி தென்னுங் ......... .........
காலது மில்லை ......... .........
பாலனு மமுர்தம் பானமு முண்டா
மூலமு தான முப்பது முற்றே ! — 33

காலம் :

இல்லை

குறிப்பு :

இதில், முப்புவின் விபரம், சவுக்காரச் செயநீர் துரிசுச்சுன்னம் முதலியன உள்ளன.

* * *

வரிசை எண் : 2432 சுவடிஎண் ; 1294-n

## அகத்தியர் குருநூல் —50 (55)

ஏடுகள் : 10 கி. எண்ணிக்கை ; 500 அளவு : 30×3½ செ.மீ.
பக்கத்திற்கு : 9—10 வரிகள் ஆசிரியர் : அகத்தியர் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்

**தொடக்கம்:**

சீர்தரு ஞான......தி .........சோதி காப்பு
ஆர்தரு கொன்றை தும்பை அணிந்தநா வலனே காப்பு
பார்தனி வேதஞான திரிகையும் பாட வேண்டி
கார்முகில் மேனி யானுங் கணபதி காப்ப தாமே!

**முடிவு:**

அறிவாய்நீ அன்பத்தி ஐந்தின் சூட்சம்
ஆதிமுத லந்தம்வரை மூலஞ் சொன்னோங்
குறியான திதுகுறியின் கருவைக் கண்டு
குருபாத முள்க்கொள்ளக் குறியுஞ் சொன்னோம்
நெறியாக நின்றுனக்கு நிட்டைமுதல் தியானம்
நீயறிய நாமென்ற நிலையுஞ் சொன்னோம்
அறிவாய்நீ என்றுனக்கு அருளிச் சொல்லி
ஆணையிட்டுக் குறித்தகுறி யறிவாய் முற்றே! — 55

முற்றிற்று

அகத்தியர் அருளிச் செய்த குருநூல்
அன்பத்தஞ்சும் முற்றும்

உலகநாத சுவாமி துணை

ஆட்கொண்டார் துணை

முற்றுப் பெற்றது.

**காலம்:**

இல்லை

**குறிப்பு:**

இதில், ஞானக்கிரியை பற்றிக் கூறப்பட்டுள்ளது.

இது, எமது சுவடி எண் 321-g/D 609-ன் வேறாயது.

★ ★ ★

வரிசை எண் : 2433 சுவடி எண் : 1294-ο

## அகத்தியர் மெய்ஞ்ஞானச் சுருக்கம் — 51

ஏடுகள் : 9 கி. எண்ணிக்கை : 400 அளவு : 30 × 3½ செ மீ·
பக்கத்திற்கு : 10—11 வரிகள் ஆசிரியர் : அகத்தியர் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்

தொடக்கம் ;

வெண்பா

குருமுனி நந்திகுரு பாதமுட் கொண்டு
உறுதிபேர் மெய்ச்சுருக்க மோத — குருமுன்னாய்
கொண்டாடிக் கொண்டேழில் குறிப்பறிந்து முப்பொருளை
கண்டார்க்கப் பூரணமே காப்பு (?)

முடிவு :

............ தொன்றுக்கு மெட்டெட்டு போக்கு
............ போக்கும் .........த்துள் சூட்ச மாட்சி
பாதம்... ......... பொய்யாமல் மெய்யாகு
...... ..... ............ மெய்ச்சுருக்க முற்றே ! — 51

உலகநாத சுவாமி துணை

ஆட்கொண்டார் சுவாமி துணையாகவும்

அகத்திய நாயனார் அருளிச்செய்த மெய்ச் சுருக்கம்

முற்றும்

காலம் :

இல்லை

குறிப்பு ;

இதில், மறைப்பு வித்தை, மறைப்பு மை முதலியன கூறப்பட்டுள்ளன.

★ ★ ★

வரிசை எண் : 2434 சுவடி எண் : 1294 p

# அகத்தியர் மெய்ஞ்ஞானச் சுருக்கம் — 5

ஏடு : 1 கி. எண்ணிக்கை : 40 அளவு : $30 \times 3\frac{1}{2}$ செ.மீ.
பக்கத்திற்கு : 10 வரிகள் ஆசிரியர் ; அகத்தியர் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்

**தொடக்கம் :**

காரணமாய் மூலமாங் குருவின் பாதம்
கருணைதருஞ் சித்தர்முதற் ............ ............
(வா)ரணமாம் யெனையீன்ற ............ ............
வணங்கியே ............ ............ ............

**முடிவு :**

ஆமப்பா அகாரத்தி லுகாரங் கூட்டி
அம்பலத்தில் நடம்புரிந்த ஆட்டங் காணும்
ஓமப்பா பிரணவத்தை வளத்துக் கூட்டி
ஓடுகின்ற சரக்கெல்லாஞ் சுண்ணம் பண்(ணு)ம்
நாமப்பா நவலோகந் தன்னில் லூட்ட
நலமாக ஒன்பதரை தப்பா தப்பா
காமப்பா ......ளுவினால் வேதை சொன்னேன்
கைகண்ட திந்தனூல் அஞ்சு முத்தே ! — 5

அகத்திய னாயனா ரருளிச்செய்த ஞானச்சுருக்கம்

முற்றும்

உலகநாத சுவாமி துணை

**காலம் :**

இல்லை

**குறிப்பு :**

இது, இரச வாதத்தைத் தத்துவ ரூபமாகவும் மறைமுகமாகவும் கூறுகிறது



வரிசை எண் : 2435 சுவடி எண் : 1294-q

## அம்பிகானந்தர் ஞானம் — 25

ஏடுகள் : 5 கி. எண்ணிக்கை : 200 அளவு : 30 × 3½ செ.மீ.
பக்கத்திற்கு : 8—10 வரிகள் ஆசிரியர் : அம்பிகானந்தர் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்

**தொடக்கம் :**

கார்செறியு மேனிவிநா யகனே காப்பு
காலாங்கி ............ கருவூரார் காப்பு
யேர்வளரும் ......... பாதங் காப்பு
மெய்யான ......முனி மிகவே காப்பு

**முடிவு :**

பேதிப்பான் பூரணைக்கி பிறமா மென்றும்
பெரிதான கற்பமதை சரமா மென்றும்
சாதிப்பா னிதற்கெல்லாம் ........ .........
சா......த்திற் ந........ ......... ......தே ! — 25

அம்பிகானந்தர் சூத்திரம்

முற்றிற்று

உலகநாத சுவாமி துணை

**காலம் :**

இல்லை

**குறிப்பு :**

இதில், குறிஞ்சி, முல்லை, நெய்தல், மருதம், பாலை ஆகிய நிலங்கள் ஐந்தும், நீர், பிரமகற்பப் முதலியனவும் கூறப்பட்டுள்ளன.

★ ★ ★

வரிசை எண் : 2436 சுவடி எண் : 1294-r

# அகத்தியர் ஞான சூத்திரம் — 13

ஏடுகள் : 3 கி. எண்ணிக்கை : 100 அளவு : 30 × 3½ செ.மீ.
பக்கத்திற்கு : 8—9 வரிகள் ஆசிரியர் : அகத்தியர் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

**தொடக்கம் :**

சீர்கொண்ட அருமறையின் பொருளாய் நின்ற
தெட்சணா மூர்த்திகுரு பதத்தைப் போற்றி
(பேர்)கொண்ட சூத்திரமே பதிமூன் றுக்குள்
பிரித்துரைப்பேன் பூவழலை ......... யெல்லாம்

**முடிவு :**

சொல்வதென்ன கற்பத்தை யிகழ்த்தி டாதே
செந்தூரஞ் செய்யயிலே ......... டாதே
கொல்வதென்ன அவத்தையிலே (ம)னம்போ காதே
குளிகைக்குச் சாறணையே குணமா முற்றே ! — 13

முற்றும்

குருபாதமே துணை

**காலம் :**

இல்லை

**குறிப்பு :**

இதில், பூவழலை, கற்பம், செந்தூரம் முதலியன கூறப்பட்டுள்ளன.



வரிசை எண் : 2437 சுவடி எண் : 1294-s

## ஊர்வசி ரெத்தினச் சுருக்கம்

ஏடுகள் : 3 கி. எண்ணிக்கை : 100 அளவு : 30 × 3½ செ.மீ.
பக்கத்திற்கு : 8—9 வரிகள் ஆசிரியர் : ஊர்வசி பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்

**தொடக்கம் :**

யேக மாகி யிருந்த பராபரந்
தேக சீவ சயிதன்ய சிகாமணி
யேக மாக நினைக்கு முருவசி
தோகை யாள்சொல் ......... .........லே — 1

**முடிவு :**

ஆதியின் விலாசமிவை யான செகமியாவும்
பேதமே தாயுந்-தற பேசுவது மொன்றே
சாதி பலவான உயிர்சே காமி தொன்றே
நீதிமொழி யான பதினெட்டு மிவைமுற்றே ! — 18

முற்றிற்று

**காலம் :**

இல்லை

**குறிப்பு :**

இதில் சித்துக்களான நீரில் நடத்தல் முதலான செய்திகள் பேசப்பட்டுள்ளன.

இது எமது சுவடி எண் 148/D 236 போன்றது.



வரிசை எண் : 2438 சுவடி எண் : 1294-t

## கூர்மானந்தர் ஞானம் — 51

ஏடுகள் : 7 கி. எண்ணிக்கை : 390 அளவு : 30 × 3½ செ.மீ.
பக்கத்திற்கு : 10-11 வரிகள் ஆசிரியர் : கூர்மானந்தர் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம்:

திருந்துமதி முகத்தாளே யென்தாய் பாதம்
சிந்தையது ஆனைமுகன் பாதம் போற்றி
பொருந்து ......தி ரிஷிகள் பாதம்
போற்றிசெய்து காலாங்கி பாதம் போற்றி

முடிவு:

கள்ளமில்லா செந்தூரம் சுண்ணாம் பாச்சு
கதிரான தாம்பிரத்தில் குடுக்கச் சொன்னோம்
பிள்ளைக ............ ............ ... .. ... .. ...
பிழைப்புதற்கு வழியுண்டாம் பேசில் முற்றே! — 5

காலம்:

இல்லை

குறிப்பு:

இதில், சிகாரம், வகாரம், சிவயோகம் முதலியவை பேசப்படுகின்றன,



வரிசை எண்: 2439 சுவடி எண்: 1294-ரு.

## தெட்சிணாமூர்த்தி இடைபாகம் — 30

ஏடுகள்: 6 கி. எண்ணிக்கை: 200 அளவு: $30 \times 3\frac{1}{2}$ செ.மீ
பக்கத்திற்கு: 8—9 வரிகள் ஆசிரியர்: தெட்சிணாமூர்த்தி பொருள்: மருத்துவம்
நிலைமை: மிக மிகப் பழுது முழுமை: (முற்றற்றது) எழுத்து: தமிழ்.

தொடக்கம்:

ஆதியெனை யாண்டதொரு சோதி பாதம்
அம்பரத்தில் நின்றதொரு ஆயி பாதம்
நீதியெனை யாண்டதொரு கந்தன் பாதம்
நினவ......... மூப்பதிலே நிறைந்து வாழும்

முடிவு :

பேச்சப்பா பேசினதால் வருவ தேது
　　பேய்மக்காள் நினைவைவிட்ட ......... போச்சு
மூச்சப்பா வொடுங்குமுன்னே சித்தி யாகும்
　　முறையான முப்...... ......... முற்றே! — 32

முற்றிற்று

காலம் :

........ வைகாசி மாதம் 6-ந் தேதிக்கு வயித்திலி......ப்[?]பதும்.. ன (சரியில்லை)

குறிப்பு

இதில், நூல்சிறப்பு, சுன்னம், தம்பனம் முதலியன கூறப்பட்டுள்ளன.



வரிசை எண் : 2440 சுவடி எண் : 1295-உ

## சட்டைமுனி தண்டகம் மூலசூத்திரம் — 100

ஏடுகள் : 18　கி. எண்ணிக்கை : 500　அளவு : 25 × 3½ செ.மீ
பக்கத்திற்கு : 10—11 வரிகள்　ஆசிரியர் : சட்டைமுனியார்　பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது　முழுமை : முற்றற்றது　எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

...திரமதே ...ம்மன் மூல சூஷ்சம்
ஓங்காரப் பிரணவ மூலமா...
சுத்தியான வ..... கிணேசன் வீடு
யாங்கான குண்டலியும் வல்லபை மாயும்

முடிவு :

காட்டிலே அலைவோன் வா..... மெல்லாம்
　　..... ள்ளே சுண்ணாம்பால் பொன்னே யாச்சு
நீட்டயிலே மண்ணும் விண்ணும் ......ன்னாட்
　　சுதியான சாக......லா மிதினா லாமே

காலம் :

இல்லை

குறிப்பு :

இதில் மூலசூத்திரம் மவுனமூலம் அறியும்படி, ஞானமூல சூத்திரர், யோகம், நாத மகிமை, முப்பு வயனப் அறியும்படி, பாத சூத்திரம், பாஷாணகற்பம், வயித்தியம் அறியும்படி முதலியன உள்ளன.

★★★

வரிசை எண் : 2441 சுவடி எண் : 1295-b

## திருமூலர் குளிகைத் திரட்டு

ஏடுகள் : 5(36-40) கி. எண்ணிக்கை : 150 அளவு : 25 × 3½ செ.மீ.
பக்கத்திற்கு : 10—11 ஆசிரியர் : திருமூலர் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்

தொடக்கம் :

அய்ந்து கரத்தனை ...... போற்றுகின்றேனே:

நூல

மூலர் மொழிந்தது முந்திஎண் ணாயிரம்
காலு மொழிந்தது கண்டதய் யாயிரம்
பாலாய் மொழிந்தது பந்திமூ வாயிரம்
சீலர் மொழிந்த திரட்டா யிரமே

முடிவு :

வாறான போக்குக் குளிகைக்கு மந்திரம்
பேறா மெழுத்துப் பெய்வாதி அவ்வு......
...றான லேபன ............... ங்கிலியும்
வீறான அய்யும் வெட்டவெளி மூலமே !

குளிகை

காலம் :

இல்லை

குறிப்பு :

இதில், குளிகை செய்முறை தைலமுறை முதலியன சொல்லப்பட்டுள்ளன.

எண் : 2442 சுவடி எண் : 1295-c

## பிரம முனி சூத்திரம் — வெண்பா

ஏடுகள் : 3 (41-43) கி. எண்ணிக்கை : 50 அளவு : 25 × 3½ செ.மீ.
பக்கத்திற்கு : 10—11 வரிகள் ஆசிரியர் : பிரமமுனி பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஆதியோ டந்தமில்லா தானந்த வெள்ளமே
ஓ............ ............ ............ ............
மண்டலத்தில் வாசி வளரு மயேசனடி
குண்டல... ............... ............

முடிவு :

திசத்துக்கோர் வீரனொன்று சேரப்பா தைலமிதால்த்
திசத்துக்கு வொன்றோடு செந்தூரம் — பசிப்பாண
வேகாத ............ நிறுமிட்டப் பாதங்கமிதிற்
கெற்பம் வேதைச் சரக்கு (?)

சாலம் :

இல்லை

குறிப்பு:

இதில்; முதல் 2 ஏடுகளும் பாதியாக உள்ளன. வெண்பாக்கள் இலக்கணம் சரியில்லை.



வரிசை எண் : 2443 சுவடி எண் : 1295-d

## வாசமுனி சூத்திரம் — 70

ஏடுகள் : 6 (44-49) கி. எண்ணிக்கை 200 அளவு : 25×3½ செ.மீ.
பக்கத்திற்கு : 10—11 வரிகள் ஆசிரியர் : வாசமுனி பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்

தொடக்கம்:

ஆதியும் அந்தமும் அனுபோக வாய்வினில்
மாதொரு பெண்பிள்ளை மாசத்தியாள் மின்னாள்
நீதிப் பராபரை நீதியோன் தங்கையாம்
சோதியில் வந்த சுடரொளி நாதமே ! — 1

முடிவு :

ஒப்பாரு மில்லை ஒளியாகும் நந்தி
செப்பிய வாதந் திறந்தா ரெனவேதான்
அப்பனே வாதஞ் சித்தியா மேஅரு
முப்பூ வழலை சவுக்கார முற்றே ! — 71

வாசமுனி சூத்திரம் முற்றும்.

காலம் :

இல்லை

குறிப்பு :

இதில், கிழிஞ்சி சுத்தி, நாலாந்திரம், ஆகிய தலைப்புகள் உள்ளன.

★ ★ ★ ★

வரிசை எண் : 2444 சுவடி எண் : 1295-e

## அகத்தியர் முன் எண்பது

ஏடுகள் : 15 (50-64) கி. எண்ணிக்கை : 500 அளவு : 25×3½ செ.மீ.
பக்கத்திற்கு : 10—11 வரிகள் ஆசிரியர் : அகத்தியர் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்

தொடக்கம் :

அரன்கயிலை விட்டுநான் தெட்ணத்தில் வந்து
அளவற்ற கோடிசித்தர் முனிவர் ரிஷிகளுமாய்
பரந்ததொரு பொதிகைதனி லிருக்கும் போது
பாடினநூல் வாதமொடு வயித்தி யந்தான்

முடிவு :

அறிந்தறிந்து நூலெல்லா மாராய்ந்து பாரு
காலென்ற கண்ணோக்கிப் பாரு...... நூலைக்
கருத்தறிந்தோற் கெண்பது நாற்ப துந்தான்
கடாட்சமு நூல் முற்றே ! — 80

முற்றும்

முதல் லெண்பது

பரிபூரண தேசிகன் திருவடி வாழ்க

அருணாசலம் - நாகப்பட்டினத்தைச் சேர்ந்த - புத்தூர்.

காலம் :

இல்லை

குறிப்பு :

இதில், முதல் ஏழு ஏடுகள் மிகவும் பொடிபட்டநிலை. அடுத்து, கர்ம நிவர்த்தி தகடு நிதானம், பிணி தீர்க்கிற வயணம், குஷ்டம் வரலாறு, அஷ்ட குளப்பு ரெத்த மூலத்துக்கு முதலியன உள்ளன.

இது, எமது சுவடி எண் 6/3-d/D 1314 போன்றது.



வரிசை எண் : 24 5 சுவடி எண் : 1295-f

## அகத்தியர் பின் — எண்பது

ஏடுகள் : 13/65 7i) கி. எண்ணிக்கை : 500 அளவு : 25 × 3½ செ.மீ.
பக்கத்திற்கு : 10 - 11 வரிகள் ஆசிரியர் : அகத்தியர் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

முன்னூலெண் பதுஞ்சொன்னேன் முதலே காப்பு
மூலத்தில் நின்றகண பதியே போற்றி
பின்னூலெண் பதுஞ்சொல்ல ஆயி காப்பு
பேரான யென்குருவா முருகன் காப்பு

முடிவு :

கோணமென்ன வழலைவிட்டால் ரசவா தந்தான்
குடல்வாதம் பேதமல்லால் குணமா காது
கானமென்ன யிந்தநூல் எண்பதையும் விட்டால்
காசினியில் இவன்யோகி கடந்தான் முற்றே! — 83

காலம் :

இல்லை

குறிப்பு :

இதில், சகல நோய்க்கும் சாந்தி, தாம்பிரபற்பம், சூலைக்கு, குன்ம வாயுவுக்கு அரையாப்புக்கு, பேரண்ட கல்லு பெருமை, வீரக்கல், பூரக்கல், பூநீறு, காச்சுவழலை, வழலைக்குரு, ரசபதங்கம் சகல நோய்க்கும், அரிதார பற்பம் முதலியன உள்ளன.

70-ஆம் ஏடு இரண்டாக முறிந்துளது. இதன் பின்னர் 3 ஏடுகள் வைத்தியம் எழுதியது உள்ளன.

இது, எமது சுவடி எண் 262-a/D 468, எண் 414-a/D 854 போன்றது.



வரிசை எண் : 2446 சுவடி எண் : 1295-g

## அகத்தியர் வைத்தியம் கடைக்காண்டம் — 600

ஏடுகள் : 95 கி. எண்ணிக்கை : 3000 அளவு : 25×3½ செ.மீ
பக்கத்திற்கு : 9—10 வரிகள் ஆசிரியர் : அகத்தியர் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் ;

கருணைதரு ஐயங்கரனே காப்பு கலைவாணி
கலந்தவிந்தச் சூத்திரந்தான் கருவாய்ப் பாட

திருவுமையாள் மனோன்மணிதாய் செப்பக் கேட்டு
தெளிந்தகுரு நூலாகத் திரட்டிப் பாட

**முடிவு :**

உண்டா மெழுநூற் வய்த்தியத்தில்
ஒருக்கஞ் சூத்திரம் எண்ப துண்டு
பண்டாங் குருவோ நூற்றெண்பதில்
பாரு வழலை ......கள்ப துண்டு
வேண்டாம் நூல்க ளிது போது
விடாதே நூல்க ளொருத்த ருக்கும்
கண்டார் அறுநூர் வெளிவி டாதே
கட்சி யெழுதி முகிந்த முற்றே ! — 602

குருகிடாட்ச முன்னிற்கவும்

**காலம் :**

1828

**குறிப்பு :**

இதில், நட்சத்திரம், வாரம், கரணம், பொருத்தம் பார்த்துக் குருமுடிக்க, அப்பிரக செந்தூரம், தீரும் வியாதி, மண்டூரத்துக்குத் தீரும் வியாதி. இஞ்சி லேகியம், சிந்தாமணி மாத்திரை, சஞ்சீவி மாத்திரை முதலியன உள்ளன.

பின்னர் இரண்டு ஏடுகளில் 28-ஆம் செய்யுள் முதல் 43-ஆம் செய்யுள் முடிய நாடி எழுதப்பட்டுளது.

★ ★ ★

**வரிசை எண் : 2447** **சுவடி எண் : 1295-h**

## தன்வந்திரி - சிந்தாமணி நாடி நூல்

ஏடுகள் : 10 கி. எண்ணிக்கை : 200 அளவு : 25 × 3½ செ.மீ.
பக்கத்திற்கு : 10 வரிகள் ஆசிரியர் : தன்வந்திரி பொருள் : நாடிநூல்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

செய்ய மாதுக் கிறையவன்
செ...... மறையுந் துலங்கிய
மெய்யே மாதவர்க் கோதிய
மெய்ப்பொருள் அய்யன்றன் ......ளோதினான்.

முடிவு :

ஓதிய வேதஞ் சொன்ன
உரைவிதிப் படியே யாய்ந்து
மூதுவர் கடாக்கு மிந்த
முனிவரு மருளிச் செய்தார்
நீதிசே ருலகுள் ளோர்க்கு
நிறைசிந்தா மணிவி ளக்கம்
ஆதிநான் முகனு மாலும்
அடிமுடி அளவு முற்றே ! 73

தன்மந்திரி சிந்தாமணி நாடி முற்றும்.

காலம் :

இல்லை

குறிப்பு :

இதில், மூவர் குணம், அசாத்திய நாடி, மரண நாழிகை முதலியன உள்ளன.

இது, எமது சுவடி எண் 186/D 292 போன்றது.



வரிசை எண் : 2448 சுவடி எண் ; 1295-i

## அகத்தியர் முப்பு — 50

ஏடுகள் : 10 கி. எண்ணிக்கை : 200 அளவு : $25 \times 3\frac{1}{2}$ செ.மீ.
பக்கத்திற்கு : 10 வரிகள் ஆசிரியர் : அகத்தியர் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்

தொடக்கம் :

காப்பு

வானும் புவியும் மதியுங் கதிரெ.......ந்
தேனு மந்தச் சிவகுருவைத் ...தானுந்தர
நாலுமறை யாராய்ந்து நன்பு ........யன்பதையுங்
கோலமுடன் கணேசன்றாள் கூறு.

நூல்

மயமான முப்புவின் மார்க்கந் தன்னை
வைத்தியத்துக் ..............

முடிவு :

காலான வைத்தியத்தை யறுதி யாகக்
கைமுறைகள் தப்பாமல் முறையாய்ச் செய்தார்
+ + + + + +

நாலரன மணிபோற்றும் பரமன் சொன்ன
நலமுடைய முனிவன்மொழி நாடி முற்றே! 50

காலம் :

விசைய வருஷம் அற்பசி மாதம் 15-ந் தேதி அகத்தியர் நாயனார் அருளிய முப்பு அன்பது கனகசபை எழுதி நெறவேறினது.

முற்றும்

தேவி சகாயம்

குறிப்பு :

இதில், சுருதிமுறை, முப்புக்குரு, கரியுப்பு, செவ்வுப்பு, பூ நீறுக்குரு, உபதேசம், நூல் விபரம் கர்ந்தம் அயம், கெருட பச்சை முதலியன உள்ளன.

இது, எமது சுவடி எண் 357-b/D 714, எண் 449-e/988 போன்றது.



வரிசை எண் : 2449 சுவடி எண் : 1296-a

# கந்தரனுபூதி மந்திரங்களுடன்

ஏடுகள் : 2 கி. எண்ணிக்கை : 100 அளவு : 26×3 செ.மீ.
பக்கத்திற்கு : 6—8 வரிகள் ஆசிரியர் : அருணகிரிநாதர் பொருள் : இலக்கியம்
நிலைமை ; மிக மிகப் பழுது பின்பகுதி முறிந்துள்ளது முழுமை : முற்றற்றது
எழுத்து : தமிழ்

**தொடக்கம் :**

நெஞ்சக் கனகல்லு னகிழ்ந் துருக
தஞ்சத் தருள்சண் முகனுக் கியல்சேர்
செஞ்ச புனையா லைசிறந் திடவே
பஞ்ச கருவா னைபதம் பணிவாம்

மூலமந்திரம் ஓம் சற அன பவ
ஓம் சவொளியங் ஓம் பரிபுர பவ

**முடிவு :**

கெடுவாய் மனனே கதிகேள் கறவா
திடுவாய் வடிவே லிறைந்தாள் நினைவாய்
சுடுவாய் நெடுவேல் தனைதூள் படவே
விடுவாய் விடுவா வினையா வையுமே !

உரு — 1800
மூலமந்திரம் ஓம் ஆம் மம் நசிநசி
பால்பழம் உளுந்து சுண்டல் பொரி தேங்காய் — 6
துணியா னமனோ சிலைமீ ...........

தாளிச பத்திரி சீரகம் ........ மதுரம் சிறு தேக்கு
கற்கண்டு வகைக்கி பலம் — 1... படி தண்ணீர்

**காலம் :**

இல்லை

**குறிப்பு :**

இதில், 6 பாடல்களே உள்ளன. பின்னர் மந்திரங்கள் உள்ளன. வணங்காத பேரை தண்டிக்க, வாத்துதல், விக்கலுக்கு, வீக்கத்துக்கு, நித்தல் விண்ணப்பம், மாரணம், புலன் புத்தி போதகம் முதலியன உள்ளன.

காப்பேட்டிலும் மந்திரங்கள் உள்ளன.



வரிசை எண் : 2450 சுவடி எண் : 12 6-b

# இராமதேவர் வைத்தியங்கள்

ஏடுகள் : 89 கி. எண்ணிக்கை : 2000 அளவு : 25× செ மீ.
பக்கத்திற்கு : 4—8 வரிகள் ஆசிரியர் : இராமதேவர் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்

**தொடக்கம் :**

அண்டமெனுங் கேசரியாள் பாதங் காப்பு
அருள்பெருகும் பூரணத்தின் அறிவே காப்பு
குண்டமெனும் குண்டலியாள் குறியே காப்பு
குருவான பராபரத்தின் குணமே ...........

**முடிவு :**

ஒண்ணாலே ஒன்னு கொ............
இல்லை இன்றுமே கட்டது
.........யுமில்லை

சாதிக்காய் சாதிப்பத்திரி
கிராம்பு அதிவிடையம்

**காலம் :**

இல்லை

**குறிப்பு :**

தொடக்கத்தில் 'இராமதேவர் கறம் எழுதியது' என்றுளது

இதில், பல பகுதிகள் உள்ளன. வழலைமுறை, ஆதாரப்பேர் முப்பொருளின் விபரம், நாகவேதை, மகார தீட்சை, பஞ்சகர்த்தாக்கள், பஞ்சசத்தி தீட்சை, பதினெண் பேர் மூலம் முதலியன உள்ளன.



வரிசை எண் : 2451

சுவடி எண் : 1297-a

## புலிப்பாணி பல திரட்டு — 100

ஏடுகள் : 16 கி. எண்ணிக்கை : 800 அளவு : $24 \times 4\frac{1}{2}$ செ.மீ.
பக்கத்திற்கு : 13—14 வரிகள் ஆசிரியர் : புலிப்பாணி பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

**தொடக்கம் :**

வேதாந்த நாயகியே விமலி நீலி
வீரமா காளியம்மா ருத்ர ரூபி
நாதாந்தத் துட்பொருளே யகோர வீரி
நாரணியே காரணியே தேவி சத்தி

**முடிவு :**

சொழுந்துபோல் தீபத்தை நோக்கிப் பாரு
கோபமொன்று மாகாது குணமே வேணும்
சேந்திருக்கும் போகருட கிடாட்சந் தன்னை
சேர்ந்திருக்கும் புலிப்பாணி பலதிரட்டு முற்றே ! — 100

சிவகிடாட்ச முண்டாகவும்

**காலம் :**

பிரமாதீச வருஷம் தைமாதம் 29-ந் தேதி கனகசபை எழுதி நிறைவேறினது.

முற்றும்

**குறிப்பு :**

இதில், ரசக்கட்டு, வசிய மை, மறைப்பு திலத மை, அஞ்சனம், மாரணம், பேதனம், வித்துவேஷணம், குறி சொல்ல, மோடி லவண்டை, லேபனம், ஸ்ரீவசியம், காயசித்தி முறை, ரசபற்பம், புருஷ வசியம், மாரணம் முதலியன உள்ளன.

இது எமது சுவடி எண் 196-a/D 313 போன்றது.



வரிசை எண் : 2452 சுவடி எண் : 1297-b

# புலிப்பாணி சாலம் — 200

ஏடுகள் : 29 ( 7—45) கி. எண்ணிக்கை : 1500 அளவு : $24 \times 4\frac{1}{2}$ செ மீ
பக்கத்திற்கு : 13- 4 வரிகள் ஆசிரியர் : புலிப்பாணி பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்

**தொடக்கம் :**

சத்தியமே தயாபரியே ஞான ரூபி
சாம்பவியே மனோன்மணியே மாலி சூலி
முத்தியே வேதாந்தப் பரையே அம்மா
முற்குணமே அறச்சுடரே மாயா வீரி

**முடிவு :**

தாமேநீ நவரெத்தினங் கோத்தாப் போலே
தரணிதனில் தான்விளங்கும் புலிப்பாணி தானும்
நாமேநீ போகருட கிடாட்சத் தாலே
நாயகனே சாலமிரு நூறு மாமே ! — 202

புலிப்பாணியார் அருளிச் செய்த
சாலம் இருநூறும் எழுதி முகிந்தது

முற்றும்

ஸ்ரீ ராம செயம்

குருகிடாட்ச முண்டாக வேணும்

தேவி சகாயம்

**காலம் :**

இல்லை

**குறிப்பு :**

இதில், பாடிய நூல் விபரம், நூல்த் தொகுப்பு, சாலக்காள் பூசை, பச்சைப் பாம்பு அழைப்பு வித்தை, மோதிர வித்தை, குன்றுடைய மூலம், யெக்காளச் சாலம், சலத்தில் சாலம், மாங்கனி சாலம், இந்திர சாலம், செப்படி வித்தை, சண்டை முதலியன எழுதப் பட்டுள்ளன.

இது எமது சுவடி எண் 539/D 1142 போன்றது.

★ ★ ★

வரிசை எண் : 2453 சுவடி எண் : 1297-c

# புலிப்பாணி வைத்தியம் — 500

ஏடுகள் : 61 (46-106) கி. எண்ணிக்கை : 3000 அளவு : 24 × 4½ செ.மீ.
பக்கத்திற்கு : 13—14 வரிகள் ஆசிரியர் : புலிப்பாணி பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்

**தொடக்கம் :**

அண்டரண்ட மாகிநின்ற அரனே காப்பு
ஆனந்த மாகிநின்ற உமையாள் காப்பு
குண்டபெனுங் குண்டலியின் குறியே காப்பு
குமரகுரு வேல்முருகன் பாதங் காப்பு.

**முடிவு :**

இவ்வின்றிட்ட மவையெல்லா ......ச் சொல்லி
இதம்பெறவே செய்குமன்பு அவிழ்தங் கொள்வாய்
கவின்றிட்ட போகருட கடாட்சத் தாலே
............ புலிப்பாணி ஐந்நூறு முற்றே ! — 501

புலிப்பாணியார் வைத்தியம் ஐநூறு

முற்றும்

நாகை - புத்தூர் அருணாசலம்பிள்ளை.

**காலம் :**

இல்லை

**குறிப்பு**

இதில், சுரமாத்திரை, சன்னிக்கித் தயிலம், சூதக வாய்வுக்கு உப்புச் செந்தூரம் பெரும்பாட்டுக்கு, குன்மத்துக்கு, ஒருத்தலை நோவுக்கு, கண்படலத்துக்கு மாத்திரை வாய்ப் புண்ணுக்கு எண்ணெய், முகசன்னிக்கு எண்ணெய் முதலியன உள்ளன.

இது, எமது சுவடி எண் 503/D 1099 போன்றது.

—0—

வரிசை எண் : 2454 சுவடி எண் : 1297-இ

## புலிப்பாணி — 25 சிதம்பர சக்கரம்

ஏடுகள் : 4 கி. எண்ணிக்கை : 100 அளவு : $2 \times 4\frac{1}{2}$ செ.மீ.
பக்கத்திற்கு : 13—15 வரிகள் ஆசிரியர் : புலிப்பாணி பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்

**தொடக்கம் :**

அத்திமதி தனைச்சூடும் அரனே காப்பு
அ.......தெங்கு ......ந்துநின்ற அரனே காப்பு
மூத்திதரும் வேதாந்த முதலே காப்பு
முப்புரத்தைத் தானெரித்த பரனே காப்பு

**முடிவு :**

மாரணந்தான் கடையெழுத்தை மாறதீந்து தாடா
செகமெல்லா மாரண முகத்தானே ! — 25

ஆமடா காரீயத் தான்வசியமா
+ + + + +
வாய்புழுத்து மாண்டு போவார் முற்றே !

**காலம் :**

நாகப்பட்டணத்தைச் சார்ந்த புத்தூரிலிருக்கும் வைத்தியம் அருணாசல பிள்ளை புலிப்பாணியார் சிதம்பரம் பூசை — 25

எழுதி முகிந்தது

முற்றும்

நர்கை புத்தூர் அருணாசல பிள்ளை.

**குறிப்பு :**

இதில், அகர், உகர, மகரத் தன்மை, அவற்றின் பொருள் முதலியன கூறப் பட்டுள்ளன.

வரிசை எண் : 2455

சுவடி எண் : 1297-e

# புலிப்பாணி சிமிள் வித்தை — 25

ஏடுகள் : 4 கி. எண்ணிக்கை : 100 அளவு : 24 × 4½ செ.மீ.
பக்கத்திற்கு : 13—15 வரிகள் ஆசிரியர் : புலிப்பாணி பொருள் : ஜாலம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்

தொடக்கம் :

காப்பென்ன ............ .........க மேழு
கருவான மணி......... கருவி னாலே
தாப்பெ ' ன அன்னாளில் ............ தன்னில்
.....வாக முப்பொலியும் பொங்க விட்டு

முடிவு :

தானென்ற அவருடைய கடாட்சத் தாலே
நாமிருந்தோங் கிரிதனிலே யிருந்து வாழ்ந்தேன்
தேனெ.ற சிமிழ்வித்தை யிருபத் தஞ்சில்
திறமாகப் பாடிவைத்தேன் சித்தி முத்தே ! — 25

குருவே துணை

புலிப்பாணி சிமிழ்வித்தை — 25

முற்றும்

காலம் :

இல்லை

குறிப்பு :

இதில், 18-வது பாட்டு முழுதும் இல்லை,
மோகனம், மாரணம், வித்து வேஷணம் முதலியன பேசப்பட்டுள்ளன.



வரிசை எண் : 2456 சுவடி எண் : 1297-f

## பஞ்சபட்சி — அகத்தியர் கச்சிப் படலம்

ஏடுகள் 13 (115-127) கி. எண்ணிக்கை : 300 அளவு : 4 × 4½ செ மீ.
பக்கத்திற்கு : 13 15 வரிகள் ஆசிரியர் : அகத்தியர் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்

**தொடக்கம் :**

திருமகள் கயிலை வாழுந்
செகந்நாதந் தேவிக் ...........
கருவளர் மா........... ...........
அகத்தியர் அண்டம் பாட
மருமக ளான சோதி
மலர்த்திருப் பாதம் போற்றி
உருவில்லான் அருவ மில்லாவ
உமைமகன் காப்புத் தானே !

**முடிவு :**

தோஷமடா கொண்டுவா சுவாமி யாணை
சொல்லடா கருத்தவடச் சுருக்கு மெத்த
தோஷமடா யிம்முறையை வெளிவி டாதே
சூத்திரந்தான் நூத்திருபத் தஞ்சு முற்றே !

பொதிகைச் சாமி துணை.

நாகை, புத்தூர் அருணாசல பிள்ளை
பஞ்சபட்சி கச்சிப்படலம் 125-ம்

எழுதி முகிந்தது
முற்றும்

**காலம் :**

இல்லை

**குறிப்பு :**

இதில், பீசவங்க், 51 லேக்கம், மந்திரக்ஞானம், மாரணம், அஷ்டப்பு, மந்திரந் தானம், வசியம், வயிரவன் முதலியன உள்ளன.

இதன் பின்னர். சூடன் வைப்பு, கருவங்க பற்பம் எழுதிய ஏடு ஒன்று உளது.

★ ★ ★

வரிசை எண் : 2457 சுவடி எண் : 1297-g

# நொண்டிச் சிந்து

ஏடு : 1 கி. எண்ணிக்கை : 25 அளவு : 24×4½ செ.மீ.
பக்கத்திற்கு : 15 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்

**தொடக்கம் :**

புன்னாக வராளி

தனனாதன தனனாதன தனன தனன தனதனனா
தடநெ......... சூழயுந்த தாரணி தனி.........
மானிடர்க்குள் கொட்டியக்கும் பிணிக ளெல்லாம்
சு.............. .............. ..............

**முடிவு:**

குதிரைவலியொடு குமரகண்ட வலி
கண்டத்து மாலைகளும் நாய்க்கடி யெலிக்கடி
வல்லிப் புருதிவகை பெருசுரம் பித்தம்
தொடைவாளை கரப்பன் மதுமேகம்
தொகையுள்ள வியாதி யெல்லாம் இதோ
சொல்லாம லோடுமே யுன்னாணை
தனன தன்னா தனா தன்னா.

**காலம் :**

இல்லை

**குறிப்பு :**

இதில், சண்டமாருதக் குடோரி, செந்தூரம், லிங்கம் முதலானவைகளைக் கொண்டு செந்தூரம் செய்தல், அதனால் தீரும் வியாதிகள் முதலியன கூறப்பட்டுள்ளன.

இதன் பின்னர், சாதகம் எழுதிய ஏடு ஒன்று உளது. மற்றோரேடு சோதிடம் உள்ளது.



வரிசை எண் : 2458 சுவடி எண் : 1298-அ

## கொங்கணர் கடைக்காண்ட சூத்திரம் — 60

ஏடுகள் : 8( 15-122) கி எண்ணிக்கை : 400 அளவு : 29×4செ.சமீ.
பக்கத்திற்கு : 11 –12 வரிகள் ஆசிரியர் : கொங்கணர் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

**தொடக்கம் :**

ஆதியந்தங் கடந்துநின்ற பூரணத்தைப் போற்றி
அம்மானொடு மூலத்தில் கிணேசன்பாதம் போற்றி
பாதியிந்து மலர்நடந்த மூலர்பாதங் காப்பு
பரமாக அடியிருந்த போகர் காப்பு.

**முடிவு ;**

உள்ளமடி முப்பாழுக் கப்பால் நின்ற
ஓகோகோ சுருதிமுடிந் திட்ட வாறு
வள்ளலே பூரணத்தின் தீட்சை யாச்சு
வகையறிந்து யான்சொன்னேன் கடைதான் முற்றே ! — 61

கொங்கண நாயனார் கடைக்காண்ட சூத்திரம்

முற்றும்

ஸ்ரீ நாகை-புத்தூர் வைத்தியன் அருணாசல பிள்ளை

எழுதி முகிந்தது முற்றும்

குரு கிடாட்ச முண்டாகவும்

**காலம் :**

இல்லை

**குறிப்பு :**

இதில், தம்பனம், மோகனம் வசியம், ஆகிருஷணம், பேதனம், முதல் தீட்சை, இரண்டாம் தீட்சை, சதாசிவ தீட்சை முதலியன உள்ளன.

இதன் பின்னர், 'வாசி சூட்சம்' என்ற தலைப்பில், மந்திரங்களும், சக்கரமும் சுப்பிரமணியர் தியானமும் உள்ளன,

இது, எமது சுவடி எண் 234-o/D 387, எண் 721/D 1415 போன்றது.

★★ ★

வரிசை எண் : 2459 சுவடி எண் : 1298-b

# தன்வந்திரி முப்பு — 48

ஏடுகள் : 6( 09-114) கி. எண்ணிக்கை : 300 அளவு : 29 × 4 செ.மீ.
பக்கத்திற்கு : 12—13 வரிகள் ஆசிரியர் : தன்வந்திரி பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

சீரான தேவியுமை வாலை தேவி
சிறப்பான என்சிரசில் வைத்துச் சொல்வேன்
ஆறான உமைதேவி பாதங் காப்பு
அன்பான கரிமுகவன் பாதங் காப்பு
வாரான சண்முகவர் பாதங் காப்பு
வளர்ந்ததொரு மூவருட பாதங் காப்பு
காரா~ யென்குருவின் பாதங் காப்பு
கணக்கான அண்டபிண்டத் தாதி காப்பே ! — 1

முடிவு ;

வல்லாட்டால் குருவிதுதான் யின்னூல் மைந்தா
வகையாகத் தோணுகிற வகையி தாகும்
மல்லாட்டால் என்னூலைப் பூசை பண்ணு
மகாகோடி வேதையிதி லாகு முற்றே ! — 48

தற்மந்திரி முப்பு நாற்பத்தெட்டு
நாகை-புத்தூர் அருணாசல பிள்ளை எழுதி முகிந்தது.

முற்றும்

காலம் :

இல்லை

குறிப்பு ;

இதில், சிவமுப்பு, முப்புவைக்கும் நாள், பூருவ முப்புச் சுன்னம், அண்டச் சுன்னம், அண்ட பிண்ட சுத்தி, பூநீறு சேர்க்கும் வகை முதலியன உள்ளன.

வரிசை எண் : 2460 சுவடி எண் 1298-c

# தன்வந்திரியார் நிகண்டு

ஏடுகள் : 40 கி. எண்ணிக்கை 1500 அளவு : 29 × 4 செ.மீ.
பக்கத்திற்கு : 10—11 வரிகள் ஆசிரியர் : தன்வந்திரி பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்

**தொடக்கம் :**

(படித்தறியுமாறு இல்லை)

**முடிவு :**

காமப்பா கல்வியது யெல்லாந் தோணுங்
கனமான யென்னூலைக் கைவி டாதே
நாமப்பா முன்னூறும் பாரு பாரு
நலமான கருக்கிடை நிகண்டிதுதான் முற்றே! — 302

குருகிடாட்ச முண்டாக வேணும்

மனோன்மணி யம்பாள் துணை

நாகை புத்தூர், வயித்தியம் அருணாசலம்
தற்மந்திரியார் நிகண்டு முற்றும்

இதை, எடுத்தவன், பார்த்தபேர், திருடினபேர், வாங்கினபேர், அசதி மறதி யிருந்தபோதிலும், இது இன்னாருட வென்று தெரிந்தபோதே என் வீட்டில் கொண்டுவந்து குடுக்கவும். இல்லாவிட்டால் காசநோய் கொண்டு தீராத வியாதியிலும், நரக வேதனையா(கி) வம்மிசம் நாசமாய்ப் போய்விடுவார்கள்.

**காலம் :**

இல்லை

**குறிப்பு :**

இது, எமது சுவடி எண் 248-f/D 437 'தன்வந்திரி நிகண்டு - 300' போன்றது

இதன் முற்பகுதி மிகவும் பழுதுபட்ட நிலையில் உள்ளது. இதில் முப்புவழலை, முப்புவறிய முதலான செய்திகள் உள்ளன. வாசித்தறிதல் கடினம்.

வரிசை எண் : 2461 சுவடி எண் :1298-d

## (தன்வந்திரி) சகல கலைக்கியானம் — 500

ஏடுகள் : 65 கி. எண்ணிக்கை 3500 அளவு : 29×4 செ மீ.
பக்கத்திற்கு : 10—12 வரிகள் ஆசிரியர் : தன்வந்திரி பொருள் : மருத்துவம்
நிலைமை : பயனற்ற நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்

**தொடக்கம் :**

.........நின்ற பூரணமாய் வெளியாய் நின்ற
அகண்டபரி பூரணத்தி னருளே காப்பு
வாதியென்ற வல்லபையின் அருளே காப்பு
வளமான கெசமுகவன் பாதம் போற்றி

**முடிவு :**

கேளப்பா யின்னூலில் வெளியாய்ச் சொன்னேன்
கெடியான மறைப்பெல்லாம் வெட்டவெளி யாகும்
ஆளப்பா யின்னூலைக் குகையில் வைத்து
அப்பனே பூசைசெய்து அர்ச்சனைகள் செய்து
வாளப்பா மதியமுர்த மனதால் கொள்ளு
வளமான ரேசகத்தா யின்நூல் பூசி
னாளப்பா பூசைசெய் பணிந்து போற்று
நலமாக இந்நூலைச் சார்வாய் முற்றே ! — 503

ஹரி ! ஓம்

பரிபூரண தேசிகன் திருவடியே துணை

**காலம் :**

இவை, ஸ்ரீ நாகை-புத்தூர் வயித்தியசிகாமலனி மாரியப்பிள்ளை குமாரன் அருணசலபிள்ளை குமரான், பெரிய அண்ணாபிள்ளை குமாரன் வயித்தியம் வாதி அருணாசலபிள்ளை தன்மந்திரியார் சகல கலைக்கியானம் அஞ்நூறு எழுதி முகிந்தது.

முற்றும்

அருணாசலம் நெட்டெழுத்து

தெட்சணாமூர்த்தி துணை

ஆகவிருத்தம் — 503

குறிப்பு :

இது, மிகப்பழுதுபட்டுளது

இதில், சத்திமுப்பு, நாற்பத்து முக்கோணம், சூத செந்தூரம், கெவுரி சவுக்காரம், சாலத்தயிலம், காரக்கட்டு அண்டச்சுன்னம் ரசவெள்ளி, கெந்தி மெழுகு, அயச்செம்பு, நாகக்கட்டு, வினோதச் சிந்து சகலநோய்களுக்கும் அவிழ்தம் முதலியன உள்ளன.

★ ★ ★ ★

வரிசை எண் : 2462 சுவடி எண் ; 1298-e

## தன்வந்திரி பாலவாகடம் என்னும் சிமிட்டு ரெத்தினச் சுருக்கம் -- 360

ஏடுகள் : 35 கி. எண்ணிக்கை : 2000 அளவு : 29×4 செ.மீ
பக்கத்திற்கு : 10—12 வரிகள் ஆசிரியர் : தன்வந்திரி பொருள் : மருத்துவம்
நிலைமை ; மிக மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்

தொடக்கம் :

கெசமுக னடிவ ணங்கிக்
கேசரப் பொருளைக் கண்டு
வசமென வறிவிற் பூண்டு
வகையுறச் சிசுவின் ரோகம்
கசைவறக் கனிவ தாக்கக்
கண்டுநா னுரைக்க வேண்டி
(தி)சைமு(னி) யருளை நோக்கித்
திகழ்மலர் போற்றி னேனே ! — 1

முடிவு :

சத்திய மாகநாம் சத்திய முன்னூற்
சத்திய மென்ன சஞ்சய மற்றிடும்
சத்திய மின்னூல் சமிசல மில்லைத்தான்
சத்திய வயித்திய ரத்தின முற்றே ! — 361

சிமிட்டு ரெத்தினச் சுருக்கம்

முற்றும்

காலம் :

இவை, நாகை புத்தூரிலிருக்கும் மகாராஜ ஸ்ரீ பெரியநாயகபிள்ளை குமாரர், வயித்திய சிரோமணியாகிய அருணாசலபிள்ளை எழுதி முகிந்தது

முற்றும்

யிபா வருஷம், கார்த்திகை மாதம் 9-ந் தேதி

குறிப்பு :

இதில், கருங்கிரந்தி, செங்கிரந்தி மூணுமாத மிருக்கும் அதற்கு எண்ணெய் சூலி கணம், கரப்பான் கணம், ஷெ கணத்துக்கு எண்ணெய், முக்கு கணம், ஷெ கணத்துக்கு எண்ணெய், ஊது மாந்த கணம், சிங்கி மாந்த கணம், கணத்தின் குணம், தேரை கணம், மூலக்கணம், ஷெ கணத்துக்கு கிருதம், மாந்த குணம், மாந்தத்துக்கு ரசகற்பூரக் குளிகை, மலவாத குணம், யோகக் குறியறிய, திரிலோக செந்தூரம் முதலியன உள்ளன.



வரிசை எண் : 2463 சுவடி எண் : 1298-f

## தன்வந்திரி சூத்திரம் இருபத்தைந்து

ஏடுகள் : 4 கி. எண்ணிக்கை : 200 அளவு 29 × 4 செ.மீ
பக்கத்திற்கு : 10—12 வரிகள் ஆசிரியர் : தன்வந்திரி பொருள் : மருந்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்

தொடக்கம் :

சீர்கொண்ட கரிமுகமும் ஐந்துகையும் சேர்ந்த
ஆவரண முடன்ஒத்தக் கொம்பு .........
......... .........க்குக் கலிதான் தீர்த்த
வேலனுக்கு முன்பிறந்தோ னமரர் மெச்சும்
பேர்கொண்ட ............

முடிவு :

ஆதியிலே தன்வந்திரி தெலுங்காய்ச் சொன்னேன்
அரும்பொருளை உலகத்தோ ரறிந்து கொள்ள
பாதிமதி சடையணிந்தோன் பாதம் போற்றி
பழுதில்லாத் தமிழினாற் பாடலானும்

சாதிப்பார் வல்லவர்கள் பாதம் போற்றி
சந்தேக மில்லாமல்ப் பார்த்துச் சொன்னேன்
வாதிகளே காமப்பால் விரைக்க வேண்டாம்
வஞ்சகமாய்ப் பேசாத யிருபத் தஞ்சே ! — 26

முற்றும்

நாகை-புத்தூர் அருணாசலபிள்ளை எழுதி முகிந்தது

முற்றும்

**காலம் :**

இல்லை

**குறிப்பு:**

இதில், தங்கச் சுன்னம், ரசக்கட்டுக் குளிகை, சவுக்காரச்சுன்னம், கருவங்கச் சுன்னம், நிமிளைச் சுன்னம், கல்லுப்புச் சுன்னம் முதலியன உள்ளன.



வரிசை எண் : 2464 சுவடி எண் : 1298-g

## அகத்தியர் சதகம் 800 - க்குச் சூத்திரம் - 100

ஏடுகள் : 13 கி. எண்ணிக்கை : 790 அளவு : 29×4 செ.மீ.
பக்கத்திற்கு : 11—12 வரிகள் ஆசிரியர் : அகத்தியர் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

**தொடக்கம் :**

### பஞ்சப் பூதப் பிறப்பு

அருவுருவாய் ரூபமுமாய் அடங்காத பொருளாகி
அடங்கலாகி
மருவுருவா மண்டபகி ரண்டத்துக்கு மப்புரத்து
மாகிநின்ற அண்டந் தானுமாய்
ஒருவுருவா யுயிர்க்குயிராய் உயிரில் நிறைந் தியங்கி நிற்கு
மொப்பில்லானை
கருவுயிரா வயித்தியத்தின் சதகமதை வழுத்தல் நீ
காப்பதாமே ! — 1

முடிவு :

பொருந்தியதோர் சதகமெண் ணூறுஞ் சொல்லப்
    புகழ்பெரிய நிகண்டுந்தொல் காவியம் பூரண
மருந்துறுஞ்சொற் காரிகை நன்னூல் சிறுநூல்
    ஆனவுரிச் சொல்நேமி நாதத் தோடு
வருந்திரமாம் பாடியல வம்மெழுத்துச் சோர்வு
    வடிமடிச்சீர் பொருந்தவிதி யலங்கா ரச்சொல்
திருந்த அறி(?) யே னுரைத்தே னறிவுள் ளோர்கள்
    சரிபார்த்துக் கொள்வதுங்கள் சிறப்புத் தானே ! — 80

காலம் :

இல்லை

குறிப்பு :

இதில், தத்துவம் 96-ம் அறிய, திசவாயுவு, பித்தநிலை அறிய, பித்தத்தில் வாதம் பித்த சிலேற்பன தாது குணம், வாதத்தில் உஷ்ணம் சேர்ந்தால், மாதக்குறி, நாடி தெரியாத பேர்கள் முதலியன உள்ளன.

தலைப்பு 100 பாடல்கள் இல்லை யாயினும் 80-ஆம் பாட்டு முடிவதுபோல் உள்ளது.

★ ★ ★

வரிசை எண் : 2465 சுவடி எண் : 1298-h

## தெட்சிணாமூர்த்தி கைபாக சாத்திரம்

ஏடுகள் : 25 கி. எண்ணிக்கை : 1300 அளவு : 29×4 செ.மீ.
பக்கத்திற்கு : 10—12 வரிகள் ஆசிரியர் : தெட்சிணாமூர்த்தி பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்

தொடக்கம் :

சாதிலிங்கச் செந்தூரம்

ஆதியந்த மிகநிறைந்த பாதங் காப்பு
    அகண்டபரி பூரணமே நித்தங் காப்பு
சோதியந்தத் துள்ளிருக்கும் பொருளே காப்பு
    சொல்லாத மவுனமே நித்தங் காப்பு

வாதியென்று வய்யகத்தில் பொருளாய் நின்ற
வாலைமனோன் மணியினுட பாதங் காப்பு
ஆதியென்று மூலத்தி லுதித்து நின்ற
ஐந்துகரன் வல்லபையுங் காப்புத் தானே !

முடிவு :

முழுகியபின் புளிப்புகையைக் கூட்டச் சொல்லு
முக்கியமாய் நெய்யெண்ணெய் முழுகச் சொல்லு
யௌகியதோர் தேகமெல்லாம் இறுகிப் போகும்
யிதமாகக் கண்ணுக்குத் தெளிவு காணும்
சலுதியாத் தீருமடா வியாதி யெல்லாம்
சண்டாளப் பாவிகட்குத் தர்ம மில்லை
பழகியதோ ரறிந்தமுறை வெளியில் சொன்னால்
சாபமவர் சாவிப்பார் சித்தர் தானே — 188

காலம் :

இல்லை

குறிப்பு :

இதில், கருவங்கச் செந்தூரம், தாம்பிரபற்பம், சுவாச காசத்துக்குத் திரி, குட்டம் 18-க்கும் அவிழ்தம், குட்டத்துக்கு வேது காட்ட, உகமைச் சொல், லேபனத்துக்கு தேள் விஷத்துக்கு, ஷிக்கு மந்திரம், ரசப்பதங்கம், அயபற்பம், பித்த வெட்டைக்கு பூரணசந்திரோதயம் முதலியன உள்ளன.

* * *

வரிசை எண் : 2466

சுவடி எண் : .298-

## தன்வந்திரி வைத்தியம்—208

ஏடுகள் : 27 கி. எண்ணிக்கை : 1500 அளவு : 29×4 செ.மீ.
பக்கத்திற்கு : 10—12 வரிகள் ஆசிரியர் : தன்வந்திரி பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஆதியந்த மில்லாம லகண்டபரி பூரணமாய்ச்
சோதியந்த வாழ்மயிலே சொற்பெரிய சோதியைக்கேள்
னாதியந்த மான நல்லதொரு சரகபதியை
னாதியெத்தன் பங்கிலுறை வாழ்வே அனாதியென்று — 1

முடிவு ;

பாரப்பா நால்வேதத் தொகுப்பைக் கேளு
பண்பான வேதாந்த குறியைக் காணு
ஆரப்பா வாசியுட குறியைக் காணு
அப்பனே கண்ணோட்ட மறிந்து பாரு
நேரப்பா நின்றநிலை தன்னைக் காணு
நேரான கருவிகளோ டொக்கக் காணு
நாரான நாதாந்த வயித்தியந்தா னின்னூல்
நலமான கருக்கிடைதா னிறைநூர் முற்றே ! — 208

ஹரி : ஓம்

பரிபூரண தேசிகன் துணை

நாகப்பட்டணத்தைச் சேர்ந்த புத்தூரில், கனம் பொருந்திய நந்திகேசுபரர் வங்கி ஷெத்தில், வருணகுலந் தரசில் வயித்தியன் பெரியநாயகபிள்ளை குமாரன் அருணசலம்: தன்மந்திரி பகவான் வாக்கியம்

வயித்தியம் 208 எழுதி முகிந்தது வேணும்
முற்றும்
அருணாசலபிள்ளை நெட்டெழுத்து
வாங்கினபேர் மறந்திருந்தாலும் கொண்டு வந்து குடுக்கவும்
இல்லாவிட்டால் நரகமுண்டு

காலம் :

இல்லை

குறிப்பு ;

இதில், வயித்திய வழலை முப்பு, இன்னூலில் சொன்ன மருந்துக்கு குருசேர்க்க, சொர மாருத மாத்திரை, குங்குமக் குளிகை, வயிரவ மாத்திரை, சஞ்சீவிக்குளிகை. கிரந்திக்கு பூரமாத்திரை, அமுர்தாதி கலிக்கம், மேக ராசாங்கத் தெண்ணெய், பெரும் பாட்டுக்கு எண்ணெய், குட்டத்துக்கு எட்டிவித்துத் தயிலம் முதலியன உள்ளன.



வரிசை எண் : 2467 சுவடிஎண் ; 1299

## மச்சமுனி — 800

ஏடுகள் : 168 கி. எண்ணிக்கை ; 7000 அளவு : 27×4 செ.மீ.
பக்கத்திற்கு : 8—10 வரிகள் ஆசிரியர் : மச்சமுனி பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்

தொடக்கம் :

வாக்குண்டாம்........... தமக்கு
வெள்ளைக்கலையுடுத்து........... தாய்

நூல்

மதித்திருந்த ஞானவெளி நித்தங் காப்பு
வாலை......... ......... ......... .........
............ தலைவ......... லைம்பூதங் காப்பு
தி......... .........நாலு வேதங் காப்பு

முடிவு :

வித்தகத்தோன் பாதத்தாணை வெளிவிடாதே
வேதாந்த மனோன்மணித்தாய் பாதத் தாணை
சித்தருக்கா மிந்தஎண்ணூர் பெருநூ லப்பா
சிவஞானம் தங்குகின்ற பெரியோர்க் காகும்
மத்தொருத்த ரின்னூலைப் பதனம் பண்ணி
வைத்தாலும் வாதமுறை வாய்க்கும் வாய்க்கும்
பத்தருக்குப் பாடிவைத்தேன் அதிக மெட்டான்
பரிவான பெருநூல் மெய்ஞ் ஞான முற்றே ! — 801

குருவே துணை

மனோன்மணி லட்சிக்க

காலம் :

(முன் ஏட்டில்)

995–ம் வருஷம் ஆவணி மாதம் 1-ந்தேதி ஞாயிற்றுக்கிழமையும் நசமியும் மிருகசீரிஷ நட்சத்திரமும் கன்னியா லக்கினமும் கூடிய சுபயோக சுபதினத்தில் மச்சமுனி எண்ணூறு எழுத ஆரம்பித்து 995-ம் வருஷம்......... மாதம்......... தேதி எழுதி முகிந்தது.

(கடைசி ஏட்டில்)

995, அற்பசி மாதம் 3-ந்தேதி பூருவ பட்சத்து உத்திரட்டாதி நட்சத்திரத்தில் சுக்கிர வாரம் அன்று சுவடி எழுதி முடிந்தது.

முற்றும்

இந்தச் சுவடி நீடூழி வாழ்க

குறிப்பு :

இதில், சில ஏடுகளில் வரிகள் அழகாக எழுதப்பட்டுள்ளன. வரிகளின் எழுத்துக்கள் ஒன்றின் கீழ் ஒன்றாக எழுதப்பட்டுள்ளன. உதாரணம் கீழே தரப்பட்டுளது.

இதில், வசியத் தகடு, மோகனம், சுர மாத்திரை, சன்னி 13-க்கும், வாடை மருந் தீடு, அஞ்சன மை, பாஷாணக்கட்டு, திருட்டுத்தனம் காண, யோடி மந்திரம் முதலியன உள்ளன.

இது, எமது சுவடி எண் 325/D 646ன் வேறாயது.

எட்டெண் 28

ளி ச மெ டு த் து ............
ரு ந் தா ன் பா ............
த ய ம ய ம் மெ ............
க் கு ம் பா ரு ெ ............
பா ம வ ரை க் ............

இவ்வாறு எழுதப்பட்டுள்ளன.

★ ★ ★

வரிசை எண் : 2468 சுவடி எண் : 1300

## பிரம்ம முனி நாயனார் — 700

ஏடுகள் : 7 கி. எண்ணிக்கை : 250 அளவு : 36 × 3 செ.மீ
பக்கத்திற்கு : 7—8 வரிகள் ஆசிரியர் : பிரம்மமுனி பொருள் : மருத்துவம்.
நிலைமை : மிகப் பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்

தொடக்கம் :

### பீனிசத்துக்குத் தயிலம்

வயித்தியனை ஏதோவென்று யியம்பாதே அவன்
சொன்னபடியே கேட்டு அவிழ்தங் கொள்ளே
கொள்ளவே பத்தியந்தான் தவறி விட்டால்
கொடிதான நோய்பிணிகள் தீரா தென்று

முடிவு :

இது சாப்பிடும்போது ராத்திரிபோகம், மீன், கருவாடு
பாவக்காய், அவுத்திக் கீரை, பரங்கிக்காய் இன்னும்
சில வாய்வு பண்டங்களைத் தள்ளிவிட்டு, வெள்ளாட்டுக்
கறி கத்தரிக்காய், முருங்கக்காய், பருப்பு, நெய்
மோர், தயிர், இதுகள் சாப்பிடலாம்
இச்சாபத்தியம், படுக்கை உதவாது.

காலம் :

இல்லை

குறிப்பு :

இதில் 4, 6, 8, 9, 13, 16, எண்ணில்லாத ஒரு ஏடு ஆகியவைகளே உள்ளன உதிரி ஏடுகள் போல் காணப்படுகின்றன.

இதில், சூடு காங்கை, கண்புகை சலநீர்ப் பாய்ச்சல், தலையில் வாய்வு, வெள்ளை மூத்து, இதுக்குப் பொன்னாங்காணி, சூதபற்பம், தறாபற்பம், முப்புக்கு சுன்னமார்க்கம் முதலியன உள்ளன.

★ ★ ★

வரிசை எண் 2469 சுவடி எண் : 1301

## கொங்கணர் கடைப்பிள்ளை தண்டகம்

ஏடுகள் : 15 கி. எண்ணிக்கை : 450 அளவு : 19×3 செ.மீ.
பக்கத்திற்கு : 9—10 வரிகள் ஆசிரியர் : கொங்கணர் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்

தொடக்கம் :

அண்டமெனும் ஏமகூட மலையில் வாழும்
ஆதிநந்தி கைலாச மூலர் போகர்
எண்டிசையும் நடனமிடும் சிலப்பொலியைக் கண்ட
ஏகாந்த கொங்கணவர் பாதம் போற்றி

முடிவு

ஓமப்பரி குண்டலியைக் கண்டு தேறி
உள்ளாடும் வாசியைநீ உகந்து நின்றாய்

நாமப்பா சொல்லுகிறோம் மணவினை ரெண்டும்
நாட்டமாய்க் கண்டுகொள்ளு ஆதி யந்தம்
தாமப்பா தன்னிலையே தானாய் நின்றால்
சதாகாலம் பூரணத்தில் சார்வாய் முற்றே! — 51

குருபாதமே கெதி

காலம் :

இல்லை

குறிப்பு :

இதில், குருவைக் கேழ்க்கிறது, வசியம், மாரணம், பெண்களுக்குப் பிள்ளை யுண்டாக, வீரிய புஷ்டிக்கு, வெள்ளைசாரை முதலியன உள்ளன.



வரிசை எண் : 2470 சுவடி எண் : 1302

## கம்பளிச்சட்டை கயிலாசநாதர் சின்மய சச்சுதானந்தர் நிகண்டு

ஏடுகள் : 188 கி. எண்ணிக்கை 5000 அளவு : 33×4 செ.மீ
பக்கத்திற்கு : 9—10 வரிகள் ஆசிரியர் : கம்பளிச் சட்டை கைலாசநாதர்
பொருள் : மருத்துவம் நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றற்றது
எழுத்து : தமிழ்

தொடக்கம் :

........டபின் துறைதொறும் அண்டபிண்ட மெல்லாம்
குறிக்கிவிக ......... .. நீட்டிவிக்குங் குறையொன்றில்லை
யாட்டபின்பு வாதமென்ற வெண்ணைத் தொட்டு

முடிவு :

பூட்டினேன் வாதத்தில் ........... .........ன்ன
புகழான இருபத்து அஞ்சும் அங்கம்
ஆட்டினேன் பலநூலி லில்லை யில்லை
யாச்சரியம் நிகண்டினுட ............ கேளு
நீட்டினே னாயிரத்தி யிருநூ றுந்தான்
தேரான நிகண்டிநுட கடைதான் முற்றே! — 1224

தொடக்கம் :

இரணங்களுக்கு ஆர்கோதாதி எண்ணெய்

ஆலப்பட்டை அரசன் பட்டை
அத்திப்பட்டை சிச்சி ..............
புண்ணை ய விருச்சப் பட்டை உதியம்பட்டை
கிளுவன் .. ............ ......... வேர்ப்பட்டை

முடிவு :

சிவமயம் : ருத்ர பஞ்சாட்சரம்

காலனை வெல்ல............ .........
ஓம் சிவாய. அப்பிரம் பஞ்சாட்சரம்
வாணி லாபமுண்டா ............
ஓங்கிலியும் ஓம் நமசிவாய

காலம் :

இல்லை

குறிப்பு :

இதில், பிள்ளையில்லா மலட்டுக்கு, ஏழுவகை தோஷத்துக்கும் சதை அடைப்புக்கு கல்லு தெரிக்க, விரை வாதத்துக்கு மோகனம், வாள்வு, வசீகரம், பஞ்சதீபாக்கினி லேகியம், பிள்ளைபெற மாட்டாதவளுக்கு, மாசுவிழ, செத்த பிள்ளைவிழ, செய்வினைக்கு, பாம்பு கடித்து அடக்கமானால் மருந்து, சந்தேகம் தெளிந்த படலம், குரு உபதேசம், குதிரைக்கு சூலைக்குட்டுக்கு, குதிரை கரிமசால் முதலியன உள்ளன.



வரிசை எண் : 2531 சுவடி எண் : 1325-a

## மணி மந்திர வைத்திய சேகரம்

ஏடுகள் : 248 கி. எண்ணிக்கை : 2500 அளவு : 27×3 செ.மீ.
பக்கத்திற்கு : 3—5 வரிகள் ஆசிரியர் : பதிணெண்பேர் பொருள் : மருத்துவம்
நிலைமை : பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஆனந்த குருவு மாகி
அருள்சதா சிவனு மாகி
தானந்த விஷ்ணு வாகி
சதுர்முக பிர்மா வாகி
மோனந்த யானை யான
முக்கண்ணன் பாதம் போற்றி

வாணி துணை

ரெங்கசாமிக்கவுண்டன்

விநாயகர் காப்பு

அணியாம் பதினெண்பேர் அறைந்தநூ லாய்ந்துமே
மணியா மணிமந்த்ர வைத்திய சேகரம்
துணியாய்ப் பல்லோர்க்குந் துளங்கிடவே நாளுமே
கணியா யுரைத்திடக் கரிமுகவன் காப்பதாம் !

முடிவு :

சீந்தில்கொடி வகைக்கு பலம் 4, மிது வகைகளை
எட்டொன்றாய்க் கஷாயம் 3 நாள் 6 வேளை
சாப்பிட இச்சா பத்தியம் சகலசுரமுந் தீரும்

மணிமந்திர வைத்திய சேகரம்

முற்றிற்று

மீனாட்சி துணை

காலம் :

முதல் ஏட்டில் :
யுவ வருசம் புரட்டாசி மாதம் 19-ந் தேதி எழுதி முடிந்தது
யாரும் பார்த்து கொடுக்கவும், இல்லாவிட்டால் பாவம்

ரங்கசாமி கவுண்டன்

குறிப்பு :

இதில், வயித்திய ரியல்பும் குறியும் வியாதியின் வரலாறு, வாதத்தின் தொழில், பித்தத்தின் தொழில், நாடி பார்க்கும் விதி, தோச நாடிகள் கூறுகின்றன, ஸ்பரிச லட்சணம், லிங்கசுத்தி, வீரசுத்தி, சூடாமணி மாத்திரை, முத்து பற்பம் முதலான பல பயனுள்ள தலைப்புகள் உள்ளன. மிகச் சிறந்த சுவடியாகக் கருதப்படுகிறது. கடைசி பக்கத்தில் 'கருவங்க பற்பம்', நந்தீசர் ஞானம் எழுதப்பட்டுள்ளன.

★ ★ ★

வரிசை எண் : 2532 சுவடி எண் : 1325-b

# விஷ்ணு சக்கரம் முதலியன

ஏடுகள் : 9(260-267) (இரண்டு பக்கமும் எண்கள் உள்ளன) கி எண்ணிக்கை :300
அளவு : 27 × 3 செ மீ பக்கத்திற்கு : 5—7 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை
பொருள் : மந்திரம் நிலைமை : பழுது முழுமை : முற்றுமுளது
எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

விஷ்ணு சக்கரம்

ஆதி பிந்து சாதிலிங்க மான தோறு நாயுரியும்
சோதிமூலா தாரமுந் துலங்குகாந்த மனோசிலை
நீதி நிபபச் சாறுவிட்டு நேறுங் குன்றிடை நேரிடை
பாதி 2மனி யாயிருந்த பாரளந்த சக்கரம்.

முடிவு :

சாரம் விராகனிடை போட்டு வென்னீர் சீக்காயிட்டு முழுகவும் முழுகின தினம் நித்திரை, வெய்யல், புகை, புளி, ஸ்திரீ போகமாகாது. கவுரியம் மன் பூசை செய்யவும். இது கை கண்டது.

சிவமயம்

வெற்றிவேலுற்றதுணை

காலம் :

இல்லை

குறிப்பு :

இதில், விஷ்ணு சக்கரம், 1 பக்கத்துடன் முடிகிறது. தொடர்ந்து விநாயகர்பூசை எந்திரம், 12 வருஷத்துக்கு பாலகிரக தோஷ சக்கரம், சர்வ தோஷ நிவர்த்தி சக்கரம், சுளுக்கு மந்திரிக்க தியானம், கட்டியுடைய, மந்திரிக்க, வேப்பிலையடிக்க தியானம் முதலியன உள்ளன.

ஏட்டின் இரு பக்கங்களிலும் தொடர் எண்கள் உள்ளன.



வரிசை எண் : 2533 சுவடி எண் : 1325-C

# சட்டமுனி கற்பவிதி முதலியன

ஏடுகள் : 6 (268-ம் பக்கம் முதல்) கி.எண்ணிக்கை : 200 அளவு : 27 × 3 செ.மீ. பக்கத்திற்கு : 6—7 வரிகள் ஆசிரியர் : சட்டமுனியார் பொருள் : மருத்துவம். நிலைமை : நல்லநிலை முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

**தொடக்கம் :**

கரிசாலை குப்பைமேனி சிறுசெறுப்படை
சமன்கூட்டி சூரணம் செய்து தேனின்
கூடச்சேர்த்துக் கிளரி களச்சியளள
20நாள் இருவேளையும் கொண்டால்
தசை சரீரத்திலுள்ள வியாதி போகும்

**முடிவு :**

சன்னி 13-க்கும்

சுத்திசெய்த வீரம் விராகனெடை-1 பச்சைகற்பூரம்
விராகன்-1 மிளகு விராகன்-1 இதுகளை
குளுந்த தண்ணீர் விட்டரைத்து மிளகளவு குளிகை
தேன் கொடிவேலி கசாயம் மிளநீரில் தாக்க
கடின பத்தியம்

**காலம் :**

இல்லை

**குறிப்பு :**

இதில், சட்டமுனி கற்பவிதி, ரோமரிசி கருமானச் சுருக்கம், வச்சிராதி லேகியம் நந்தீசர் ஞானத்தில் கூறியது, நந்தீசர் ஞானத்தில் அமுர்த சஞ்சீவித்தைலம், கண்ணி லுள்ள தொண்ணூற்றாறு வியாதி தீர, அகத்திய மாமுனி மேகத் தெண்ணை 14 ல், கூறியது, அகத்தியர் குளிர்ச்சி எண்ணெய், அகத்திய மகா முனிவர் தைலச்சுருக்கம், சூலை வியாதி 15-க்கும் பொது மருந்து ஆகியவை உள்ளன.

இதன் பின்னர் பொருளடக்கம் அகராதி எழுதிய ஏடுகள் 2-ம் குழந்தைக்கு மாதுளை நெய் எழுதிய ஏடு ஒன்றும் உள்ளன. உரை நடையில் உள்ளன.



வரிசை எண் : 2534 சுவடி எண் : 1326-a

## (அகத்தியர்) — 100

ஏடுகள் : 49(6-54) கி. எண்ணிக்கை : 500 அளவு : 26×3 செ.மீ.
பக்கத்திற்கு : 5-6 வரிகள் ஆசிரியர் ; (அகத்தியர்) பொருள் : மருத்துவம்
நிலைமை : மிகப் பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

**தொடக்கம் :**

.......... ணுவபத்தால் வெளியில் போட்டே
னாட்டாதே கள்ளரென்ற பிள்ளைக் கெல்லாம்
வானென்ற வீயம..... ப் பதலம் பண்ணு
வண்மையா யிதினுடைய னாதங் கேளு
வேனென்ற வைப்பொடிதான் பலம தஞ்சு
வெள்ளைதா ளகமுஞ்சூத ......... கூட்டே — 11

**முடிவு ;**

கட்டியே ரவித்தன்னி லுலர்ந்த பின்பு
கனபுடமே போடப்பா மயங்க வேண்டாம்
ஒட்டியே ஆறியபின் செந்தூ ரந்தான்
உண்மையாய்க் குன்றியிடை திரிகடுகு கூட்டி
ஆட்டியே மண்டலந்தான் கொள்ளு கொள்ளு
ஆச்சரிய ருணமெல்லா மகன்று போகும்
சூட்டியே கெற்பத்தில் தோஷம் போகும்
துடியான கிராணியெல்லாங் கூடப் போமே ! — 100

**காலம் :**

இல்லை

**குறிப்பு :**

இதில் தலைப்பு இல்லை. 10 செய்யுட்கள் இல்லை. அதனால் நூல் தலைப்பு அறியக்கூடவில்லை முடிவு கொண்டும் அறிய இயலவில்லை.

இதில், வேப்பந் தயிலம், வீளி சூரணம், அண்ட சத்து சயலேகியம் முதலியன உள்ளன.



வரிசை எண் : 2535 சுவடி எண் : 1326-b

# அகத்தியர் பாடல்

ஏடுகள் : 6 (55-60) கி. எண்ணிக்கை : 70 அளவு : 26 × 3 செ மீ.
பக்கத்திற்கு : 5—6 வரிகள் ஆசிரியர் : அகத்தியர் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிகப் பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

**தொடக்கம் ;**

அருள்விளைந்து அகண்டபரி பூரணமாய் நின்ற
ஆதியந்த பராபரத்தைப் போற்றி
துருவமதாய் முன்னூற்றில் வயித்திய வாதம்
சொல்லிவிட்டே னதைக்குறுக்கி முப்பத் தாறாய்
கருவடக்க மில்லாமல் வயித்திய வாதம்
கைமுறையாய்ப் புடவெள்ளை பாடி னேனான்
ஒருமனத்தாய் வாதிகளே யிதனைச் செய்யில்
உலகத்தோர் நோய்களெல்லா மோடிப்போம் பாரே — 1

**முடிவு :**

செயநீரி லடைத்திடவே மருந்து கேளு
திடமாகக் காரமொன்று சார மொன்று
செயநீராந் தாரமொன்று வீரமொன்று
செப்புரேன் சூட........................

**காலம் :**

இல்லை

**குறிப்பு :**

இது, அகத்தியர் பாடல் 36 போலும்; இது எமது சுவடி எண் 378b/D764-ன் வேறாயது.



வரிசை எண் : 2536 அட்டவணை எண் : 1327-a

# புலிப்பாணி வைத்தியம் — 500

ஏடுகள் : 174 கி. எண்ணிக்கை : 2500 அளவு : 21 × 2½ செ.மீ.
பக்கத்திற்கு : 4—6 வரிகள் ஆசிரியர் : புலிப்பாணியார் பொருள் : மருத்துவம்
நிலைமை மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

காப்பு

அண்டரண்ட மாகிநின்ற வ(ர)னே காப்பு
ஆனந்த மாகிநின்ற வுமையே காப்பு
குண்டமெனும் குண்டலியின் குறியே காப்பு
குமரகுரு வேல்முருகர் பாதங்காப்பு

முடிவு :

வைத்தியர்க்குப் புத்தி கூறல்

ஆமேதாம் பண்டிதரே யரையக் கேளு
ஆதரையி லெளியோர்க்கு அவிழ்த மீய்ந்து
தாமேதா னன்னமிட்டு வஸ்திர மீய்ந்து
தயவாகத் தன்னுயிர்போ லவரைக் காத்து
தீமைதான் சேராமல் புண்ணி யவனாய்த்
தீர்க்கமுள்ள வைத்தியரா யிருந்து வாழ்வாய்
நாமேதான் போகருட கடாட்சத் தாலே
நலமாகப் புலிப்பாணி யாடி னானே ! — 500

சிவமயம்

வியாதியஸ்தனுக்கு புத்தி கூறல்

நவின்றிட்டோம் புவிதனிலே வயித்திய மார்க்கம்
நன்றாகச் சொல்லிவைத்தே னின்னூல் வேண்டும்
பயின்றிட்ட நோயாளர் வைத்தி யோர்க்குப்
பண்பாகத் தொழுதேத்தித் தாம்பூல மீய்ந்து
இயன்றிட்ட மவையெல்லா மவர்க்குச் சொல்லி
இதம்பெறவே செய்தபின்பு அவிழ்தங் கொள்வாய்
கவின்றிட்ட போகருட கடாட்சத் தாலே
காசினியில் புலிப்பாணி ஐநூறு முற்றே !

புலிப்பாணி மகாமுனிவர் அருளிச் செய்த வைத்தியம் 500 ம் முற்றிற்று

சுபம் சுபம் சுபம்

சங்கரநீஸ்வரி சதுர்மறை நாதன்தேவி
லட்சுமி ஸ்ரீமந் நாராயணன் குகன்
கணேசன் நமஸ்து. என்னைக் காற்கக் கடவது

இதில் எந்தவித பிழை யிருந்தாலும் பெரியோர்
தங்கள் சேயனைப் போல கிருபா கடாட்சம் வேணும்

கங்கையைத் தரித்தேன் வாழி
கதிர்மறைக் குகன் கணேசன் வாழி
லட்சுமி ஸ்ரீமந் நாராயணன் வாழி
கவுரி கலைவாழி ஏர் வாழி
மூப்பத்து மூவர் வாழி முனிவோரும்
ரிஷிகளும் வாழி வாழிபிண்டமும்
அண்டம்வாழி எழுதினோன் வாழி
வாழியிதிலுள்ள மருந்தையறிந்து யீவான் வாழி
போகரும் புலிப்பாணி வாழி வாழியாமே

சும ரமஸ்த்து

சிவமயம்

காலம் :

(முதல் ஏட்டில்)

புலிப்பாணி மகாமுனிவர் திருவாய்மலர்ந்தருளிய வைத்தியம் - 500 - போத்தம் பாளையம் ராமகவுண்டன் மகன் ரங்கசாமிக் கவுண்டன் எழுதியது.

யுவ வருஷம் மாசி மாதம் 21-ந் தேதி 1936-ம் வருஷம் மார்ச்சு மாதம்

கணபதி துணை

(கடைசி ஏட்டில்)

கலியுக சகாப்தம் யிங்கிலீசு 1936. இதன் மேல் செல்லுகிற தாது வருடம் ஆனி மாதம் 13-ந் தேதி வெள்ளிக்கிழமை சித்தியோக சிம்ம லக்குனத்தில் இது எழுதி முடிந்தது.

சம்புரணம்

சிவமயம்

போத்தம் பாளையம் ராமக்கவுண்டன் மகன் ரங்கசாமிக் கவுண்டன் எழுதியது. ஷியானைத் தெரியாமல் யிந்த ஏடு எடுக்கப்படாது. எடுத்தால் பலியாது. ரங்கசாமிக் கவுண்டன்.

சிவமயம்

குறிப்பு :

இது எமது சுவடி எண் 503/D 1099 போன்றது இதன் பின்னர் 8 ஏடுகளின் இந்நூலின் உள்தலைப்பு அட்டவணை 'வயித்திய அகராதி' என்ற பெயரால் உள்ளது.

இதில், சுரத்துக்கு மாத்திரை, குன்மம் 6-க்கும் உப்பு, அண்ட வியாதிக் கெண்ணை, கண் வலிக்கு, தந்த வாயுவுக்கு, நீரில் இரத்தங் கண்டால், எலிகடி 18-க்கும் கிரகசாரத்துக்கு, நவக்கிரக தியானம், பேதி மாத்திரை, நீரெரிவுக்கு, கெந்தகரசாயனம், சகுனம், ரத்த சாமுண்டி மந்திரம் முதலான பல தலைப்புகள் உள்ளன.

⁂ ⁂ ⁂

வரிசை எண் : 2537 சுவடி எண் ; 137.

## புலிப்பாணி முனிவர் அருளிச் செய்த சிதம்பர பூசை - 25

ஏடுகள் : 13½ (183-196) கி. எண்ணிக்கை : 150 அளவு : 24 × 2½ செ.மீ.
பக்கத்திற்கு : 4-5 வரிகள் ஆசிரியர் : புலிப்பாணிமுனிவர் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிகப்பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்

தொடக்கம் :

அத்திமுகவனை அளித்தவர் ............... காப்பு
அகிலமெங்கும் நிறைந்துநின்ற வருளே காப்பு
முத்திதரு வேதாந்த முதலே காப்பு
முப்புரத்தைத் தகித்தெறிந்த பரனே காப்பு
சத்தியொரு பாகம்வைத்த வரசே காப்பு
சங்கரனே யம்பரனே ஞான மூர்த்தி
வெற்றியாம் சிதம்பரத்தின் பூசை மார்க்கம்
விளம்புகிறேன் கணேசனுட பாதங் காப்பே! — 1

முடிவு ;

தாமடா மூலவெட்டுக் காலே யாகும்
........ ... . . ரட்டி யரையே யாகும்
வாமடாயிதிலிரட்டி மு த்தென் பார்கள்
வனமான கனமப்பா நெற்க ளந்தான்
நாமடா வீசமது ஒருநெல் லாகும்
நலமான சிதம்பரத்தி பூசை முற்றே — 26

சிதம்பர பூசை

முற்றிற்று

சிவமயம்

காலம் :

1936 சூலை 15

குறிப்பு :

இதில் பேதனம், மாரணம், வித்துவேசனம் முதலானவற்றிற்கு மருத்துவம் முதலியன மறைமுகமாகப் பேசப்படுகின்றன.

❋ ❋ ❋

வரிசை எண் : 2538 சுவடி எண் : 13.7-c

## கற்ப உற்பத்தி சொல்ல

ஏடுகள் : 2½(196-198) கி. எண்ணிக்கை : 20 அளவு : 24×2½ செ மீ. பக்கத்திற்கு : 4—5 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : மருத்துவம் நிலைமை : மிகப் பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

சித்திரை மாதம் 10-ஆம் தேதியில் ரசஸ்வலை யாகில்
அதுமுதல் 10 மாதம் எண்ணிப்பார்க்க தைமாதம் 10 தேதி
அதினோடு 7 நாள் சேர்க்க தைமாதம் 17-ந் தேதி
குளி குளிப்பார்கள்

முடிவு :

வசிய முலிகை

பொங்கல் தூபதீபம் பலி கொடுத்து
வோறாம லெடுத்து சத்தி லடைத்து
அணைந்திட பெண்களெல்லாம் வசியம்
புருசனுக்குப் பெண்சாதி வசமாம்
மோகினி தியானஞ் செய்யவும்

ரங்கசாமிக் கவுண்டன்

சிவமயம்

இதன் பின்)

## சூடன் சுன்னம்

ஆட்டடா சிப்பியுட சுன்னந் தன்னில்
அடவாக சூடனொரு கட்டி வைத்து
நாட்டடா மேலுமிந்த சுன்னம் போடு
நலமாக சுட்டிவாய் சீலை செய்து
கூட்டடா கமலது நாலு சாமம்
குணமாக யெரிந்தவுடன் சுண்ண மாகும்
வாட்டடா யிந்தசுன்னஞ் சோற்றில் போட
வளமான சுத்த சடலத்தின் .........

**காலம் :**

இல்லை

குறிப்பு :

இதில், கெற்ப உற்பத்தி சொல்லுவது, பேயோட்டல், லோகவசியம், வசியமூலிகை சூடன் சுன்னம் ஆகிய தலைப்புக்களே உள்ளன.



வரிசை எண் : 2539 சுவடி எண் : 1328.

## வைத்திய முறைகள்

ஏடுகள் : 160 கி. எண்ணிக்கை : 3000 அளவு : 33×3 செ மீ
பக்கத்திற்கு : 4—6 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : மருத்துவம்
நிலைமை : பழுது முழுமை : முற்றுமுள்து எழுத்து : தமிழ்

**தொடக்கம்:**

### காப்பு

அல்லல்போம்..............கைதொழுதக்கால்

### சரஸ்வதி துதி

அயனது தலமே மேவும்..................
...............தாளினைப் பணிகுவனே !

## பதினெண்மர் துதி

கற்றாலும் ஞானக் கருத்தறிந்தோர்கள்
கமல பாதம்
பெற்றாலும் சித்தி பேரின்பக் கல்வி
பிறவாத முத்தி
வைத்தாலும் வெற்றி மருவியவர் பாதம்
வணங்கவும் யான்
சித்தாதி சித்தர் பதினெண்மார்
தந்த திரவியமே !

## நாடி பார்க்கும் விதம்

கையைப் பிடித்து நெட்டை வாங்கி
பெருவிரல் பக்கமாக இருக்கும்
ஆளாயின் பின்போ லோடும்

முடிவு

ஏழுநாள் சாப்பிடவும். பத்தியம்; உப்பு, புளி, புகை, சம்போகம், கடுகு நல்லெண்ணெய் ஆகாது.

எவ்விதமான விரைவாதம் விரை வாயுவும் நீங்கும். தாது புஷ்டியுண்டாகும்.

பற்பமுறை படலம் முற்றிற்று

ஓம்

கடவுள் துணை

காலம் :

விளம்பரம்;- சர்வதாரி வருஷம், கார்த்திய மாதம் இரண்டாம் தேதி செவ்வாய்க் கிழமை, போத்தம் பாளையம் கருப்ப மூப்பன் மகன் கருப்புசாமி எழுதி வைத்த வைத்தியம்

இதை யார் எடுத்தாலும் கொடுத்திடவும்

ஆண்டவர் துணை

சரஸ்வதி துணை

குறிப்பு :

இதில்; சுத்திமுறைப் படலம், மாத்திரைப் படலம், குளிகைப் படலம், சூரணி முறைப் படலம், லேகிய முறைப் படலம், எண்ணெய் முறைப் படலம், தைல முறைப்

படலம், பற்ப முறைப் படலம், கியாழ முறைப் படலம், ஆகியவை உள்ளன. பல மருந்துகளும், செய்முறைகளும், தீரும் நோய்களும் எழுதப்பட்டுள்ளன.

ஏடுகள் தலை தடுமாற்றம்.

★ ★ ★

வரிசை எண் : 2540 சுவடி எண் : 1829

## வைத்தியம்

ஏடுகள் : 12 கி. எண்ணிக்கை : 100 அளவு : 23 × 3 செ.மீ.
பக்கத்திற்கு : 4—6 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : மருத்துவம்
நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஏலரிசி கூகைநீர் வகைக்கி
கிராம்பு சோம்பு யிரண்டுருபாயிடை
சாதிக்காய் அதிமதுரம் யிடித்து
சாதிப்பத்திரி சீரகம் எண்ணெயில்
கசகசா இஷ்க்கோவரிசி போடவும்

முடிவு :

வெள்ள வெங்காயம் தேவதாரக்கட்டை
வசம்பு, ஓமம், சதகுப்பை சித்தரத்தை
கம்பிளிபிசின் இது வகைக்கி
மூணுருபாய் துக்கம்

காலம் :

இல்லை

குறிப்பு :

இதில், சில்லரை வைத்தியம் எழுதப்பட்டுளது. சவுரியார் குழம்பு உரைநடையாக உள்ளது. தாகத்துக்கு பஞ்ச தீவதரணை லேகியம், பரங்கிப்பட்டை சூரணம், சிந்தாமணி லேகியம் முதலான தலைப்புகள் உள்ளன. பிழையதிகம்.

★ ★ ★

வரிசை எண் : 2541 சுவடி எண் : 1330.

## மாட்டு வாகடம்

ஏடுகள் : 39 கி. எண்ணிக்கை : 400 அளவு : 29½×2½ செ.மீ.
பக்கத்திற்கு : 4—6 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : மருத்துவம்
நிலைமை : பழுது. முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

கணபதி என்றிடக் கலங்கும் வல்வினை
+ + + + +
கணபதி யெண்ணில் காரியம் ஜெயமே !
வாக்குண்டாம் ...............
தப்பாதிருமென் தும்பிக்கையான் பாதம்ந் துணை
இந்த யேடு மாட்டு வாகடம் நூல்
இதில் மருந்துகளும் நசியங்களுப் உண்டானது
நூல்

கூடை னோவின் குணம் அறியும்படி – மருந்துகள்

யிதின் குணம் வயறு ஊதி உப்பும்
நடக்கமாட்டாது மயிர் சுருண்டு யிருக்கும்
கண் குளிந்து குளியாய் யிருக்கும்

முடிவு :

இதுக்கு மருந்து : ஓமம், வசம்பு, பெருங்காயம், மிளகு
யெருக்கிலான் வேர்ப்பட்டை அன்...... பனைவெல்லம்
இவை சமனாய் அரைத்து கொட்டை எண்ணெயில் கலக்கி
உள்ளுக்குக் கவாளம் குடுக்..........

காலம் :

இல்லை

குறிப்பு :

இதில், இடையிடையே ஏடுகள் இல்லை. கொல்லி நோவின் குணம், கண்டமாலை நோய் வரும் குணம், குதிரை வலிப்பு குணம் கண்டு கொள்ள விபரம், படுக்கிற மாட்டுக்கு மருந்து, புளுத்த மாட்டுக்கு எண்ணெய், அக்கினிச் சுழலுக் குளிநோவுக்கு, முலை சுரக்காமல் இருந்தால் முதலான பல தலைப்புகள் உள்ளன.



வகை எண் : 2542 சுவடி எண் : 1331

## வைத்தியத் திரட்டு

ஏடுகள் : 19 கி. எண்ணிக்கை : 100 அளவு : 28½ × 3 செ.மீ.
பக்கத்திற்கு : 4 – 6 வரிகள் ஆசிரியர் : பலர் பொருள் : மருத்துவம்
நிலைமை : நல்லநிலை முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

**தொடக்கம் :**

கழல் வாதத்துக்கு

கழல்வாதத்துக்கு ஒருக்கொட்டைப் பூடு வசம்பு
முடக்கொத்தான் இலை யரைத்து விளக்கெண்ணையில்
முழுங்கத் தீரும்

**முடிவு :**

வெழக்கு எண்ணை படி—1 துத்திதளை மூனுநம்பல்
ஈரவெங்காயம் படி—¾ கொப்பு நெரிஞ்சி
தளையை யெண்ணெயில் ஊரவைத்து
வீக்கத்துக்கு பூசவும் தீரும். கைகண்டது
ஹர ஹர ஸ்ரீ. மூலமந்திரம் ஓம் என்று தியானம் செய்யவும்

**காலம் :**

இல்லை

**குறிப்பு :**

இதில், கந்தரனுபூதி 6 பாடல்கள் எழுதிய 2 ஏடுகள் இடையில் உள்ளன. இடையிடையே வெற்றேடுகள் உள்ளன

இதில், சிரங்குக்கு, மூர்த்தி பேய்க்கு, மந்திர யந்திரங்கள் சிறு சந்தனாதித்தயிலம் குமரித்தயிலம், தேத்தான் கொட்டை லேகியம் முதலியன உள்ளன.



வரிசை எண் : 2543 சுவடி எண் : 1332

# சித்திராரூடம்

ஏடுகள் : 33 கி. எண்ணிக்கை : 1000 அளவு : 26 × 3½ செமீ
பக்கத்திற்கு : 8—9 வரிகள் ஆசிரியர் : சித்தர்கள் பொருள் : மருத்துவம்
நிலைமை : நல்லநிலை முழுமை : முற்றுமுறாது எழுத்து : தமிழ்

**தொடக்கம் :**

(முதல் ஏட்டில்)

ஞானவாசிட்டக் கதையில்...........
மங்குலோர் பதினாயிரம் ........... உபதேசம் யிது (என்றுளது)

நூல் காப்பு

அத்திமா முகவன் செய்ய ........... விளம்பலுற்றேன்

**முடிவு**

வேதியன் முதனாற் சாதி......
\+ + + + +
போதில்வாழ் பிரமராகி புகழவீற் றிருப்பர்தாமே

சித்தராரூட முற்றும்

சம்பூரணம்

(பின் பக்கத்தில்)

அரும் பதங்கட்குப் பொருள் உள்ளது.

**காலம்**

அட்செய வருஷம் வையாசி மாசம் 10-தேதி பல்லிடந் தாலுக்காவுக்குச் சேர்ந்த பொத்தம் பாளையத்திலே யிருக்கும் அண்ணையக் கவுண்டனுக்கு டி சத்தி மங்கலந் தாலுக்காவுக்குச் சேந்த புல்லபாளையங் கிராமம் அய்யன் பாளையத்திலே யிருக்கும் கந்தசாமி முதலி மகன் குமாரசாமி முதலி எழுதிக் குடுத்த சித்தராரூடம்

இந்தப் பொஷ்தகத்தை ஆதா மொருத்தர் எழுதினாலும் படித்தாலும் உடையான் வசம் ஒப்பிவைக்க வேண்டியது. சிவமயம்

சிதம்பர ஈஸ்பரமூர்த்தி துணை. விக்கின விநாயகர் துணைசெய்து லட்சிக்கவும்.

அழகு மாதவர் துணை செய்து லட்சிக்கவும்.

சுப்பிரமணியர் துணை

குறிப்பு :

இது எமது சுவடி எண் 301-b/D 533 போன்றது இது 22 23, 24, ஆகிய சுவடிகளின் வேறாயது.

இதில், பாம்புகளின் பிறப்பு, அவற்றின் பிரிவு, நிறம், குறி, வயது முதலியன கூறப்படுகின்றன,

வைத்தியம் எழுதிய ஏடுகள் இதன் பின் உள்ளன.



வரிசை எண் : 2544 சுவடி எண் : 1333-a

## தெட்சிணாமூர்த்தி கர்ம அனுபோக சூத்திரம்

ஏடுகள் : 120 கி. எண்ணிக்கை : 2000 அளவு 23 × 3 செ.மீ.
பக்கத்திற்கு : 5—6 வரிகள் ஆசிரியர் : தெட்சிணாமூர்த்தி பொருள் : மருத்துவம்
நிலைமை : மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

**தொடக்கம் :**

பூரணமாய் மூலமுத லாரா தாரம்
புரியஷ்ட்டத் திசைவாய்வு நாடி மூன்றும்
காரணமாய் யிடை பின்னாய்ச் சுளினை யாகிக்
கலந்துநின்ற வாதபித்தம் சிலேற்பனமு மாகி

**முடிவு :**

தெரிசனம் கண்களிலே வருவதேது
தீர்க்கமடா சிறுவருக்குத் தேவதா அமுற்தம்
கரிசனமா மின்னூலின் கற்ம தற்மம்
காரடா மருந்துவகை களங்க முற்றே ! — 301

சற்குரு துணை

**காலம் :**

இல்லை

குறிப்பு :

இது, எமது சுவடி எண் 560 / D 1167 'அகத்தியர் நடுக்காண்டம் கர்ம நிவர்த்தி — 300 போன்றது. சில இடங்களில் அகத்தியர் தட்சிணாமூர்த்தி என்றே பேசப் படுகிறார்.

இதன் பின் கணக்கெழுதிய ஏடொன்றுளது.

★ ★ ★

வரிசை எண் : 2545 சுவடி எண் : 1333-b

## (அகத்தியர் 205)

ஏடுகள் : 8 கி. எண்ணிக்கை : 80 அளவு : 23 × 3 செ.மீ
பக்கத்திற்கு : 5 வரிகள் ஆசிரியர் : அகத்தியர் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிகப் பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

குறிப்பு :

இது, எமது சுவடி எண் 562/D 1169 போன்றது.



வரிசை எண் : 2546 சுவடி எண் : 1333-c

## (கணக்கதிகாரம்)

ஏடுகள் : 42 (129–171) கி. எண்ணிக்கை : 400 அளவு : 2 × 3 செ.மீ
பக்கத்திற்கு : 5 வரிகள் ஆசிரியர் : (காரி) பொருள் : கணக்கு
நிலைமை : மிகப் பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

அழந்த கைய்க்கியந்த நடுவுங் கடையுந் தாக்கிக்
குழி சொல்வது இவை வருமாறு:-
ஒருகைக் கோல் - 12 ஒரு கைக்கோல் - 11 ஒரு கைக்கோல் - 7
ஆக கோல் 30 இதில் 3-ஆம் பாதத்தில் கோல் - 10
இதனை நடுவு நிலங்கோல் - 15க்கு மாற 10க்கு 15 ஆக 150

முடிவு :

வடிவறிந்து நீளத்தால் மாறி நழுவு தலை வேண்டிய
கை கொண்டு விற்க்காட்டினால் மாற வேண்டியதே யாகுங்
குளி - என்பது துடியும் பட்டும் தெரையுஞ் சுழகும்
மெறும்பும் சூலமும் போன்றிருந்துள்ள நில மளக்குமிடத்து
கைகளெனறறிச சருக்கம் பாதறு.

காலம் :

இல்லை

குறிப்பு :

இதில், தொடக்கம் முடிவு இல்லாததால் 'கணக்கதிகாரம்' எனத் தலைப்பிடப்பட்டது இதில், நிறுத்தலளவை, நீட்டலளவை முதலான வாய்பாடுகள் உள்ளன.



வரிசை எண் : 2547 சுவடி எண் : 1334

## சோதிடக் கிரக சிந்தாமணி மாலை

ஏடுகள் : 192 கி எண்ணிக்கை : 8000 அளவு : 39×3 செ.மீ.
பக்கத்திற்கு : 7 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : சோதிடம்
நிலைமை : பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஹரி ஓம்

பூவில் மங்கையும் பூதல வஞ்சியும்
பாவில்மின் சவுபாக்கிய மாதரும் - மேவுமுத்தி
விரும்பிய மானுமென னாவி யங்கம்
மருந்துணை யாகுமே.

முடிவு :

மெத்து சுன்னில் வெய்யோ னொன்று ரண்டுனால்
மிக்க யேழெட்டுப் பத்துப் பன்னொன்று மிந்து
வத்த மூன்றாறு பன்னொன்று சேய்க்கு மூன்று
யய்யைந்தாறு பத்துப் பன்னொன்றீராறே
யத்து மாராரெட் டொன்று தீரை 404

காலம் :

இல்லை

குறிப்பு ;

இதில், ராசி நிகண்டு, பகல் நாழிகை யறிய, நட்சத்திர உச்சமறியும் படி, ஆதாய விரய பலன் அறியும் படி, எதிர் கயறு ஒற்றை ரெட்டை, உதைய விதி மாருடக் கவிப்பு அறிய முதலான பல தலைப்புகள் உள்ளன.

★ ★ ★

வரிசை எண் : 2548 சுவடி எண் : 1335-a

## நாடி லக்கணம்

ஏடுகள் : 18 கி. எண்ணிக்கை : 500 அளவு : $23\frac{1}{2} \times 3$ செ.மீ.
பக்கத்திற்கு : 7—9 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : மருத்துவம்
நிலைமை : பழுது முழுமை ; முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

கணபதி யென்றிட .........கரும மில்லையே !

நாடிலக்கணம்

அருவையர்க் கிடது பாகம்
அழகிய புருஷர்க் கெல்லாம்
பரிவுடன் வலது பாகம்
பார்த்து நீ யுரைப்ப தென்றே

முடிவு :

அந்த வுயிருக்குச் சேதம் வராது
நாலுனாழிகை ஆறு னாளிகையில் மீளும்
என்றறிந்து மனந்தடுமாறா மலிநந்து
பிரையோகம் பண்ணுவது

காலம் :

இல்லை

குறிப்பு :

இதில், நாடி லக்கணம், நாடி துடியறியும்படி, அசாத்தியம் அறியும்படி, வாதத்தில் வாதம், சாக்கிர சொப்பனாடி சுவ சமறிதல் நாடிபிடித்துப் பார்க்கிறது, முகநாடி லக்கணம் ஆகியவை உள்ளன. தொடர்ச்சியாக எழுதப்பட்டுள்ளது

முகப்பு ஏட்டின் பின்புறம், 4 யுகங்களுக்கும் ஆண்டுகள் யானை, மனிதன் முதலானவற்றின் வயதுகள் எழுதப்பட்டுள்ளன.



வரிசை எண் : 2549 சுவடி எண் : 1335-b

## வைத்தியத் திரட்டு

ஏடுகள் : 32 (19-51) கி. எண்ணிக்கை : 1000 அளவு : 23½ × 3 செ.மீ
பக்கத்திற்கு ; 7—9 வரிகள் ஆசிரியர் : புலர் பொருள் : மருத்துவம்
நிலைமை : பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

சன்னியின் குணம்

கருத்துரு சன்னி தன்னைக்
கண்டுநீ யறிய வேண்டில்
உருத்திராக் கிஷத்தை சற்றே
உரைத்து நாவில்த் தடவத்
திருத்தமாய் கருமெய் கண்டாய்
யதீதமுறு சன்னி யாகும்
பெருத்ததோர் வெளுப்ப தாகில்
பின்னைய தல்ல வாமே !

இந்தப் பாட்டுக்குவுரை : சன்னியிலே பதிமூன்று வகையுண்டு. இதிலே தீருகிற சன்னி ஆறு, தீராத சன்னி ஏழு. இதறியும்படி எப்படி யென்றால், ஒரு உத்திராட்சத்தை ஒரு புதுசட்டியில் உரைத்து னாவில்தடவ மைப்பற்றினாப் போலே கருமை கொண்டு தாகில்த் தீருகிற சன்னி ஆறு சன்னியிலே ஒன்று. அதல்லது வெண்மை போன்றுதாகில் தீராதசன்னி ஏழுசன்னியில் ஒன்று.

முடிவு :

முள்ளிச் செடி சமூலங் கொண்டுவந்து யிடித்துப் பிட்டாக
அவித்துக் கொண்டு அந்தச் சாற்றில் ஒரு குளிகை குடுக்கவும்
இப்படி மூன்றுநாள் குடுக்கவும். இதுக்குப் பத்தியம்
உப்பு புளி தவிரவும்.

**காலம் :**

இல்லை

**குறிப்பு :**

இதில், வாதத்தின் குணம், சகல ஊளிச்சல் இருபத்து நாலு, பதினெட்டு குட்டத்தின் குணம், முடங்கின வாதத்துக்கு, காது வலி, மகோதரத்துக்கு, பிரமியத்துக்கு எலிகடிக்கு, பாம்பு விஷத்துக்கு திருவணையடைச்சான் குளிகை, கோளி பற்பம், திரிபுர சங்கார குளிகை, ஸ்ரீராமனென்னுங் குளிகை, ருத்திராய சுரத்துக்குக் குளிகை முதலியன உள்ளன.

* * *

வரிசை எண் : 2550

சுவடி எண : 1335-c

## அகத்தியர் — 16

ஏடுகள் : 4 (52—55) கி. எண்ணிக்கை : 100 அளவு : 23½×3 செ.மீ.
பக்கத்திற்கு : 7 - 9 வரிகள் ஆசிரியர் : அகத்தியர் பொருள் : மருத்துவம்
நிலைமை : பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்

**குறிப்பு :**

இது, எமது சுவடி எண். 578-a / D 1191 போன்றது.

* * *

வரிசை எண் : 2551

சுவடி எண் : 1335-d

## வைத்தியத் திரட்டு

ஏடுகள் : 8½ (55-63) கி. எண்ணிக்கை : 300 அளவு : 23½×3 செ.மீ.
பகத்திற்கு : 7—9 வரிகள் ஆசிரியர் : பலர் பொருள் : மருத்துவம்
நிலைமை : பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்

**தொடக்கம் :**

வைத்திய சிந்தாமணி யென்னுங் குளிகை

| | | |
|---|---|---|
| சாதிலிங்கம் விராகனிடை | — | 1 |
| பெருங்காயம் ,, | — | 1 |

| | | | |
|---|---|---|---|
| இந்துப்பு | ,, | — | 1 |
| மந்தைவாடி | ,, | — | 1 |
| தாணிக்காய் | ,, | — | 1 |

முடிவு :

| | | | |
|---|---|---|---|
| கத்தாளிச் சாறு | படி | ¼ | |
| புண்ணாக்குப்பூட்டு சாறு | ,, | ¼ | பஞ்சதாரை கால்பலம் |
| பூசனிக்காய் சாறு | ,, | ¼ | போட்டுக் குடுக்கவும் |
| காடிதண்ணீர் | ,, | ¼ | உஷ்ணம் தீரும் |
| புளியிலைச் சாறு | ,, | ¼ | இது கை கண்டது |

இதுக்குக் கடை மருந்து

காலம் :

இல்லை

குறிப்பு :

இதில், றாச்சச னென்னுங்குளிகை, சிவபாக்கிய சிந்தாமணி யென்னுங்குளிகை, சுர குடோரி என்னுங்குளிகை, அக்கினிக் குமார னென்னுங் குளிகை. கண்ட கோடாரி என்னுங்குளிகை, சுரத்துக்கு சஞ்சீவி யென்னுங்குளிகை முதலான மருந்துகள் கூறப்பட்டு உள்ளன.



சுவடி எண் : 2552 சுவடி எண் : 1335-e

## அகத்தியர் — 150

ஏடுகள் ; 22 (63-85) கி. எண்ணிக்கை : 600 அளவு : 23½ × 3 செ.மீ.
பக்கத்திற்கு : 7—9 வரிகள் ஆசிரியர் : அகத்தியர் பொருள் : மருத்துவம்
நிலைமை : பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

குறிப்பு :

இது எமது சுவடி எண் 269-b, 324-b, 414-d போன்றது.

* * *

வரிசை எண் : 2553 சுவடி எண் : 335-f

## அகத்தியர் வைத்தியம்

ஏடுகள் : 24 (85—108) கி. எண்ணிக்கை : 600 அளவு : $23\frac{1}{2} \times 3$ செ. மீ.
பக்கத்திற்கு : 7—9 வரிகள் ஆசிரியர் : அகத்தியர் பொருள் : மருத்துவம்
நிலைமை : பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

**தொடக்கம் :**

சித்தான் முட்டி பலந்தா னொன்று
திரமான குறுந்தொட்டி பலந்தான்
சங்கவேர் பலந்தா னொன்று
வீதமொன்று தப்பாமல் தூக்கி வாங்கி

**முடிவு :**

தொடுத்தம் தார காசம்
சுவாசகா சங்கள் பாண்டு
விடுத்தொரு காச மேகும்
மௌமுனி விளம்பி னாரே! — 103

**காலம் :**

இல்லை

**குறிப்பு :**

இதில், சொற்ன்பற்பம், வெங்கல செந்தூரம், தாகைபற்பம், ஆனந்த பைரவி அப்பிரக செந்தூரம், சிந்தாமணி செந்தூரம், திராவகம் முதலான பல தலைப்புகள் உள்ளன.



வரிசை எண் : 2554 சுவடி எண் : 1335-g

## வைத்தியத் திரட்டு

ஏடுகள் : 7 (109-115) கி எண்ணிக்கை : 200 அளவு : $23\frac{1}{2} \times 3$ செ.மீ.
பக்கத்திற்கு : 7—10 வரிகள் ஆசிரியர் : பலர் பொருள் : மருத்துவம்
நிலைமை : பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

சூலை குன்ம குடோரி லேகியம்

பாரப்பா வெள்ளைவெங் காயந் தன்னை
பரிவாக நாலுபலம் எடுத்துக் கொண்டு
சேரப்பா நாலுபடி தண்ணீர் விட்டு
சிறப்பாக ஒருபடியாக் குறுக்கி வாங்கி

முடிவு :

நிறுத்தவே நந்திய வட்டம்
பூவதில் உரைத்துப் போட
பருவமாய்க் கண்ணில் பூவு
பரந்துபோம் மருந்து கொள்ளே ! — 86

இம்மருந்தையெல்லாம் சமன் கூட்டிடுமென்றறியவும்.

காலம் :

இல்லை

குறிப்பு :

இதில், வங்கார சஞ்சீவி, கள்ளி வடகம், கைவிசத்துக்குக் குளிகை, சுயமக்கினி மாத்திரை, திமிரகோடாலி வடகம் முதலான தலைப்புகள் உள்ளன.



வரிசை எண் : 2555 சுவடி எண் : 1335-h

## சவுரியார் குழம்பு

ஏடுகள் : 2 (116-117) கி. எண்ணிக்கை : 80 அளவு : $23\frac{1}{2} \times 3$ செ. மீ.
பக்கத்திற்கு : 7—10 வரிகள் ஆசிரியர் : சவுரியார் பொருள் : மருத்துவம்
நிலைமை : பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

குறிப்பு :

இது, எமது சுவடி எண் 403-h/D 835 போன்றது.

—00—

வரிசை எண் : 2556 சுவடி எண் : 1335-j

## அகத்தியர் குழம்பு

ஏடுகள் : 4 (118-121) கி. எண்ணிக்கை : 180 அளவு : 23½×3 செ.மீ.
பக்கத்திற்கு : 7—9 வரிகள் ஆசிரியர் : அகத்தியர் பொருள் : மருத்துவம்
நிலைமை : பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

குறிப்பு :

இது, எமது சுவடி எண் 594/D 1212, 595/D 1213 போன்றது. கடைசி ஏட்டின் பின்பக்கத்தில் விக்கலுக்கு மருந்தும், அடுத்த ஏட்டில் கறும காண்டம் தலைவலிக்கு, எண்ணெய் வைக்க, மண்டை பிடிக்குப் புகை, காதில் சீக்கு எண்ணெய் எழுதப்பட்டுள்ளன.



வரிசை எண் : 2557 சுவடி எண் : 1335-

## அகத்தியர் சூத்திரம் — 205

ஏடுகள் : 47 (123-169) கி. எண்ணிக்கை : 1500 அளவு : 23½×3 செ.மீ.
பக்கத்திற்கு : 7—9 வரிகள் ஆசிரியர் : அகத்தியர் பொருள் : மருத்துவம்
நிலைமை : பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

குறிப்பு :

இது, எமது சுவடி எண் 580-d/D 1198 போன்றது.



வரிசை எண் : 2558 சுவடி எண் : 1335-k

## வைத்தியத் திரட்டு

ஏடுகள் : 29 (170-198) கி. எண்ணிக்கை : 900 அளவு : 23½×3 செ.மீ.
பக்கத்திற்கு : 7—9 வரிகள் ஆசிரியர் : பலர் பொருள் : மருத்துவம்
நிலைமை : பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

## சன்னிக்கு அக்கினி வாத கோடாலித் தயிலம்

நொச்சிவேர்ப் பட்டையுடன் பலமும் பத்து
நோக்கியே ஒருபலமுமாய் மலப்பட்டை
அச்சமில்லை புங்கமபட்டை வேப்பம்பட்டை
ஆடாதோடை காட்டு முருங்கை

முடிவு :

## பல்லிசொல்

கொட்டும் பல்லி சூரசொன்று கூறி
யாண்டுந் தனமுண்டாம்
வட்டமஞ்சு வாள்விறையும்
வரவு சொல்லும் ஒருநாங்கு
யெட்டு யேனாம்பொல்லாது
இசைந்த ஆறு நன்மைதருந்
சட்டமுடனே மூன்று சொன்னால்
சாவு வார்த்தை தப்பாதே !

காலம் :

சோபகிருது வருஷம் மார்கழி மாதம் 6-ந் தேதி வெள்ளிக்கிழமை சாத்தாவு பண்டாரத்தின் அகஸ்த்தீசுவரர் வாகடம் எழுதி முடிந்தது. முத்துச்சவுரி வாத்தியார் மகன் சின்னச்சவுரி பண்டாரம் எழுதி முடிந்தது.

சம்பூர்ணம்

தெட்சிணாமூர்த்தி லெட்சிக்கவும்
சவரிமலை சாத்தாவுலிங்கம் லட்சிக்கவும்
வீரம்மன் லட்சிக்கவும், அகஸ்தியர் துணை. லட்சிக்கவும்.
குருபாதம் லட்சிக்கவும்

குறிப்பு :

இதில், எண்ணெய்முழுக, விருந்துசாப்பிட, இஞ்சிக்குள்ம்பு, சல்லியம், கணக்கு, அம்மாவாசை அன்றைக்கு நட்சேத்திரம் கண்டுகொள்வது, ராகுவேளையறிதல், துடி நூல் வீடெடுக்க வாஸ்துவன் எழுந்திருக்கும் நாள், உகாதி வருஷ பலன், மயிர்களைய, எழுத்தாணி சாத்திரம், கெவுரி பஞ்சாங்கம், வாரசூலை, ஊர்வழிபோக ராசி யறியும்படி திரட்சிநூல், கிராணந்தீண்டுதல், கரகநூல் ஆடி அமாவாசை பலன். தை அமாவாசை பலன், சாதிலிங்க சுத்தி, ரசசுத்தி, உளமாந்தைக்குணம், ராசிபலன், வாரபலன் முதலான பல தலைப்புகள் உள்ளன.

O—O—O

வரிசை எண் : 2559 சுவடி எண் : 1335-1

## சித்திராரூடம்

ஏடுகள் : 29 கி. எண்ணிக்கை : 1000 அளவு : $23\frac{1}{2} \times 3$ செ மீ.
பக்கத்திற்கு : 9—10 வரிகள் ஆசிரியர் : சித்தர்கள் பொருள் : மருத்துவம்
நிலைமை : பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

வேதியன் கடையான் சாதி
  விஷத்தினால் துஞ்சு வோர்க்கு
ஓதிய மந்தி ரத்தால்
  மருந்தினால் உணர்த்து வோர்கள்

முடிவு :

கொட்டிய தேளும் பாம்பும்
  குறிப்புடன் மீளு மன்றே! — 167

கொல்லங் கோவை தலைசூடி
  குறித்த அப்பைக் கிழங்குடனே
வெல்ல முலத்திப் பொடியாக்கி
  விரும்பிக் குடுக்கை தனிலடைத்து
வல்ல ... ... ... ... ... ... ... ...
  பாகலிலைச்சாறு உளுக்குக் குடுக்க விசமிரங்கும்

காலம் :

இல்லை

குறிப்பு :

இது, எமது சுவ்டி எண் 24 / D 36 போன்ற தெனினும், இதில் முற்றும் செய்யுட்களாகவே உள்ளன. அதில் அகவல் காணப்படுகிறது. எனவே இது அதனின் போறாமது போலும்.



வரிசை எண் : 2560 சுவடி எண் : 1336.m

# மந்திர சாத்திரம்

ஏடுகள் : 3 கி. எண்ணிக்கை 30 அளவு : $23\frac{1}{2} \times 3$ : செ.மீ
பக்கத்திற்கு : 3—6 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : மந்திரம்
நிலைமை : பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

தேள்மந்திரம்

செந்தேள் கருந்தேள் செலவே வோடிய
வெந்தேளே ! சிவனைப் த் தீண்டுவரோ
உடுப்புத் தேளு ஒரு பனையி லேற
உடும்புறத் தேளிறங்கச் சுவாஹா !

முடிவு :

முலைக்குத்து மந்திரம்

இந்திரன் தங்கை மந்திர குமரி
இருப்புக் குடங்கொண்டு தண்ணிக்குப்
போகையிலே முலைக்குத் தென்று
யெதிரே வந்தாள்
நானுமெதிரே சென்றேன்
தலைச்சுத்தி முலைச்சுத்தி
முலைக்கண்டே போகச் சுவா.

காலம் :

இல்லை

குறிப்பு :

இதில், பிள்ளைப்பிணிக்கி மந்திரம், பச்சொடுக்கு மந்திரம், இளநீர்க் கட்டுக்கு மந்திரம், முலைக்குத்து மந்திரம் முதலியன உள்ளன.

இதன் பின்னர் மருத்துவம் எழுதிய ஏடொன்றுளது.



வரிசை எண் : 2561 சுவடி எண் : 1336

# வைத்தியத் திரட்டு

ஏடுகள் : 120 கி. எண்ணிக்கை : 2400 அளவு : $18\frac{1}{2} \times 3\frac{1}{2}$ செ.மீ.
பக்கத்திற்கு : 8—12 வரிகள் ஆசிரியர் பலர் பொருள் : மருத்துவம்
நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்

தொடக்கம் :

நாகசேந்நீர்

(சுத்த) நாகத்தை சட்டியிலிட்டு தேங்காய்விட்டு
அடுப்பேத்தித் தீயெரிய உருகும்
சதிரக்கள்ளிப் பாலிலாவது திருக்கள்ளிப்
பாலிலாவது சாய்க்க

முடிவு :

இட்டே பதம்பார்த்து யிறக்கு செந்தூரம்
மட்டே அந்நூற்றில் மாட்டிடு ஒன்பதில்
நட்டமில்லா மாத்து நலமாம் இருபது
கட்டேநீ வகைகாணிது பாரே

காலம் :

இல்லை

குறிப்பு :

இதில், உப்புவங்கம், கெந்தகத் தயிலம், தங்கம், செம்பு ஆக செந்தூர திராவகம், கெவுரிக்கட்டு, மனோசிலை மெழுகு, கருவங்கம், வெள்வங்கம் நீறி பஸ்பமாம், வெள்ளி பஸ்பம், தங்க செம்பு, நவலோகக் களங்கு, முப்பு செந்தூரம், அண்டத் தயிலத்தால் அறுபத்திநாலு சரக்கு மெழுகாம், இந்திர கோபப் பூச்சிச் சாத்தால் நவலோகம் செம்பு ஆக தேவர்கள் சாப விமோசனம் கெவுரிக்கெந்தி செந்தூரம் முதலான பல நல்ல தலைப்புகள் உள்ளன.



வரிசை எண் : 2562 சுவடி எண் : 1337

## வைத்தியத் திரட்டு

ஏடுகள் : 66 கி எண்ணிக்கை 1500 அளவு : $19\frac{1}{2} \times 3$ செ.மீ.
பக்கத்திற்கு : 6—8 வரிகள் ஆசிரியர் : பலர் பொருள் : மருத்துவம்
நிலைமை : பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

**தொடக்கம் :**

பட்சி

பட்சியிலே முதற்பட்சி யானால் நன்று
பன்னுரங் கீநடந்தா லுந்துஞ் சீறாலது
.........யிலே யரசாகி யுண்டிட்டாலு முச்சமடா
பச்சிமிச்சம் வல்லூறு

**முடிவு :**

மார்க்கிகட்டு

ஆஅழும் தக்கிவரு முள்ளும்
கடிக்கவாரும் பாம்பும் அடிக்கவரு
பேயிமுதலை சாஞ்சுபோகச் சுவா
சக்கரம் உள்ளது

**காலம் :**

இல்லை

**குறிப்பு :**

இதில், மருத்துவம், சோதிடம், சாத்திரம் முதலியன கலந்துள்ளன.



வரிசை எண் : 2563 சுவடி எண் : 1338

## ஞானநாடி சாத்திரம் (வைத்தியத் திரட்டு)

ஏடுகள் : 44 கி. எண்ணிக்கை : 1000 அளவு : $21 \times 4$ செ மீ.
பக்கத்திற்கு : 9—11 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : நாடிசாத்திரம்
நிலைமை : பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்

**தொடக்கம் :**

தெழிந்துட நாடி பார்க்கில்ச்
செந்த வெள்ளரிக்காய் போலே
குளுந்திடில் வாத மாகுங்
குலவிய வரையோ டென்ன

**முடிவு :**

மைச்சமிரண்டு மாளாக்கிச் சுட
நெய்வாத்து மூன்றுநாள் நின்றுண்ணத் தீரும்
பாத்தானைமாலை
உலந்தபின் புளிப்புரசவு கந்த கொருவேலி
யெல்லாம் நலம்

**காலம் :**

இல்லை

**குறிப்பு :**

உதிரி ஏடுகளாக தலைதடுமாறி யுள்ளன. ஷெ ஞானநாடி சாத்திரத்தின் தொடர்ச்சி இல்லை. இது சுரநூலாகத் தெரிகிறது.



வரிசைஎண் : 2564 சுவடி எண் : 1339

## நூநாரி வைத்திய முறைகள்

ஏடுகள் 31 கி. எண்ணிக்கை : 500 அளவு : $22 \times 3\frac{1}{2}$ செ.மீ.
பக்கத்திற்கு : -- 7வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : மருத்துவம்
நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்

**தொடக்கம் :**

நாவரற்சிக்கு சந்தன மாத்திரை

வெள்ளரிவிதைப் பருப்பு
பாரை தங்கு விரை அல்லது
சுக்காங்கீரை விரையாவது, பச்சைக் கற்பூரம்
வாதுமைப் பிசின் வகைக்கு பலம் $\frac{1}{2}$

முடிவு :

பொடியாக வைத்துக் கொண்டு பாக்களவு
தயிரில் குழப்பிச் சாப்பிட ... ... ... றைநாள்
அஞ்சறனாள் மூணரைநாள் சாப்பிடவும்
பத்தியம் மோர்' சோறு வுல் ... ... .... தி
கிரந்திசூலை அரையாப்பு கரப்பான் தீரும்

வேணும்

காலம் :

இல்லை

குறிப்பு :

இதில் சந்தன லேகியம், சந்தன மாத்திரை, தாமரைப் பூதிரா ரோகம், ரோசாப்பூ மாத்திரை, சோப்பு திராவகம், எலுமிச்சம்பழ முரபா, தாது விருத்திக்கு துத்திவிதைச் சூரணம், துளசி சர்பத்து, கொத்தமல்லிச் சூரணம் முதலான பல அரிய மருந்துகள் கூறப்பட்டுள்ளன.



வரிசை எண் : 2565 சுவடி எண்: 1340

## அகத்தியர் வைத்தியம்

ஏடுகள் : 55 கி. எண்ணிக்கை : 5000 அளவு : 30 × 3½ செ.மீ.
பக்கத்திற்கு ; 0—14 வரிகள் ஆசிரியர் : அகத்தியர் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிகப் பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

... ... ... டவுடன் சுக்கிலமுஞ் சுரோணிகமும்
பெருகுஞ் சோபமில்லை யின்னமதிற் சூட்டக் கேளே! — 992
கேள் மகனே புலத்தியனே ... .... ... ...
கெட்டியாய்ச் சொல்லுகிறேன் வங்கப் போக்கை

**முடிவு :**

ஏற்றிடிற் சன்னிதோஷ ... ... டுங்குட்ட ரோகம்
பார்த்திடிற் பரங்கி சூலை பங்கிஷ முதலாயுள்ள
சாத்திக ரோகமெல்லா தானகன்றிடுமே யென்று
போற்றிடிற்நீருமென்றே ... ... ...
பொதிகையன் சொன்னூல் முற்றே — 16

கருணாநிதி சகாயம்

**காலம் :**

இல்லை

**குறிப்பு :**

இதில், உதிரி ஏடுகள் காணப்படுகின்றன. எதுவும் முழுமையாக இல்லை அகத்தியர்-16 தொடக்கம் இல்லை. மற்றொரு நூல் 1005 முதல் 1310 வரை செய்யுட்கள் இடையிடையே ஏடுகளின்றி உள்ளன.

காரீய செந்தூரம், ரச சூலை முறிக்க விஷ்ணு பூபதி முதலானபல தலைப்புகள் உள்ளன,



வரிசை எண் : 2566

சுவடி எண் ; 1341

## வைத்தியத் திரட்டு

ஏடுகள் : 67 கி. எண்ணிக்கை : 2500 அளவு : $25 \times 3\frac{1}{2}$ செ.மீ.
பக்கத்திற்கு : 6—9 வரிகள் ஆசிரியர் : பலர் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிகமிகப் பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

**தொடக்கம் :**

அரத்தை சதகுப்பை திரிகடுகு
வகைக்கு விராகனிடை — 3
அரைத்து அரைப்படி நொச்சிச்
சாற்றில் கலக்கி அமுரித்து வடிகட்டி

முடிவு :

... ... ளை சீலையில் பொட்ட ம் கட்டி முலைப் பாலில்
துவைத்து கண்ணில் பிழிய ... ...
கீளுகா நெல்லிவேரை முலைப்பாலி லரைத்து
கண்ணிலிடப் பூ மாறும் ... ...

காலம் :

இல்லை

குறிப்பு :

இதுவும் உதிரி ஏடுகளைக் கொண்டது.

இதில் கரப்பானுக்கு எண்ணெய், உள்மூலத்துக்கு எண்ணெய், திமிர் வாதத்துக்கு எண்ணெய், எண்ணெய் பதப்பு: சிரங்குக்கு எண்ணெய், பிராணிக்கி மருந்து, கிரந்திக்கு பச்சிலை முதலான பல தலைப்புகள் உள்ளன.



வரிசை எண் : :567 சுவடி எண் : 1342-a

## ஞான வெட்டியான்

ஏடுகள் : 32 கி. எண்ணிக்கை : 2000 அளவு : 3:½×4 செ.மீ
பக்கத்திற்கு : 10—13 வரிகள் ஆசிரியர் : ஞானவெட்டியார் பொருள் : ஞானநூல்
நிலைமை : மிகப் பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

மதியிருந்தும் குமரிவிளை யாடும் வீடு
மரகதத்தோன் செங்கதிரோன் வந்து நாளும்
பதியிருந்து விளையாடு மூலவீடு
பத்திதரும் சித்திதரும் பரம னாதன்
துதிபெறவே நாற்ச்சதிர மேலே நின்று
துலங்குகண பதிவல்ல பையே போற்றி
நிதிபெறவே யெனையீன்ற குருவின் பாதம்
நிகழாம லனுதினமுங் காப்புத் தானே ! — 1

முடிவு ;

குமரகுரு பரனோதுங் குறவஞ்சிக் கேள்வன் தன்னை
சமரச மாகப்படிப்பவர் கேள்ப்பவர்கள் தான்முழுதும்
அமரர்கள் போற்றுங் குமரேசர்க் கென்றும் மடிமையதாய்
தமரொடு வாழ்வார் பின் சாயுச்சிய பதவி சார்பவரே !

முற்றும்

செந்திலாதிபன் துணை
தெட்சிணாமூர்த்தி பாதார விந்தமே கெதி

காலம் :

இல்லை

குறிப்பு :

ஆண்டே என்று தன் தலைவனிடம் வெட்டியான் எனப்படும் வேலையான் ஞானத்தைத்தெளிவாக எளிய நடையில் எடுத்தியம்புவது.

இடையிடையே ஏடுகள் இல்லை. வேறு சுவடி ஏடுகள் இதில் கலந்துள்ளன.



வரிசை எண் : 2568 சுவடி எண் : 1342-b

## ஞானக் குறவஞ்சி

ஏடுகள் : 5 கி. எண்ணிக்கை : 300 அளவு : 31½ × 4 செ.மீ
பக்கத்திற்கு : 10—13 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : ஞானநூல்
நிலைமை : மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்

தொடக்கம் :

விடத்தை யமுதாக வுண்ட வித்தகனார்
விண்ணவர்க்கு மேலாய் நின்றோர்
குடைக்கதிய மான பொருள் திருவர
மாமுனிவருட கொரவர் தோன்றி
சடத்தை யுருப்படுத்த வெனத் தன்னிடமாய்
வந்துதித்த தல்மை கூற

தடக்கமலஞ் சார்ந்ததிரு மலர்மகள்
யெம்பெருமாட்டி சரணந் தானே ! — 1

முடிவு :

சாதிகுலம் மறைப்பருத்த தன்மையெல்லாம் - குறமகளே !
பேதையிலும் பேதையாமே பிறவித்துயர் நீக்கு
நீதிகுரு தன்மமென்ற நிலைக்குறித்தாய் குறமகளே !
ஊரிருந்த மால்திசைவாழி உத்தனுட பதிவாழி !
சீரிருந்த குருநாதன் திருவடிகள் வாழியதே

கோர்வி பாதார விந்தமே கெதி

முற்றும்

காலம் :

இல்லை

குறிப்பு

இது, எமது இலக்கியச் சுவடி எண் 821 / D 1128-ன் வேறாயது. சிற்றிலக்கியத்தில் பேசப்படும் குறவஞ்சி சந்தத்தில் ஞானத்தை உரைப்பது.

இதன் பின்னர், முன்னிரு சுவடிகளின் உதிரி ஏடுகள் 28 காணப்படுகின்றன. முன் சுவடி எண் 1341-லும் இவ்வாருள உதிரி ஏடுகள் உள்ளன.

★ ★ ★ ★

வரிசை எண் : 2569 சுவடி எண் : 1343

## சகல (வைத்திய) நூல்

ஏடுகள் : 153 கி எண்ணிக்கை : 3000 அளவு : 22×3½ செ.மீ.
பக்கத்திற்கு : 6—8 வரிகள் ஆசிரியர் : (அகத்தியர்) பொருள் : மருத்துவம்
நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்

தொடக்கம் :

ஹரி ஓம் நன்றாக

சீருலவும் பொதிகரிசி பாதம் போற்றி
சிவகாமி தாயேபொற் பாதம் போற்றி
ஏருலவும் தந்தைசிவ பாதம் போற்றி
இன்பமுற்ற சித்தர்சிவ பாதம் போற்றி

பேருலவும் நற்சோதி நடனத் தாலே
பெருமையுட சகலனூல் பாடு தற்கு
காருலவும் திருமேனி துதிக்கை யானை
கணபதிசெந் தாமரைதான் காப்புத் தானே ! — 1

முடிவு :

சகல வாய்வுக்குக் கிசாயம்

தி............ முக்கொ ளுஞ்சி
திரமான கொடிவேலி பரங்கிப்பட்டை
...............டனே வாய் விளங்கம்
வளமான சிறுதேக்கு ............

காலம் :

இல்லை

குறிப்பு :

இதில், முதல் 15 ஏடுகள் இதன் அட்டவணை உள்ளது. இடையிடையே ஏடுகள் இல்லை.

இதில், உடும்புலேகியம் மொண்டிச் சிந்து, தாளிசபத்திரிச் சூரணம், கரப்பானுக்கு எண்ணெய், பித்தகாச இருமலுக்கு சூரணம் பெரும்பாட்டுக்குக் காந்த மாத்திரை முதலான பல தலைப்புகள் உள்ளன.



வரிசை எண் : 2570

சுவடி எண் 1344

## அனுபவ வைத்திய நூல்

ஏடுகள் : 196+4 கி. எண்ணிக்கை : 10000 அளவு : $20 \times 3\frac{1}{2}$ செ.மீ.
பக்கத்திற்கு : 10—12 வரிகள் ஆசிரியர் : பலர் பொருள் : மருத்துவம்
நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

வயித்தியம்

தனித்தனி மருந்தின் குணமும், ஒன்றோடொன்று
சேர்ந்தால் மாறும் குணமும் அறிந்து
செய்வது வைத்தியம்

(உம்) மஞ்சள் சுண்ணாம்பு தனித்தனி ஒவ்வொன்றின் குணம். ஒவ்வொன்றும் ஒவ்வொரு வியாதியைக் கண்டிக்கக்கூடியதாக இருக்கிறது.

இரண்டும் ஒன்று சேர்ந்த போது இரண்டின் குணமும் கெட்டு தனித்த வேறொரு குணத்தைக் கொடுக்கக் கூடியதாக மாறி விடுகின்றன.

முடிவு :

இவ்வொழுங்கினால் மூளைக்கு பலம் ஏற்பட்டு அறிவையும் தூய்மைப்படுத்தி ஆயிளையும் பெருக்கிக் கொள்ளச் சாத்தியமாகின்றது.

எனவே, சுவாசக் குழாயின் மூலம் சகல ரோகங்களை நிவர்த்திப்புதற்கும் சாத்தியம் என்பதை வரையப்பட்டது.

காலம் :

டாக்டர் மே. மாசிலாமணியின் 'அனுபவ வைத்திய நூல்' (இரண்டாம் பதிப்பு) தமிழரசு புத்தக நிலையம், 31, வைத்தியநாத முதலித்தெரு சென்னை. சென்னை மீனாட்சி அச்சுக் கூடத்தில் பதிப்பிக்கப்பட்டது.

1945-ம் வருஷம்

விஷயம், தவறாது கூடியமட்டிலும் சுருக்கி எழுதப்பட்டது. 1945-ம் வருஷம் ஆகஸ்ட்டு மாதம் 28-ந் தேதி எழுதி முகிந்தது.

G. வெங்கிடேச வைத்தியர்

குறிப்பு :

இது அச்சுநூலிருந்து சுவடியில் எழுதப்பட்டது.

இதில், பல அறிய வைத்தியங்கள் கூறப்பட்டுள்ளன.

★ ★ ★

வரிசை எண் : 2571 சுவடி எண் : 1345

## அனுபவ வைத்தியம்

ஏடுகள் : 158+2 கி. எண்ணிக்கை : 3000 அளவு : 19½×3 செ.மீ.
பக்கத்திற்கு : 8—10 வரிகள் ஆசிரியர் : பலர் பொருள் : மருத்துவம்
நிலைமை : நல்லநிலை முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

கல்வீரல்

கல்வீரலில் உண்டாகும் வியாதிகள் பல.
அவற்றின் காரணத்தால் காணப்படும் வியாதிகள் பல.

கல்வீரலில் உண்டாகும் வியாதிகளில் முக்கியமாய்
வீங்குவதாலும், இரணத்தாலும், சுருங்குவதாலும்
பலவித வியாதிகள் காணப்படுகின்றன.

முடிவு :

ஒருமணிநேரம் கல்வத்தில் அரைக்க பிளாஸ்த்திரி
யாய் விடும். அதனைத் துணியில் தடவி ஒட்டிக்கும்
போட ஆறிவிடும். உடையாத காலத்தில்
போட உடைந்து விடும்.

காலம் :

இல்லை

குறிப்பு :

இதில், முக்கிய கவனிப்பு இத்துப்பு, தீனிப்பை, மயில்துத்த பஸ்பம், சிறுகுடல் இருதய கமலம், மருந்து செய்யும் விதம் முதலான பல தலைப்புகள் உள்ளன.

இதன் பின்னர் மருத்துவம் எழுதிய ஏடுகள் 16 உள்ளன.



வரிசை எண் : 2572 சுவடி எண் : 1346

## தமிழ் வைத்திய அட்டவணை முதலியன

ஏடுகள் : 243 கி. எண்ணிக்கை : 1000 அளவு : 23 × 3½ செ.மீ.
பக்கத்திற்கு : 10 - 12 வரிகள் ஆசிரியர் : பலர் பொருள் : மருத்துவம்
நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

வீசனம்

வெள்ளைப் பாசானம் வராகனெடை = 2
ரசம் ,, = 2

| | | | |
|---|---|---|---|
| கெந்தகம் | வராகனெடை | — | 2 |
| மனோசிலை | ,, | — | 2 |
| பெருங்காயம் | ,, | — | 2 |
| துருசு | ,, | — | 2 |

முடிவு :

நல்ல முத்து அல்லது சிப்பி வேண்டிய மட்டும்
கல்வத்திலிட்டு சூரத்துப் பன்னீர் விட்டு
நன்றாயரைத்து வில்லை தட்டிக் காயவைத்து
ஓட்டில் வைத்து சீலை மண் செய்து முழப்புடம்
போடவும்.
ஆரினபின் எடுத்து வைத்துக் கொண்டு
ஒரு விராகனிடை பற்பத்துக்கு ஒரு விராகனிடை
த ... ... கம் சேர்த்து அரைத்து வைத்துக் கொண்டு
சாப்பிடவும்

குருவே துணை

காலம் :

இல்லை

குறிப்பு :

இதில், காப்பேட்டின் பின்புறம் மருத்துவம் எழுதப்பட்டுள்ளது. உள்காப்பு எட்டில் மேல்புறம், 'தமிழ் வைத்திய அட்டவணையும், இங்கிலீஷ் முறை நிறைகளுடைய அளவுகளுடைய விபரங்கள் அதன் சம்பந்தமான மருந்துவகைகள்' என்று எழுதப்பட்டுளது

இதில், முதல் 11 ஏடுகளில் ஒரு மருத்துவப் பகுதியும் பின் 111 ஏடுகளில் ஒரு பகுதியிலும், பின் ஏடுகள் ஒரு பகுதியுமாக உள்ளன.

பலவகை மருந்துகள் எழுதியுள்ளன.

★ ★ ★

வரிசை எண் : 2573 சுவடி எண் : 1347

## அகத்தீசர் கர்மகாண்டம்

ஏடுகள் : 47+1 கி.எண்ணிக்கை : 2000 அளவு : 45×3 செ.மீ.
பக்கத்திற்கு : 7—9 வரிகள் ஆசிரியர் : அகத்தியர் பொருள் : மருத்துவம்
நிலைமை : பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்

தொடக்கம் :

பாங்குடன் கிணேசன் பாதம்
　　பரிந்துமுக் குணங்க ளாய
வாகடச் சுவடி யெல்லாம்
　　வகைவகை தொகுத்துப் பார்த்து

முடிவு :

வரிசையாய்ச் சொல்லுகிறேன் கணைக ளேது
　　மாந்தமொடு சுளிதுரப்பு வலிக ளேது
பரிசமாங் கரப்பானொடு பறங்கி யேது
　　பச்சியொடு பறக்கின்ற தோஷ மேது
தெரிசினமாங் கண்களிலே (வரு)வ தேது
　　தீர்க்கமடா சிறுவருக்கு அமுர்த மாகும்
கரிசினமா மின்னூலின் கற்ம்ம தற்மம்
　　காடான மருந்துவகை கணக்கு முற்றே ! — 162

அகத்தீஷ்பரர் அருளிச் செய்த

கற்மம் அனுபோக... !

காலம் :

இல்லை

குறிப்பு :

இதில், மேகராசாங்கத் தயிலம், அப்புரக செந்தூரம், தலைமுழுகத் தயிலம் சயரோகம் வந்த வரலாறு தாளக நீறு, குஷ்டத்துக்குத் தயிலம், வாதம் வந்த வரலாறு, லோக செந்தூரம், உறுவி லேகியம், பித்த கற்மம் தீர்க்க, மண்டையிடிக்குத் திரி, பெண்கள் கெற்ப நோய் வந்த வரலாறு மற்றும் பல தலைப்புகள் உள்ளன.

இது, எமது சுவடி எண் 323-b/D 623-ன் வேறாயது போலும்.

★ ★ ★

வரிசை எண் : 2574

சுவடி எண் : 1348

## மந்திர சாத்திரம்

ஏடுகள் : 69+19 (இடையிடையே வெற்றேடுகள்) கி. எண்ணிக்கை : 1000
அளவு : 23×2½ செ.மீ. பக்கத்திற்கு : 4—6 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை
பொருள் : மாந்திரீகம், மருத்துவம் நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றற்றது
எழுத்து : தமிழ்.

தொடக்கம் ;

ஹரி ஓம்
ஓம் மகா கணபதி அம்சிம் சிவாய நமா
முக்கண்ணுடைய மூச்க வாகனன்
சக்கரை பால்பழந்தா னுனக்கழிப் பேன்
அத்திமுகவா அறுமுகன் தன் மாவெற்றி

முடிவு :

தலைமயக்கம் கிறுகிறுப்பு இவைகள் நிறுத்துவதோடும்
திரேகத்துக்கு றெத்த விற்த்தியும் தாது
புஷ்டியும் கூடிய சீக்கிரம் குடுக்கும்

சாலம் :

இல்லை

குறிப்பு :

இதில், மந்திரங்கள், கொம்பரக்குத் தயிலம், காய்ச்சலுக்கு சன்னிக்கு எண்ணெய், மேகத்துக்குப் பூவரசுக் காய்த் தயிலம், திருமூலர் பாடல் கிரந்திக்கு எண்ணெய், அகத்தியர் பெரும் குழம்பு முதலியன உள்ளன. இடையிடையே வெற்றேடுகள் உள்ளன. பிற்பகுதியில், காலாக்கினி என்னும் பேய்க்குணம், ஒரு நாள், ஒரு மாதம் ஒரு வருஷம் என்று தொடர்ந்து மந்திரங்களும் எந்திரங்களும் உள்ளன.



வரிசை எண் : 2575 சுவடி எண் : 1349

## வைத்தியத் திரட்டு

ஏடுகள் : 83(22+35+26) கி. எண்ணிக்கை : 1000 அளவு : $11\frac{1}{2} \times 2\frac{1}{2}$ செ மீ
பக்கத்திற்கு : 6—8 வரிகள் ஆசிரியர் : பலர் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிகப் பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம்:

ஆடாதோடை சிறுவழு ... ... ... ...
தூதுவளை நன்னாரிவேர் சிற்றா ... ... ...
முட்டி சுக்கு பற்படாகம் - (கோ)
ரைக்கிழங்கு சந்தனம்.

முடிவு :

வகுத்த வேத முறைப்படியே:
முக்கா ... ... ... படியே சிலேற்பன பித்தவாத
முயங்கிமுன் ... ... ... மொன்றாய்க்
சிரையே செய்யு முன் ...

காலம் :

இல்லை

குறிப்பு :

இது மூன்று பகுதிகளாக உள்ளது.

இதில், அத்தி சுரத்துக்கு, மாந்தம் உஷ்ணம், பொருமலுக்கு. 2-ம் பகுதி மூலிகை விபரம், நேத்திர ரோகத்துக்குத் தயிலம் முதலியன. 3-ம் பகுதி பூசணிக்காய் வெட்டறாமல், மாங்கொட்டை முளைக்கும் வித்தை, உச்சாடின விநோதம், பேய் கட்ட கடுக்காய் லேகியம், சூரணம், திலதம், வாழாத பெண்ணுக்கு மற்றும் பல தலைப்புகள் உள்ளன.



வரிசை எண் : 2576 சுவடி எண் : 1350-a

## முனி வாகடம்

ஏடுகள் : 215 கி. எண்ணிக்கை : 7000 அளவு : 33 × 3 செ.மீ.
பக்கத்திற்கு : 6—8 வரிகள் ஆசிரியர் : (அகத்தியர்) பொருள் : மருத்துவம்
நிலைமை ; பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

வாக்குண்டாம் ............... நமக்கு
வாலை சுப்பிரமணியர் துணையுண்டாகவும்
அகஸ்த்திய மாமுனி துணை

கணபதிமந்திரம் ...... ஷபகவான் வாகடம் நாடிபார்க்க
அருள்வையற் கிட்டுபாகம்
அழகிய புருஷர்க் கெல்லாம்
பரிவுடன் வலது பாகம்

முடிவு :

நரிவான பொரியரிசி வைத்தளை
பாங்குடன் நெல்லிக்கா
மரியாநீ மூன்றுதரம் போட்டுக்சொள்ளவும்

குணமாம்

மோரில் வெல்லங்கூட்டிக் குடிக்கவும் அல்லது
காடியில் குடிக்கவும் தயிருமாம்

காலம் :

காளயுத்தி வருஷம் ஆனிமாதம் 17-ந் தேதி சுக்கிரவாரமும் பெற்ற சுபதினத்தில் கொங்கழகிய சம்புந்த மூர்த்தி அய்யன் குமாரன் கனகசபை முனிவாகூடம் எழுதினது.

முற்றும்

குறிப்பு :

ராசலிங்கம் பிள்ளை சுவடி (இது முகப்பேட்டிலேயே உள்ளது). சரியான தலைப்பு காண இயலவில்லை.

இதில், சர்வவியாதியளுக்கும். காச்சலுக்கு, சன்னிவாத சுரம், தந்திரிக, சன்னிக்கி, வெள்ளெழுத்து மாற, தேங்காயுதிர திலதம், இரத்தம் வழிய, கருங்குட்டம், வெண்குட்டம் சொரிகுட்டம், 197, 198, ஆகிய ஏடுகளில் சக்கரங்கள், 214-வது ஏட்டின் உள்ள ஏழுத்துக்கள் என்ன மொழி என்று அறியக்கூடவில்லை.

—OO—

வரிசை எண் : 2577 சுவடி எண் : 1350-b

## சூதமுனியார் அருளிச் செய்தது (50)

ஏடுகள் : 10 கி. எண்ணிக்கை : 300 அளவு : 33 × 3 செ.மீ
பக்கத்திற்கு : 6—7 வரிகள் ஆசிரியர் : சூதமுனிவர் பொருள் : மருந்துவம்
நிலைமை : பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

மூலமுத லாதார முச்சுடராம் பொருளை
முதறிவி னாலறியு முக்கோணப் பொருளை
காலுமது களையுமது காரணமாம் பொருளை
கருத்துணர்வுக் கெட்டாத காட்சிதரும் பொருளை
சூலமுறு நந்தீசர் சூதமுனிக் கன்றுசொன்ன
உபதேச மென்றசுர தகமாம் பொருளை
ஞாலமுற வெவ்வுயிர்க்கும் நடுவில்நின்ற பொருளை
நாதவிந்துச் சிவப்பொருளை நாவி லுணர்ந்திடுவாம் — 1

முடிவு :

அடுப்பிலே வைத்தவுடன் ஐங்கரற்குப் பூசை
அன்பாகச் செய்துகொண்டு அந்தத் தேக்கிலை
கடுக்க யிடித்திடவே நமச்சார மிட்டு
கலப்பில்லாத் தனிச்சாறு மூன்றுபடி யெடுத்து
தொடுப்பாக அன(ல்)மூட்டில் வேலை
சுருக்காகச் சீலைமூன்றுபடி வத்தி பின்பு
வெடுப்பாக யெரியிடுநீ ............ .........
............ ......... சிந்தூர மாமே ! — 35

சிந்தூரந் தனையெடுத்து முன்ன வைத்து
சிவகாமி பூசனையு மற்சனையுஞ் செய்து

காலம் :

இல்லை

குறிப்பு :

இதில், உள்தலைப்புகள் இல்லை, இடையிடையே பாடல் விடுபட்டுள்ளது. இதன் பின்னர் மருத்துவம் எழுதிய ஏடுகள் 4 உள்ளன.

